விதூடகன்—ஓ நண்பரீர்! அச்செல்வமாகிய [1]பழஞ் சோற்றையே நினைந்து துன்புறல் வேண்டா.

சாருதத்தன்—நண்ப! ஆடவனுக்கு வறுமை யானது,

13. [2]சிந்தனை பற்பல உந்துகா ரணமாம்;
நிந்தனை நண்பரால் வந்துறப் புரியும்;
உள்ளிப் பிறர்நனி யெள்ளற்கு ஏதுவாம்;
அகைவேற் றுருக்கொள் பகைமையும் ஆகும்;
மேவற் சுற்றமும் ஏவன் மாக்களும்
சினமுறச் செய்யும்; மனமுறக் கலந்த
காதலி கொடுமையுங் காடுறை வேட்கையும்
போதரப் புரியும்; வீதரும் உள்ளத்து
இன்னுத் தீநனி தின்னுது,
எரிக்குமால் அந்தோ! விரிக்குமாறு என்னே?

---

எள்ளுவர்' என்பதானும். ஒளியின் இன்மையே இருளாதல் போல மகிழ்வின்மையின் முதிர்ந்த நிலையே பெருந்துன்பமாக முடிதலின் "அது மாவின்னல் நல்கும்" என்பதாம். துன்பத் தாற் பற்றப்பட்டவன் தக்க இன்ன தகாதன இன்ன என் பதை உணராஞதலின், "பகுக்கும் உணர்வொழியும்" என்று கூறப்பட்டது. வறுமை யொன்றே காரண காரிய முறையாக நின்று இறப்பிறுதியாகவுள்ள எல்லாத் துன்பங்களேயும் தரு தலான், "துன்பமெலாம் பயக்கு மூலம்" எனப்பட்டது.

[1] விதூடகனுக்குப் பழஞ்சோற்றில் விருப்பம் உண்மை யாற் பொருள் இங்ஙனம் உபசரிக்கப்பட்டது.

[2] சிந்தனை உடலோம்பல் முதலியவற்றிற்குஉரிய உபாயம் ஆராய்தல் முதலியன. விரும்பியதைத் தடுத்தலானும் விரும் பாததைத் தருதலானும் உலகத்தில் ஒருவற்கு மற்றொருவன்

[1]ஆதலின், நண்ப! இல்லுறை தெய்வங்களுக்குப் பூசை செய்தாயிற்று. செல்க. நீயும் நாற்சந்தி கூடுமிடத்துள்ள பிராமி முதலிய தெய்வங்களுக்குப் பலியைக் கொடு.

விதூடகன்—யான் போகேன்.

சாருதத்தன்—எதற்காக?

விதூடகன்—இங்ஙனம் பூசிக்கப்பட்டும் தெய்வங்கள் தங்களுக்கு அருள் செய்திலவாதலின், அத்தெய்வங்களைப் பூசித்தலால் வரும் பயன் யாது?

சாருதத்தன்—நண்ப! அங்ஙனமன்று. இல்லறத்தானுக்கு இது [2]நித்தியகன்மமாகும்.

---

பாற் பகைமை நிகழும்; வறியவனிடத்துக் காரணமின்றி நிகழும். இது பற்றியே வறுமை, "வேற்றுருக்கொள் பகைமையுமாகும்" என்று கூறப்பட்டது. சினமுறச் செய்தற்குக் காரணம் அன்னார்க்கு வேண்டுவன கொடாமையேயாம். காடுறை வேட்கைக்குக் காதலி கொடுமையே காரணம் என்க. இன்னாத்தீ-வறுமைத் துன்பமாகிய நெருப்பு; அது விரைந்து அழித்துவிடின் நன்றும், துன்ப நுகர்ச்சி நெடிதிராதாகலின். விரைந்துயிர் போக்காது எரித்தல் மிக்க துன்பம் தருமாதலின், "தின்னாது எரிக்குமால் அந்தோ" என்று மிகுதுயர்க் குறிப்புக் காட்டப்பட்டது.

[1] யான் வறுமையால் இழிக்கப்பட்டிருத்தலானும், அதனால் வெளிச்சேறற்கு நாணமுடையேன் ஆதலானும் வெளித்தெய்வங்களுக்குப் பலியை நீயே கொடுக்க வேண்டும் என்று சாருதத்தன் விதூடகனை நோக்கிக் கூறியது.

[2] நித்திய கன்மம், செய்யாதவழிக் கேட்டிற்குக் காரணமாதலின் பயனை ஆராயாது இன்றியமையாது செயற்பாலது என்பதாம்

14. [1]பூசனை செயல்முறை பொருந்த நித்தியம்
வாசகம் உடலொடு மனத்தி னுற்செயும்
மாசறும் அன்பர்க்கு மகிழ்ந்து தெய்வங்கள்
நேசமொடு அருளுமால் நினைத்தல் என்னையே.

ஆதலிற் செல்வாயாக. பிராமி முதலிய தெய்வங்களுக்குப் பலியைக் கொடு.

விதூடகன்—ஓ! யான் போகேன். வேறு எவனுவது ஒருவனை ஏவுங்கள். இடப்பக்கத்தில் வலப்பக்கவுருவமும், வலப்பக்கத்தில் இடப்பக்க வுருவமும் தோன்றும் கண்ணுடியின் நிழல்போலப் பிராமணனுகிய எனக்கு எல்லாம் விபரீதமாக முடிகின்றன. மேலும், இம் மாலைக் காலத்து இறுதியில், இவ் விராச வீதியில், விலைமகளிரும், விட சேடர்களும், அரச உறவினருமாகிய இவர்கள் திரிகின்றனர். ஆதலின், தவளையை விரும்புகின்ற கரும்பாம்புக்குப் பெருச்சாளி எதிர்ப்பட்டதுபோல் யான் எதிர்ப்பட்டு அவர்களாற் கொல்லுதற்கு உரியனுவேன். நீங்கள் இங்கிருந்து என்ன செய்வீர்கள்?

---

[1] பயனுராய்ச்சியில்லாத கன்மம் நூலில் விதிக்கப்பட்டது வீணெனின், இன்றியமையாமையை வலியுறுத்தற்கு இச் செய்யுள் எழுந்தது. இது, "தன் கடன் அடியேனையுந் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் அருட்பாசுரப் பொருளைத் தலைக்கண் தாங்கி நிற்றல் அறிக. பொறிகளின் எல்லைக்கு மேற்பட்ட பொருளைப்பற்றி உய்த்துணர முயறலினும், விதியாக உள்ளவற்றைக் கடனுக மேற்கோடலே நன்று என்பதாம்.

சாருதத்தன்—நிற்க. யான் தியானத்தை நிறைவேற்றுகின்றேன். [1]சற்று இருக்க.

(வேடசாலையுள்)

நில். வசந்தசேனே! நில்.

([2]அதன்பின் விடன், சகாரன், சேடன் இவர்கள் பின்தொடர வசந்தசேனை வருகின்றாள்.)

விடன்—வசந்தசேனே! நில்; நில்.

15. [3]ஈதென்னை மேன்மையெலாம்
இரிதரநீ அச்சத்தாற்
பாதநடம் பயின்றொளிரும்
பான்மையதை உந்துகின்றாய்;
காதுவன சரன்தொடரக்
கலக்கமுறு மான்பிணைபோல்
மீதணங்கின் அசைகடைக்கண்
மிகநோக்கி ஓடுகின்றாய்.

---

[1] கணிகை முதலியோர்களின் போக்குவரவு ஒழிந்தபின் போகலாம் என்பது கருத்து.

[2] சாருதத்தன்பாற் காதல் கொண்டு அவனை நோக்கி வரும் வசந்தசேனையை, அவள் விரும்பாதிருக்கும் நிலையில் விடனும் சகாரனும் வலிந்து பற்றப் பின்தொடர்ந்து -கின்றனர் என்பதாம்.

-ல் காரணமாகப் பின்தொடரும் எங்களைக் குறித்து -ல் வேண்டும் என்பான் "ஈது என்னை" என்றான். -மயெலாம் இரிதர எனவும், நடம்பயின் -தாகிய பாதம் எனவும் இயைத்துப் -இரிதரல்-நீங்கல். அணங்கின் அசை -அணங்கு-வருத்தம்; நடுக்கமுமாம்.

[1]சகாரன்—நில்; வசந்தசேனிகே! நில்.

16. [2]தாவல் [3]நடத்தல் [4]தட்டழிந்து ஓடல் என்?
வாலைநீ யருள்க. [5]காலன்நின் பக்கல்
உருஅன் ஒண்டொடி வெருஅது நிற்க.
நெருப்புத் திரளின் உருப்புற வீழ்தரும்
இறைச்சித் துண்டென என்மனங் காமனால்
வெதுப்பப் படுதலை மெல்லியால் உணர்தி.

சேடன்—அம்மே! நில்; நில்.

17. பீலிநிறை வேனில்மயில் போலவுறு பீதி
யால் எனது பக்கலின் அகன்றுபெயர் கின்றாய்;
[6]பாலடவி யுற்றஒரு கோழியிளம் பார்ப்பின்
மாலுறவிரைந்தெனது மன்னன்வரு கின்றான்.

விடன்—வசந்தசேனே! நில்; நில்.

18. வல்லுளியி னாற்பிளக்கும்
மனோசிலையின் முழைபோல
எல்லியலார் செங்குவளை
யினஅரும்பு குழல்சொரிய

---

[1] சகாரன் சொற்கள் பொருளின்மை, முன்னொடுபின் முரணுதல், கூறியதுகூறல், மாறுகொளக்கூறல், உவமைவழு, உலகவிருத்தம், தேயவிருத்தம், நியாயவிருத்தம், நூல்வழக்கொடு மாறுகொள்ளல், ஏதுவின்மை, பயனின்மை முதலிய வழூஉக்களை உடையனவாம். இக்குற்றங்களை இவன் சொற்களில் ஆங்காங்கு உணர்க.

[2] [3] [4] கூறியது கூறல். [5] உலக விருத்தம். மேல்வருவனவற்றையும் இவ்வாறுணர்க.

[6] அடவியின்பால் என்க.

மெல்லியசெவ் வாடைநுனி
வீழ்காற்ருல் மிகஅசையப்
புல்லியநல் ளிளவாழை
போல்நடுங்கிப் போதல்என்னே !"

சகாரன்—நில்; வசந்தசேனிகே! நில்.

19. [1]மதனன் [2]உருவிலி [3]மன்மதன் தன்னை
[4]மயக்கமெற்கு உறுத்த இய்க்குதி யம்ம!
இரவிற் படுக்கையில் இன்துயில் நீக்குதி;
[5]அஞ்சிப் [6]பயத்தால் வஞ்சிநீ [7]தாவுதி;
[8]தட்டழிந்து ஓடுதி; விட்டெனைச் [9]செல்லுதி.
[10]இராவணன் தன்பால் எழில்மிகு குந்தி
தராதலத்து உற்ற தன்மை போல
என்பால் எய்திய இயல்பினை யன்றே.

விடன்—வசந்தசேனே!

20. நங்காயென் கால்வைப்பின் நின்காலின்
வைப்பு நனிசிறக்க
இங்கார் [11]கலுழனைக் கண்டு அஞ்சு
பாம்பின் இவர்தல் என்னே!

---

1 2 3 7 8 9 கூறியதுகூறல்.

4 தனக்கு நேர்ந்த காம நோயையும் உறக்கம் இன்மை யையும் வசந்தசேனையின் குற்றமாக ஏறிடுதல் நியாயவிருத்த மாம்.

5 6 பொருளின்மை. 10 உவமைவழு.

11 "கலுழனைக் கண்டு அஞ்சு பாம்பு" என்னும் உவமை யால் எளிதிற் பிடிக்கத் தக்கவள் என்பது புலனும்.

தங்காது யான்விரைந்து ஏகலை
மேற்கொளிற் சார்பவனன்
மங்காதி ரான்.நிற் [1]றகைதற்கு
[2]உழப்புற்று வந்திலனே.

சகாரன்—பெரியோய்! பெரியோய்!

21. இவளோ, கர்சினைப் பறிக்குங் காமன் கைக்[3]கசை;
வாடல்மீன் உண்போள் ஆடல் மகளே;
இழிவுறும் அவாவினள்; இவள்குடி கேடி;
பிறர்வயப் படாதவள்; விறன்மதன் பேழை;
பரத்தையர் சேரியின் இருத்தலை யுடையாள்;
[4]வேசை; [5]விலைமகள்; ஆசைப் [6]பரத்தையென்று
இவ்[7]வொரு பான்பெயர் யானிட் டழைத்தும்
இன்னுமென் பால்விருப் பியைந்திலள் என்னே!

விடன்—
22. [8]அசைகின்ற ஒண்குழை யானது
உராய அணிகதுப்பை
நசைகா முகர்தம் நகவிரல்
தைவரும் யாழையொப்பாய்!

---

[1] தகைதல்-தடுத்தல். [2] உழப்பு-முயற்சி. [3] கசை-சம் மட்டி; சாட்டையுமாம். [4 5 6] கூறியதுகூறல்.

[7] பதினொரு பெயர் கூறிப் பத்து என முடித்துக் காட்டியது மாறுகொளக் கூறல்.

[8] ஒண்குழை அணிகதுப்பை உராய என்க. கதுப்பு-கன்னம். ஓடுகின்ற வசந்தசேனை அச்சத்தால் அடிக்கடி திருப்பிப் பார்த்தலின் கன்னத்திற் குழை உராய்தலைக் கண்டான் என்க. காமுகர் நகவிரலால் தடவப்படுதலானும் பொதுமையானும் எழில் இன்னிசை உடைமையானும் வசந்த

மிசைமா முகில் ஒலி கேட்டு அஞ்சு
சாரசப் பேட்டின் எனே
இசையாது அணங்கின் தடுமாறிச்
செல்லல்என்? ஏந்திழையே!

சகாரன்—

23. [1] கணகண வென்ன அணிகலன் ஒலிசெயப்
பீடுறும் இராமற்கு அஞ்சி யோடும்
சீலத் திரௌபதி போலச் செல்லல் என்?
மங்கல விசுவாவசுவின் தங்கையாய்த்
தங்கிய சுபத்திரை தன்னை அநுமான்
கவர்ந்தாங்கு ஒப்ப விரைந்து பற்றுவேன்.

சேடன்—

24. [2]மன்னனையுங் கூடி மகிழ்வுறுத்து வாயாயின்,
பின்னை யிறைச்சி பெறுவாய்பன் மீன்களொடு.
மின்னனையாய் இவ்வூண்மிக அளித்தான் தானிறந்த
பின்னும் அவனுடலைப் பேணுமால்நாய்களெலாம்.

விடன்—நங்காய்! வசந்தசேனே!

---

சேனையை யாழ் ஒக்கும் என்பதாம். அணங்கு-அச்சம். விடன் முதலியோர்பால் நாணம் அச்சம் முதலியன இன்றி ஒழுகும் இயல்பமைந்த விலைமகளாகிய நீ என்னைக் கண்டு அஞ்சி ஓடுதல் எற்றிற்கு என்பான் 'செல்லல்என்?' என்றான் என்க.

[1] இச்செய்யுளில் ஆகமவிருத்தம் உண்மை காண்க. ஆங்கு ஒப்பு கூறியது கூறல்.

[2] சேடனைப் போன்ற இழிந்தோற்கு நாயினிடத்து மிக்க மதிப்புண்டு என்பதும், இறைச்சி மீன் முதலிய உணவுகளே சிறந்தன என்பதும் இயல்பாதலின் அவர்கள் பயின்ற பொருள்களே ஈண்டு உவமை முதலியனவாகக் கொள்ளப் பட்டன.

25. [1]விண்ணூர்ந்து இலங்குபன் மீன்போற்
பலவுரு மேவி ஒளிர்
தண்ணூர் இடுப்புத் தடமணி
மேகலை தாங்கமுகம்
எண்ணூர் மனோசிலைச் சுண்ணத்
திலகம் இயைய அம்ம!
நண்ணு நகரதெய் வம்போல்
நடத்தலென் நாமுறவே!

சகாரன்—
26. [2] காட்டிலோர் நரியினை ஒட்டுபல் நாய்போல்
நின்னைக் கவர்வான் உன்னித் தொடர
எங்களை யீர்க்கும் அங்கனாய்! என்மனம்
வேருடன் அரித்து [3]விரைவிற் [4]கடுக
[5]ஒல்லையின் ஓடல்என்? சொல்லுதி யம்ம?

வசந்தசேனை—[6]பல்லவக! பல்லவக! பரபிருதிகே! பரபிருதிகே!

---

[1] ஒளிர் மணிமேகலையை இடுப்புத்தடம் தாங்க, முகம் திலகம் இயைய, நாமுற நகர தெய்வம்போல் நடத்தல்என்? என முடிக்க. நாம்-அச்சம். நகர தெய்வம் என்றதனால் அந் நகரத்தில் இவளினும் சிறந்தார் இல்லை என்பதாம்.

[2] நரி ஈண்டுப் பெண்நரி. அதனைப் புணரத் தொடர்வது ஆண் நரியாகவும், நாய் தொடர்ந்ததுபோல் என்றதனால் இஃது உவமை வழு. சகாரன் இழிகுலத்தானாதலின் அவன் எடுத்தாளும் உவமையும் இழிந்ததாயிற்று.

[3] [4] [5] கூறியது கூறல்.

[6] இவர்கள் பணியாளராவர்.

சகாரன்—(அச்சத்தோடு) ஐய! ஐய! [1]மனிதர்கள்! மனிதர்கள்!

விடன்—அஞ்சவேண்டா. அஞ்சவேண்டா.

வசந்தசேனை—மாதவிகே! மாதவிகே!

விடன்—(நகைப்போடு) மடவோய்! வேலையாட்களைத் தேடுகின்றாள்.

சகாரன்—ஐய! ஐய! பெண்களையா தேடுகின்றாள்?

விடன்—ஆம்.

சகாரன்—நூறு பெண்களாயினும் கொன்று விடுவேன்; யான் சூரன்.

வசந்தசேனை—(யாருமில்லாமையை நோக்கி) ஐயையோ! பரிசனங்களும் விட்டகன்றனரே? இவ்விடத்தில் யானே என்னைப் பேண வேண்டியவளாகின்றேன்.

விடன்—தேடுக. தேடுக.

சகாரன்—வசந்தசேனிகே! [2]பரபிருதிகையையாயினும், [3]பல்லவகனையாயினும், இளவேனிற் காலத்துள்ள ஏனைய எல்லாப் பொருள்களையுமாயினும் கூவி அழை; கூவி அழை. யான் தொடர்ந்து பற்றுங்கால் உன்னைக் காப்பாற்றுபவன் யாவன்?

27. [4]குந்திமகன் தசமுகனும் கூறுசம தக்கினிமுன்
தந்தமகன் விமனும்மின் தனைக்காக்க வல்லுநரோ?

---

[1] மனிதர்க்ள் என்ற அளவில் அஞ்சும் இயல்பினன். தன் வீட்டின்மாத்திரம் ஆரவாரம் உடையானென்பது கருத்து.

[2] பிரபிருதிகை-குயில். [3] பல்லவகம்-தளிர். இவை இளவேனிற்காலத்திற் சிறப்புறுவன.

[4] குந்திமகன் தசமுகன் என்றதும் சமதக்கினி மகன் வீமன் என்றதும் ஆகமவிருத்தங்களாம். துச்சாதனன்

சந்தமலர்க் குழற்கற்றை சரியஇழுத் திப்பொழுதே
முந்துறுதுச் சாதனன்செய் முன்வினையின்
முயல்வேனல்.

ஏடி! பார்க்க; பார்க்க.

28. கைவாளும் கூரியதுன்
கவின்தலையுந் திரும்பியதான்
மெய்யாக அத்தலையை
[1]வெட்டுவனோ? கொல்லுவனோ?
எய்யாது நீயோடல்
இனியமைக. இந்நிலத்தில்
உய்யாறல் உடல்நீக்கம்
உறுங்காலம் நெருங்கியுளான்.

வசந்தசேனை—ஐய! யான் பெண்பாலன்றே?

விடன்—ஆதலால்தான் உயிருடன் இருக்கின்றாய்.

சகாரன்—ஆதலால்தான் கொன்றிலேன்.

வசந்தசேனை—(தனக்குள்) [2]இவன் பொருட்டுச் சாந்தமொழி கூறுதலும் அச்சத்தை விளைக்கின்றதே! ஈதுஎன்னை? நிற்க. இவ்வாறு கூறுகின்றேன். (வெளிப்படையாக) ஐய! என்பாலுள்ள அணிகலன்களுள் எதனையாவது பெற எண்ணம் உண்டா?

---

திரௌபதியை மயிர்பிடித்திழுக்குங்கால் வீமன் முதலியோர் வாளா இருந்தனர். அதுபோல், யான் நின்னை இழுக்குங்கால் என்னைத் தடைப்படுத்துவார் யாருமிலர் என்பதாம்.

[1] வெட்டுவனோ கொல்லுவனோ என்பது கூறியதுகூறல்.

[2] பாம்புக்குப் பால் வார்த்தாலும் அது விளைக்கும் பயன் நஞ்சாதல்போல என்க.

விடன்—வேண்டியதில்லை. நங்காய்! வசந்தசேனே! பூந்தோட்டத்துக் கொடிக்கணுள்ள மலர்கள் பறிக்கத் தக்கன அல்ல; ஆதலின் அணிகலன்கள் வேண்டா.

வசந்தசேனை—அங்ஙனமாயின் இப்பொழுது வேண்டுவது என்னை?

சகாரன்—திருமாலையொத்த என்னை [2]வரபுருடனாகிய [3]மனிதனுக நீ விரும்ப வேண்டும்.

வசந்தசேனை—(சினந்து) [4]சாந்தம்! சாந்தம்! செல்க. இழிசொற்களைக் கூறுகின்றாய்.

சகாரன்—(கைகொட்டிச் சிரித்து) ஐய! ஐய! பாருங்கள்; பாருங்கள். என்னை [5]'வருக; [6]மெலிகின்றாய்; [7]வாடுகின்றாய்' என்று கூறுதலான், இக் கணிகைச் சிறுமி என்பால் மிகவும் காதலுடையளாயினாள்.

---

[1] நின்னை அலங்கரித்துக் கண்டு இன்புறுதலேயன்றி நின் அணிகலன்களைக் களைய விரும்பவில்லை என்பது கருத்து. முழுதும் தரினும் வேண்டா என்பது தோன்ற "அணிகலன்கள்" எனப் பன்மையாற் கூறினான்.

[2] வரபுருடன்-காமுகன்; மணமகன். [3] புருடன் என்று முன்கூறிப் பின்னும் மனிதன் என்றது பொருளின்மையாம்.

[4] கேட்கத் தகாதன கேட்டலால் உண்டாம் பாவம் நீங்குக என்பதாம்.

[5] வசந்தசேனை "சாந்தம் சாந்தம் அபேஹி" என்று கூறியதை, "ச்ராந்தோஸி, க்லாந்தோஸி ஏஹி" என்று தன் மயக்கவுணர்வால் மாறுபடவுணர்ந்து, சகாரன் இவ்வாறு கூறுகின்றான். அபேஹி-போ. ஏஹி-வா. ச்ராந்தோஸி க்லாந்தோஸி-வாடுகின்றாய்.

[6 7] கூறியது கூறல்.

[1]யானோ பிறவூர்களையாவது, நகரங்களையாவது அடைந்தவன் அல்லேன். பெருமாட்டி! ஐயனாகிய விடனது தலையை என் [2]கால்களால் தொட்டுச் சத்தியம் கூறுகின்றேன். நின்னையே இடைவிடாது தொடர்ந்து வந்தமையான் மெலிவுற்றவனாகவும் வாட்டமுற்றவனாகவும் உள்ளேன்.

விடன்—(தனக்குள்) ஆ! இம்மூடன்! "சாந்தம்" என்று சொல்லியதன் பொருளுணராது "வாட்டம்" என்று மாறுபடவுணர்கின்றான். (வெளிப்படையாக) வசந்தசேனே! நின்னால் கணிகையர் நிலைக்குத் தகாத சொற்கள் கூறப்பட்டன. பார்க்க.

29. அணியிழாய் வரைவின் மகளிர்தம் வாழ்க்கைக்கு
அருந்துணை யிளைஞரென் றுணர்தி.
கணிகையாம் நீநல் [3]வழியிடைத் தோன்றிக்
காணுபூங் கொடியினை யொப்பாய்!
தணிவிலாக் காம வுடலினைப் பொருட்குத்
தரும்விலைப் பொருளெனத் தாங்கி

---

[1] வாடுதற்கு நிமித்தம் வேறு இன்று என்பதாம்.

[2] கைகளால் தொட்டு என்றுதல், விடனது கால்களை என் தலையால் தொட்டு என்றுதல் கூறற்பாலதனைக் கால்களால் தொட்டு எனக் கூறியது ஒழுங்கின்மை.

[3] வழிக்கண் உண்டாகிய பூங்கொடியை ஒப்பாய் என்றதனாற் பூஞ்சோலைக்கண் உண்டாகிய கொடியைப்போல் ஒருவற்கு உரியளல்லள் என்பதும், வழிச்செல்வோர் எல்லாரானும் பொதுவாக மலர் முதலியன கொள்ளப்படுதல் போல் இவள்பால் அடைவோர் எல்லாரானும் இவள் நலம் நுகர்தற்கு:உரியதாம் என்பதும் புலனாதல் அறிக.

நணியதானல்லாய் விருப்பொடு வெறுப்பு
நாடிநீ சமமெனக் கோடி.

30. அந்தணனும் அறிஞனுந்தாழ் குலத்துதித்த
அறிவிலனும் தோய்வர் வாவி;
கொந்தணவுங் கொடிவளைதல் மயிற்கன்றி
வாயசமுங் கூடக் கூடும்;
முந்துறுமுக் குலத்தவர்போற் பிறர்கடத்தற்கு
உரியதுமாம் மொழியுந் தோணி.
அந்[1]தடம்பூங் கொடிநாவா யனையைநீ
யாவரையும் அடைதற் பாலாய்.

வசந்தசேனை- [2]குணமன்றோ காதற்குக் காரணம். வலிந்துபற்றல் காரணமன்று.

சகாரன்-ஐய! ஐய! பிறப்பினாலேயே பிறர்க்குரியள் ஆகிய இவள் காமதேவாயதனம் என்னும் பூஞ்சோலை யிற் கண்டதுமுதல் வறியவனாகிய சாருதத்தன்பாற் காதல் உடையளாய் என்னை விரும்புகின்றாளில்லை. அச் சாருதத்தன் இல்லம் இடப்பக்கமுள்ளது. நம் கை களினின்றும் இவள் நழுவிவிடாதபடி ஐயன் செய்தல் வேண்டும்.

---

[1] தடம், கொடி, நாவாய் அனையை என்றதனால், யாவர்க்கும் உரிய பொதுமகள் என்பது போதரும்.

[2] காதலும் வலிந்துபற்றுதலும் ஒன்றுக்கொன்று முரண் பட்டனவாம். குலமகளிர்க்குக் குணம்நோக்கிக் காதல்செய் தல் இயல்வதன்று; என்போன்ற விலைமகளிர்க்குக் குணம் நோக்கிக் காதல்செய்தலும் அக்குணமுடையார்க்கு உரிமை யாதலும் பொருந்துவனவாம். ஆதலின், "யாவரையும் அடைதற்பாலாய்" என்று கூறியது பொருந்தாது என்ப தாம்.

விடன்-(தனக்குள்) அறிவிலான்; யாது [1]சொல்லத் தகாததோ அதனையே கூறுகின்றான். பெருமை பொருந்திய சாருதத்தரையா வசந்தசேனை காதலித்தாள்! "[2]இரத்தினம் இரத்தினத்தோடு கூடி விளங்கும்" என்னும் இது நன்கு உணர்ந்து கூறப்பட்டது. ஆதலின், எய்துக. இம்மடவோனால் யாதுபயன்? (வெளிப்படையாக) [3]கானீன! வாணிகத் தொழிலையுடைய அச் சாருதத்தரது இல்லம் இடப்பக்கத்திலா இருக்கின்றது?

---

[1] சொல்லத்தகாதது சாருதத்தனில்லம் இன்ன இடத்தில்என்பது. அதனை இவளறிந்தால் விரைந்து அவ் விற்கண் புகுவாள் என்பது கருத்து.

[2] இரத்தினம் இரத்தினத்தோடு கூடி விளங்கும் என்றதனால் புருடரத்தினமாகிய சாருதத்தன் பெண்மணியாகிய வசந்தசேனையோடுகூடி இன்புறல் தக்கதே என்பது புலனும்.

[3] கானீனன்-(மணஞ்செய்யப்படாத) கன்னிகை புதல்வன். அரசன்மாமனுக்கு மணஞ்செய்யப்படாத கன்னியிடத்துப் பிறந்தவனாதலின் சகாரன் கானீனன் ஆயினான். 'காணேளிமாத:' என்னும் பாடம் இப்பொருளைக் குறிப்பதாம். 'காணேளி பிராத:' என்றும் மூலபாடம் உண்டு. அதற்கு அரசனுடைய மணஞ்செய்துகொள்ளப்படாத காமக்கிழத்திக்கு உடன்பிறந்தான் என்று பொருள் கோடல் வேண்டும். எங்ஙனமாயினும் அரசனுக்கு மைத்துனனாவன் என்பது போதரும். சாஹித்யதருப்பணத்தில் சகாரன் இலக்கணம் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. "மதம், மானம், அறிவின்மை, இழிகுலப்பிறப்பு, பொருளுடைமை, காமக்கிழத்தியின் உடன்தோன்றல், அரசற்கு மைத்துனனாதல் இவையுடையான் சகாரனாவான்."

சகாரன்-ஆம். இட்ப்பக்கத்தேதான் அவன் வீடுள்ளது.

வசந்தசேனை-(தனக்குள்) ஆச்சரியம்! இடப்பக்கத்தே அவர் இல்லம் உள்ளதென்பது உண்மையே. காதற்கிழவனைக் கூட்டுவித்தலால், இக் கொடியவன் இழைத்த தீமையும் நன்மையாயிற்று.

சகாரன்-ஐய! ஐய! பேரிருளில், உழுந்துக்குவியலுட் புகுந்த [1]மையுருண்டைபோலப் பார்த்திருக்கும் பொழுதே வசந்தசேனை மறைந்துவிட்டாள்.

விடன்-அம்ம! இருள் வலியது; அதனானன்றே,

31. [2]ஒளியிடைப் பரந்துசென் றெல்லை யெய்திய
நளியிருட் புகுதலில் தடையை நண்ணுமென்
களிவிழி யிமைப்பில காணுங் காலையும்
முளைதரும் இருளினுன் மூடல் போன்றவே.

32. புல்லிருள் எனதுடல் பூசல் போலும்விண்
வல்லையின் அஞ்சனம் வழங்கல்போலுமால்
நல்லன செய்கிலார் [3]புணர்ப்பின் நண்ணிய
அல்லுறு மென்விழி யவமுற் றுள்ளவே.

சகாரன்-ஐய! ஐய! வசந்தசேனிகையைத் தேடுகின்றேன்.

---

[1] நிறம் கருமையில்லாமையால் வசந்தசேனையை மையுருண்டையாக உவமித்தது உவமைவழு.

[2] சென்று புகுதலால் நண்ணும் விழியென முடிக்க. நளியிருள்-திணிந்த இருள். இல்லத்தின் அருகில் அதன் நிழல் மிகுதியால் இருள் மிக்கதென்பது கருத்து.

[3] இன் ஒப்புப்பொருளில் வந்தது.

விடன்—கானீன! நீ அறிகின்ற அடையாளம் யாதேனும் உண்டோ?

சகாரன்—ஐய! ஐய! அ:து எத்தகையது?

விடன்—அணிகலன்களின் ஓசையாதல், கூந்தலின் இயற்கை மணத்துடன் கூடிய மாலைமணமாதல் அவ் அடையாளமாகும்.

சகாரன்—[1]மாலைமணத்தைக் கேட்கின்றேன். இருள் நிரம்பிய மூக்கினாலோ அணிகலன்களின் ஓசையை நன்கு வெளிப்படையாகக் காண்கின்றேனில்லை.

விடன்—[2](மறைவாக) வசந்தசேனே!

33. நீர்தங்கு மேகத் திடைக்கண்
மறைந்தமின் னேர்தரநீ
கார்தங்கு முன்னிரு ளிற்கட்
புலனிற் கரந்தனையால்.
தார்தங்கும் இம்மண மும்நூ
புரத்தின் தனியொலியும்
சூர்தங்கு நீயுளை யென்றே
குறிப்பிற் றுலக்குறுமே.

---

[1] மூக்கினால் நுகரத்தக்க மணத்தைக் கேட்கின்றேன் என்றதும், செவியினாலறியத்தக்க ஓசையை மூக்கினாற் பார்க்கின்றேன் என்றதும், மண்ணைமறைக்கும் இருள் மூக்கை மறைத்ததென்றதும் உலகவிருத்தங்களாம்.

[2] 'ஜநாந்திகம்' என்று முதனூல் கூறும். திரிபதாகை யாகச் செய்யப்பட்ட கையால் ஒருவனை மறைத்து அவை யோருணரும்படி மற்றொருவனோடு மறைவில் உரையாடல் இதன் இலக்கணம்.

வசந்தசேனே! கேட்டனையா?

வசந்தசேனை—(தனக்குள்) கேட்டேன். கருத்தையும் உணர்ந்தேன். [நிருத்தத்தாற் சிலம்புகளைக் கழற்றி மாலைகளையும் போக்கிச் சிறிது நடந்து கையினால் தடவிப் பார்த்து] அம்ம! சுவரைத் தடவுதலான் அறியப்பட்டதன்றே இப் பக்க வழி. கையுறுத்தலால் வீட்டின் வாயில் வழி அடைக்கப்பட்டதாக உணர்கின்றேன்.

சாருதத்தன்—நண்ப! தியானத்தை நிறைவேற்றினேன். ஆதலின் இப்பொழுது செல்க. பிராமி முதலிய தெய்வங்களுக்குப் பலியைக் கொடு.

விதூடகன்-ஓ! யான் போகமாட்டேன்.

சாருதத்தன்—அந்தோ!

34. இல்லாமை யாலொருவன் சொல்வழியின்
மனைவிமக்க ளிசைவா ரல்லர்;
பொல்லாமை பலவிளையும்; அன்புமிக
நட்டோரும் புறக்க ணிப்பர்;
புல்லாது வலிகுறையும்; ஒழுக்கமெனும்
மதியொளியும் பொன்றும் அந்தோ!
ஒல்லாது பிறர்புரியுந் தீவினையும்
அவன்செயலா உலகங் கொள்ளும்.

35. பொருளிலான் தனைக்கூடல் அவனோடு
மொழிபகர்தல் புரியார் யாரும்;
பரிவிலாத் தனிகர்மனை நலங்குறித்துச்
சென்றக்காற் பார்ப்பா ரெள்ளி;
உருவிலாக கந்தையுடுத் துவன்;நாணி
உடையார்க்கண் டொதுங்கிச் செல்வன்;

[1]திருவிலா மைம்மிகவும் இழியாரும்
பாதகமாச் செப்ப லாமால்.

36. [2]நல்குரவே! நினைக்குறித்து
நானிவ்வா றயர்வுறுவேன்:
மல்கியநட் புரிமைகொடு
வாழ்கின்ருய் என்னுடலில்.
புல்கியநீ யிதெனதென்
றெண்ணுறுமப் பொருண்முடிபை
அல்கியயான் உடனீப்பின்
யாண்டடைவாய் இனியென்றே.

விதூடகன்-(நாணத்துடன்) ஓ! நண்பரே! யான் போகவேண்டுமாயின், எனக்குத் துணையாக இவ் இரத னிகை என்பாளும் வரல் வேண்டும்.

சாருதத்தன்-இரதனிகே! மைத்திரேயனைத் தொடர்ந்து செல்.

சேடி-ஐயன் கட்டளைப்படியே,

விதூடகன்-ஏடி! இரதனிகே! [3]பலியையும் விளக்கினையும் எடுத்துக்கொள். யான் வாயிற் கதவைத் திறக்கின்றேன். (அங்ஙனம் செய்கின்ருன்.)

---

[1] திருவிலாமை-வறுமை.

[2] நல்குரவே என்னையொத்த வறியவன் உலகில் ஒருவனும் இல்லை. ஆதலின், உனக்கு மிக்க உரிமையுடைய என்னுடல் ஒழியின், இத்தகைய நல்லிடம் வேறு கிடைக்கப் பெருமல் வருந்துவாயென்று நின்னைக்குறித்து யான் வருந்துவல் என்பது கருத்து.

[3] பூசைக்குரிய உபகரணங்கள்.

வசந்தசேனை-எனக்கு அருள்புரிதற்கே போலும் வாயிற் கதவு திறக்கப்பட்டது. ஆதலிற் புகுகின்றேன். (பார்த்து) ஐயோ! ஐயோ! ஈதென்னை? விளக்கு!(ஆடை நுனியால் விளக்கை அவித்து உட்புகுந்தாள்.)

சாருதத்தன்-மைத்திரேய! ஈதென்னை?

விதூடகன்-வாயில் வழி திறக்கப்பட, அவ்வழி வந்த திரண்ட காற்றால் விளக்கு அவிந்தது. ஏடி! இரதனிகே! நீ வாயில் வழியே புறப்படு. யானும், நான்கு வாயில்கள் கூடும் உள்ளிடத்திருந்து தீபம் ஏற்றி வருவேன். (என்று போகின்றான்)

சகாரன்-ஐய! ஐய! வசந்தசேனிகையைத் தேடுகின்றேன்.

விடன்-தேடு; தேடு.

சகாரன்-(அங்ஙனஞ்செய்து) ஐய! ஐய! அவளைப் பிடித்துவிட்டேன். பிடித்துவிட்டேன்.

விடன்-மடவோய்! யானன்றே.

சகாரன்-ஐயன் இவ்விடத்தினின்றும் பெயர்ந்து ஒரு பக்கத்தில் இருக்க வேண்டும். (மீண்டும் தேடிச் சேடனைப் பிடித்துக்கொண்டு) ஐய! ஐய! பிடித்து விட்டேன்; பிடித்துவிட்டேன்.

சேடன்-பெருமானே! நான் சேடன்.

சகாரன்-[1]இவ்விடத்தில் ஐயன், இவ்விடத்திற் சேடன் ஐயன் சேடன்; சேடன் ஐயன். இனி நீங்கள்

---

[1] மந்தவுணர்வுடையார்க்குஒருபொருள் நினைவிற்பதிதல் அப்பொருள்பற்றிய சொல்லைப் பலமுறை கூறுதலானும்.

இருவரும் (என்னுற்குறிப்பிடப்படும்) ஒரு பக்கத் திருத்தல் வேண்டும். (மீண்டும் தேடி இரதனிகையைக் கூந்தலிற் பற்றி) ஐய! ஐய! இப்பொழுது வசந்த சேனிகையைப் பிடித்து விட்டேன், பிடித்துவிட்டேன்.

37. மன்னுமிவ் விருளின்கண் மறைந்து சென்றுதார்
துன்னுநன் மணத்திஞல்தோன்றும்நங்கையை
முன்னு [1]சாணக்கியன் முயல் திரௌபதிக்
கன்னியைப் பற்றல்போற் [2]கதுப்பிற் பற்றினேன்.

விடன்-

38. இளமையின் செருக்கிஞல் இயைந்து நற்தலத்து
உளஞெரு மகன்தனை யுளங்கொள் மங்கைநீ
தளமலர் நிறைவிஞற் றகைமை சான்றநல்
அளகமீண் டிழுப்புண அவல முற்றனை.

சகாரன்-

39. [3]சிறுமிநின் தலைக்கண் உறுங்குழல் தன்னைக்
கூந்தலைக் கூழையைப் போந்தியான் பற்றலின்,
சங்கரன் சிவனைச் சம்புவை யாதல்

அதுபற்றி 'ஐயன் சேடன்'' என மீண்டும் மீண்டும் கூறுவாஞயினன். இங்ஙனம் விட சேடர்களின் உருவங்களைப் பகுத்துணர்தலினுற்போந்த பயன் யாதுமின்ருதலின் இது பயனில்கூற்ரும்.

[1] சாணக்கியன் திரௌபதியைப் பற்றல்போலென்றது இதிகாசவிருத்தம்.

[2] கதுப்பு-கூந்தல்.

[3] இதன்கட் கூறியது கூறல் வெளிப்படை.

பொங்கர வணிந்த [1]புராரியை யாதல்
அரற்றிக் கதறுக; அழுக; புலம்புக.

இரதனிகை-(அச்சத்துடன்) ஐயன்மாராகிய நீங்கள் என்ன செய்ய முற்பட்டீர்கள்?

விடன்-கானீன! குரலொலியின் ஒழுங்கு வேருகத் தோன்றுகிறதே!

சகாரன்- ஐய! ஐய! தயிரின் மேலாடையை விரும்புகின்ற பூனை, குரல்வேற்றுமை செய்தல்போல் இத் தேவடியாள் மகள் குரல்வேற்றுமை செய்கின்ருள்.

விடன்-குரல்வேற்றுமை செய்தாளா? ஆ! ஆச்சரியம்! அன்றி, இதன்கண் வியப்பென்னை?

40. [2]நாடக வரங்கத்தின் நண்ண லானும்மேம்
பாடுறு கலைகளின் பயிற்சி யானும்பல்
[3]கூடகப் புலத்தினும் குரலின் வேற்றுமை
யாடலின் இவள்வலி யண்மி ஞளரோ.

[வந்து]

விதூடகன்- ஓ! ஓ! வேள்வியின் நிமித்தம் கொலைப்படுத்தக் கொண்டு வரப்படும் ஆட்டின் இரு

---

[1] சிவபெருமானைக் கூவியழைத்தாலும் விடேன் என்பதாம்.

[2] அரங்கம் நண்ணல், கலைப்பயிற்சி, வஞ்சகலப்புலமை ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றும் குரல்வேற்றுமைப் பயிற்சிக்குக் காரணமாகுமெனின், இவ்வெல்லாம் ஒருங்குடைய இவள், குரலை வேற்றுமைப்படுத்துதலில் வியப்பென் என்பதாம்.

[3] கூடகப்புலம்-வஞ்சகஞானம்.

தயம்போல முன்னிரவில் வீசும் இளங்காற்ருல் விளக்கு மிகவும் நடுக்க முறுகின்றது. [இரதனிகை யின் பக்கலெய்தி அவளைப் பார்த்து] ஏ! இரதனிகே!

சகாரன்—ஐய! ஐய! மனிதர்கள். மனிதர்கள்.

விதூடகன்—மாட்சிமிக்க சாருதத்தர் வறியவராக இருத்தலால், இப்பொழுது அவரில்லத்தின்கட் பிற மனிதர்கள் புகுகின்றனரே! இஃது அறமாமா? தகுதியாமா?

இரதனிகை—ஐய! மைத்திரேயரே! எனது மானக் கேட்டைப் பாருங்கள்!

விதூடகன்—[1]இம் மானக்கேடு உனக்கோ? அன்றி எங்களுக்கோ?

இரதனிகை—உங்களுக்கேயாம்.

விதூடகன்—ஈதென்ன? வலிந்து பற்றுதலா?

இரதனிகை—ஆம்.

விதூடகன்—உண்மையாகவா?

இரதனிகை—உண்மையாகவே.

விதூடகன்—(சினத்தோடு விறகுக் கழியை உயரத் தூக்கி) இது செய்யலாகாது. ஓ! தனக்குரிய இடத்தி லிருக்கின்ற [2]நாயும் வன்மையுடையதாகும். அந்தண

---

[1] பணியாளருக்குச் செய்யப்படும் மானக்கேடு அவர் தம் தலைவரையே சாருமென்பது கருத்து.

[2] பிறப்பான் இழிந்த நாயும் தன்னிடத்தி லிருக்குங்கால் ஆங்கு வரும் பிற வன்மை மிக்க பிராணிகளையும் வெல்லு

ணுகிய யானே அதனினும் உயர்ந்தவன். ஆதலின், நம் போன்றூர்களது ஊழ்வினைபோல் வக்கிரமான இவ் விறகுக்கழியால், உலர்ந்த மூங்கிலைப் பிளத்தல்போற் கீழ்மகனுகிய உனது தலையைப் புடைப்பேன்.

விடன்—மகாப்பிராமண! பொறுத்தருள்க. பொறுத் தருள்க.

விதூடகன்—[விடனை நோக்கி][1] இச்செயலில் இவன் குற்றம் புரிந்தவனல்லன். (சகாரனை நோக்கி) இவ னன்றே இக்கொடுஞ்செயல் இழைத்தவன். ஏட! ஏட! [2]மன்னவன் மைத்துன! [3]சமத்தானக! [4]கொடியோய்! [5]கூயவ! இது தகுமா? மாட்சி மிக்க ஐயர் சாருதத்தர் வறுமையுற்றுளாராயினும், அவர் [6]உயர்குணங்களால் உச்சயினீ நகரம் அலங்கரிக்கப்படவில்லையா? எதற் காக அவர் இல்லத்துட் புகுந்து ஏவல் மகளிர்க்கு இத்தகைய துன்பஞ் செய்கின்றனை?

---

மெனின், அந்தணனுகிய யான் ஈண்டு யார்க்கும் அஞ்சேன் என்று கருதினன் என்பதாம். இவ் வெடுத்துக்காட்டால் விதூடகனது கல்வியறிவின் இயல்பு புலனுகும்.

[1] இச்செயல்-இரதனிகையின் கூந்தலிற்பிடித்திழுத்தல்.

[2] [3] [4] [5] இவை முறையே இழிபிறப்பையும், அவன் பெயர் தன்னுல் அறியப்பட்டது என்பதையும், தகாதன செய்பவன் என்பதையும், மக்களுள் தாழ்ந்தோன் என்பதை யும் புலப்படுத்துவன.

[6] சாருதத்தருடைய கொடைமுதலிய உயர்குணங்க ளாலேயே உச்சயினீ நகரம் சிறப்புற்று விளங்குகின்றது என்பதாம்.

41. [1]இழிவுநல் குரவிஞல் இயைவ தன்று பொன்
ஒழிவுறும் வறியனென் றூழிற் குண்டுகொல்!
அழிவறு செல்வஞ யார்ந்துஞ் சீலத்தின்
வழுவினன் எனினவன் வறுமை யாளனே.

விடன்-(நாணத்துடன்) அந்தணர்பெரும! பொறுத்தருள்க. பொறுத்தருள்க. [2]வேற்ருள் என்னும் எண்ணத்தாலன்றே இது செய்யப்பட்டது. [3]செருக்காலன்று. பார்க்க.

கலிவிருத்தம்

42. காமமிக் கவளையாங் கருதித் தேடினேம்.
விதூடகன்-இவளா?
விடன்-[4]பாவம் விலகக்கடவது.
[5]மாமைசால் [6]இளமைதன் வயத்தின்எய்தினுள்.
ஏமுறும் அவள்மறை வெய்த மற்றவள்
ஆமிவ ளெனநினேந் ததன்ம மெய்தினேம்.

எங்ஙனமாயினும் இச்சிறந்த மனவமைதியை மேற்கொள்ளல் வேண்டும். (என்று வாட்படையைப் போக்

---

[1] இச்செய்யுளின் பின்னிரண்டடிகளாலும் சகாரன் அரசன் மைத்துனஞய்ச் செல்வமுடையவஞயிருப்பினும் ஒழுக்கம் தவறியவஞகலின், அவனே வறுமையாளன் என்பது குறிப்பிற் புலப்படுவதாம்.

[2] வேற்ருள் என்றது வசந்தசேனையை.

[3] செருக்கு—செல்வக்களிப்பு.

[4] இரதனிகையை வசந்தசேனையாக நினைந்து செய்த பாவம் விலகக்கடவது என்பதாம்.

[5] மாமை-அழகு. [6] இளமையைத் தன்வயமாகப் பயன்படுத்துபவள்-கணிகையாகிய வசந்தசேனை.

கிக் கூப்பிய கைகளையுடையவனைப் பாதங்களில் வீழ்கின்றான்.)

விதூடகன்—பெரியீர்! எழுக. எழுக. யான் அறியாமற் பழித்துரைத்தேன். இப்பொழுதோ [1]உண்மையை அறிந்து கொண்டமையாற் [2]பொறுக்கவேண்டுகிறேன்.

விடன்—தாங்களன்றே இந்நிகழ்ச்சியிற் பொறுக்கவேண்டியவர்கள். ஆதலின், ஓர் [3]உறுதி செய்வதாயின் எழுந்திருப்பேன்.

விதூடகன்—தாங்கள் (விரும்பியதைச்) சொல்லவேண்டும்.

விடன்—இந்நிகழ்ச்சியைப் பெருமான் சாருதத்தர்க்குச் சொல்லுவதில்லையென்றால் எழுந்திருப்பேன்.

விதூடகன்—சொல்லமாட்டேன்.

விடன்—

43. மாண்மிகு மறையவ மனத்திற் போந்தவிக்
கேண்மையென் தலைக்கொளுங் கிழமை
பூண்டுளேன்—
வாண்மலி கரத்தினேம் எனினு மற்றெமைப்
பூண்மிளிர் [4]குணப்படைப் பொருது வென்றனை

---

[1] குற்றமின்மையாகிய உண்மை யென்க.

[2] என் பழிப்புரையைப் பொறுக்கவேண்டும் என்பதாம்.

[3] உறுதி - விருப்பத்தை நிறைவேற்றுவதாகக் கூறும் சூளுறவு.

[4] குணங்களாகிய படைகளால் வென்றனை யென்பதாம்.

சகாரன்–(பொருமையோடு) ஐய! எதற்காக இச் சிறு பையலுக்கு எளிமையைப் புலப்படுத்தும் வணக்கம் புரிந்து பாதங்களில் வீழ்கின்றீர்கள்?

விடன்–அஞ்சுகின்றேன்.

சகாரன்–தாங்கள் எதற்கு அஞ்சுகின்றீர்கள்?

விடன்–அச் சாருதத்தருடைய குணங்களுக்கு.

சகாரன்-எவன் இல்லத்திற் புகுந்தால் உண்ணத் தக்கது ஒன்றும் கிடைக்கமாட்டாதோ அத்தகைய சாருதத்தன்பால் உள்ள குணங்கள் யாவை?

விடன்–இங்ஙனம் சொல்ல வேண்டா.

44. [1]அண்ணல் நம்மனோர்க் களித்தலான்
மெலிவினை யடைந்தான்;
எண்ணு செல்வத்தான் எவனேயு
மிழிவுசெய் திலனல்;
நண்ணு நீள்வெயிற் காலத்தில்
நல்லநீர்த் தடம்போல்,
உண்ணும் வேட்கையை மக்களுக்கு
ஒழித்தலான் உலர்ந்தான்.

---

[1] வேனிற்காலத்து நறுநீர்த் தடாகம் இடைவிடாமல் மக்கள் பலர் உண்ணுதலால் நீர்வற்றி வருவாயின்றிக் குறைதல்போல, உலகத்து மக்கள் பலரும் நாள்தோறும் கொள்ளக் கொடுத்து மேற்பொருள் வருவாயின்றி ஊழ்வலியாற் சாருதத்தர் வறுமையுற்றிருத்தல் இழிவன்று; மேன்மையேயாம் என்பது கருத்து.

சகாரன்-(சினத்தோடு) [1]கருப்பதாசிபுத்திரனாகிய அவன் யார்?

45. [2]திண்ணியன் வீரன் பாண்டுபுத் திரனாச்
செப்புமச் சுவேதகேதுப்பேர்
அண்ணலோ? இராதை மக்களாம் ஒருப.:
தானனன் இந்திர தத்தன்
எண்ணுமிங் கிவரு ளொருவனோ? இராமன்
இசைவினாற் குந்தியின் வயிற்றில்
நண்ணிய அசுவத் தாமனோ? தருமன்
நல்கிய சடாயுவோ? புகல்வாய்.

விடன்-மூட!பெருமைபொருந்திய சாருதத்தரன்றே இவர்.

46. எளியவர்க் கெல்லாம் அளிகொடை முதலிய
பலவுயர் தன்குண பலத்தான் வணங்கிய
திருமிகு கற்பக தருவே யுலகிற்
பொருந்திய நல்லோர்க் கருந்துணை
வாழ்க்கையன்;

---

[1] பிறப்பினாலேயே அடிமைப்பெண்ணின் மகன் என்பதாம்; இஃது இழிவு பற்றியது.

[2] சுவேதகேது உத்தாலகன் புதல்வன்; பாண்டுவின் புதல்வனல்லன். ஒருபஃதானனன்-பத்துமுகங்களையுடைய இராவணன். இராவணனும் இந்திரதத்தனும் இராதையின் புதல்வரல்லர்; இந்திரதத்தன் பெருங்கதையிற் கூறப்படும் ஓர் அரசன். இராமன் குந்தியின் கணவனல்லன்; அசுவத்தாமா அவர்க்குப் புதல்வனல்லன். சடாயு தருமன் புதல்வனல்லன் இச்செய்யுட்பொருள் முழுதும் புராணவிருத்தம்.

கலைபயில் அறிஞர்தம் நிலையளந் துணர
உற்ற [1]கண்ணாடி; பற்றுநற் செய்கைக்கு
ஒல்லுநற் [2]கட்டளைக்கல்லே; ஒழுக்கமாம்
படுகரை கடவாக் கடலே; பலர்க்கும்
ஆதர வானோன்; நோதர யாரையும்
இழிவுறக் கருதான்; பழிதபு மக்கட்கு
உளவுயர் குணனெலாம் ஒளிர்தரு நிலயம்;
உயர்கண் ணோட்டமும் அயர்வறு வண்மையும்
துணிபொரு ளாக்கொளுந் தூயோன்; இன்ன
அணிதரு பன்னலம் அமைதர லானவன்
ஒருவனே உலகில் உயிருடன் என்றும்
மருவிச் சிறந்து [3]வாழ்வோன்; மற்றையோர்
அயிர்ப்பில் துருத்தியின் உயிர்ப்புடையோரே.

ஆதலின், இவ்விடத்தினின்றும் செல்வோமாக.

---

[1] கண்ணாடி தன் எதிர்ப்பட்ட உருவத்தைத் தன்னுள் அடக்கிக் காட்டுதல் போலச் சாருதத்தன் தன் எதிர்ப்படும் அறிஞரின் அறிவு நிலையை மனத்தான் அளந்து கண் முதலிய உறுப்புக்களான் வெளிப்படுத்துக் குறிப்பிற் காட்டுதலின், இவன் "கலைபயி லறிஞர்தம் நிலையளந்து உணர உற்ற கண்ணாடி" யாவான் என்பதாம்.

[2] கட்டளைக்கல்-உரைகல். இவன் மேற்கொள்ளுஞ் செயலெல்லாம் நல்லன எனவும், இவனாற் கொள்ளப்படா தன எல்லாம் தீயன எனவும், உலகம் அறிந்துகொள்ளற்கு உரைகல் போல்வான் என்பது கருத்து.

[3] இவன் கொடை முதலிய உபகாரச் செயல்களால் உலகத்துப் பலர் வாழ்தலின் இவன் ஒருவனே என்றும் உயிருடன் வாழ்பவனாவான்; மற்றையோர் உயிருடனிருந் தும் பிறர்க்கு உதவி முதலியன இன்மையால் துருத்திபோல மூச்சுவிடும் இயல்பினரே என்பதாம்.

சகாரன்-வசந்தசேனையைப் பிடிக்காமலா?

விடன்-வசந்தசேனை காணப்பட்டிலளே!

சகாரன்-எப்படி?

விடன்-

47. அந்தகன் பார்வை போலும்
 [1]ஆதுரன் வன்மை போலும்
மந்தன் துணர்வு போலும்
 மடியுளான் [2]சித்தி போலும்
[3]சிந்தைநைந் தலையப் பெற்றான்
 சிறந்தநூற் கல்வி போலும்
வந்தவள் பகைவ ரன்பின்[4]
 மறைந்தனள் நின்பால் நின்றே[5]

சகாரன்-வசந்தசேனையைப் பிடிக்காமல் யான் போகேன்.

விடன-இதனையும் நீ கேட்டிலை.

---

[1] ஆதுரன் - நோயாளன். [2] சித்தி - பயனெய்தல். [3] சிந்தை நைந்தலையப்பெற்றான் - தடுமாறுளத்தன். [4] இன் ஒப்புப் பொருளது.

[5] இச்செய்யுளுட் கூறிய உவமைகளுள் மந்தனதுணர்வு என்பது ஈண்டுச் சிறந்ததாகும். 'மந்தன்' என்பது சகாரனைக் குறிக்கும். முதலில் சாருதத்தனது இல்லம் இடப்பக்கம் உள்ளது என்று வெளிப்படுத்தத் தகாததொன்றை வெளிப் படுத்தியும், பின்னர் ஆண் பெண் என்னும் பகுத்தறிவின்றி விடன் சேடன் முதலியோரைப் பிடித்துக் காலந் தாழ்த்தும், ஆரவாரஞ் செய்ததொன்றே வசந்தசேனையின் மறைவுக்குக் காரணம் என்பது கருத்து.

48. கரியினை யடக்குதல் [1]கந்தின் கண்ணதாம்;
பரியினைக் [2]கலினத்தாற் பற்ற லாகுமாம்;
அரிவையர் அகத்துறும் அன்பிற் சார்வரவ்
உரிமையன்பு இன்றெனின் ஒழிதல் வேண்டுமால்.

சகாரன்—போகவேண்டுமாயின் நீங்கள் போகலாம். யான் போகேன்.

விடன்—நல்லது, செல்கின்றேன். (என்று போகின்ருன்.)

சகாரன்—ஐயனாகிய விடன் காணப்பட்டிலன். (விதூடகனை நோக்கி) ஏட! [3]காக்கைக்கால் போன்ற [4]தலைச்சிரம் உடையாய்! கொடுமை மிக்க சிறியவ! இரு. இரு.

விதூடகன்—யாங்கள் இருத்தப்பட்டவர்களாக ஆயினேம்.

சகாரன்—எதனால்?

விதூடகன்—[5]ஊழ்வலியால்.

சகாரன்—எழுந்திரு. எழுந்திரு.

விதூடகன்—எழுந்திருப்போம்.

சகாரன்—எப்பொழுது?

விதூடகன்—மீண்டும் ஊழ் நல்லதாகுங்கால்.

---

[1] கந்து - கட்டுத்தறி. [2] கலினம் - கடிவாளம்

[3] வளைந்து நீண்டு விகாரமான தலை என்பதாம். [4] தலைச்சிரம். கூறியது கூறல்.

[5] ஊழ்வலி - தீயூழின் வன்மை. அதனால் இருத்தப் பட்டவர்களாயினேம் என்பதாம். இருத்தப்படுதல்-தாழ்த் தப்படுதல்.

சகாரன்-ஏட! அழு. அழு.

விதூடகன்-யாங்கள் முன்னமே அழும்படி செய்யப்பட்டுளேம்.

சகாரன்-எதனுல்?

விதூடகன்-வறுமையால்.

சகாரன்-ஏட! சிரி. சிரி.

விதூடகன்-சிரிப்போம்.

சகாரன்-எப்பொழுது?

விதூடகன்-செல்வம் மீண்டும் மாட்சி மிக்க சாருதத்தரை அடையுங் காலத்தில்.

சகாரன்-ஏட! சிறு பையலே! வறுமை மிக்க அச் சாருதத்தனபால், பின்வரும் என் சொற்களைச் சொல்லல் வேண்டும். "பொன்மயமான அணிகலன்களையுடையவளும், புதிய நாடகக் காட்சியில் தோன்றிய நடியைப் போன்றவளும், வசந்தசேனை என்னும் பெயரினை உடையாளுமாகிய இக் கணிகைச் சிறுமி காமதேவாயதனம் என்னும் பூஞ்சோலையிற் கண்டது முதல் நின்பாற் காதலுடையளாய், எங்களால் வலிந்து தொடரப்பட்டும் நின் இல்லத்தின்கட் புகுந்தாள். ஆதலின், நீயே அவளை வெளிப்படுத்தி என் கையில் திருப்பித் தருதல் வேண்டும். தரின் நீதிமன்றத்தில் வழக்கின்றி விரைவில் தருகின்ற உனக்கு (மன்னவன் மைத்துனனுகிய) என்னோடு நெருங்கிய நட்புண்டாகும். இன்றேல் தாராதிருக்கின்ற உனக்கு இறக்கும்வரை பகைமையுண்டாகும்." இன்னும் பார்.

49. வற்றலாங் கறியும் ஆப்பி
மலிதரத் திமிர்ந்த காம்பின்
முற்றுபூ சுணியின் காயும்
முழுநெயில் வெந்த வூனும்
உற்றமுன் பனிக்கா லத்தி
னுளவிர வட்ட சோறும்
செற்றமுங் கடனுங் காலஞ்
சேறலாற் கேடுறுவால்.

இதனைச் செவ்வையாகக் கூறுவாயா? மாறுபடக் கூறுவாயா? எனது அரண்மனையின் மேல்வீட்டு வெளிப்புறத்து மாடத்தில் யானிருந்து கேட்கும்படி நீ சொல்ல வேண்டும். மாறுபடப் புகல்வாயாயின், கதவினிடுக்கில் அகப்பட்ட விளாம்பழக் குடுக்கை போல நின் தலையை மடமடவென நெரித்துவிடுவேன்.

விதூடகன்-சொல்லுவேன்.

சகாரன்-(மறைவாக) சேட! உண்மையாகவே ஐயனுகிய விடன் போய்விட்டானே?

சேடன்-ஆம்.

சகாரன்-அப்படியானல் நாமும் விரைந்து போவோம்.

சேடன்-தாங்கள் வாட்படையை எடுத்துக்கொள்ளுங்கள்.

சகாரன்-உன் கையிலேயே இருக்க வேண்டும்.

சேடன்-[1] இவ்வாள் [2], எம்பெருமானை ஒத்ததாகும்.

---

[1] சேடன் அவ்வாளின் சிறப்பு நோக்கி அதனைத் தன் தலைவனாக மதிக்கின்றான்; ஆதலின் அதனைத் தனக்குரிய கருவியாகக் கையாளல் ஆகாதென்றெண்ணிச் சகாரனை எடுத்துக்கொள்ள வேண்டுகின்றான் என்பதாம்.

[2] எம்பெருமான் - எமது தலைவனுகிய விடன்.

ஆதலின், இதனைத் தாங்களே எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

சகாரன்-([1]மாறுபடப் பிடித்துக்கொண்டு)

50. உன்னுசெவ் வள்ளியிற செங்கிற முற்றுப்
புறமறை வின்றி உறையினுள் உறங்கும்
வாளினைத் [2]தோளான் வாங்கி யூளையிட்டு
அரற்று முடுவலும் ஞமலியுங் குரைப்ப
ஓடுமோர் நரியின் ஓடுவன் மனைக்கே.

(இருவரும் சுற்றிவந்து போகின்றனர்.)

விதூடகன்-அம்மா! இரதனிகே! உனக்கு நேர்ந்த இம் மானக்கேட்டைப் பெருமை மிக்க சாருதத்தர் பால் தெரிவித்தல் வேண்டா. தெரிவிப்பின், வறுமை யால் துன்புறும் அவருக்கு இதனால் இருமடங்கான துன்பம் உண்டாமென்று எண்ணுகின்றேன்.

இரதனிகை-ஐய! மைத்திரேயரே! இரதனிகை யாகிய யான் நாவடக்கம் உடையாளன்றே.

விதூடகன்-ஆம். அப்படியே.

சாருதத்தன்-(வசந்தசேனையைக் குறித்து) இர தனிகே! உரோகசேனன் மாலைக்காலத்து இளங் காற்றை விரும்பினவனாய், முன்னிரவுப்பொழுதுண் டாகிய குளிர்ச்சியாற் பீடிக்கப்பட்டுளான். ஆதலின்

---

[1] மாறுபடப் பிடித்தல் - அடிப்பக்கத்தைவிட்டு நுனியிற் பிடித்தல்.

[2] 'கையினால்' என்பதை தோளான் என்று கூறியது அறி வின்மையானும்.

இவனை உள்ளிடத்தே அழைத்துச் செல்வாயாக. இம் மேலாடையால் இவனைப் போர்த்துவாயாக. (என்று மேல்ாடையைக் கொடுக்கின்ருன்.)

வசந்தசேனை–(தனக்குள்) என்னை வேலைக்காரி என்று எண்ணுகின்ருரே. (மேலாடையை வாங்கி மோந்து போர்த்துத் தனக்குள் அவாவோடு) ஆச்சரியம்! இவ்வாடை சாதி மலர்களான் மணம் ஊட்டப் பட்டது. இவரது இளமை பயன் உடையதாகவே காணப்படுகின்றது. (சாருதத்தன் அறியாவாறு தன்னை மறைத்துக்கொள்கின்ருள்.)

சாருதத்தன்-ஏடி! இரதனிகே! உரோகசேனனைத் தூக்கிக்கொண்டு உள்ளே செல்.

வசந்தசேனை–(தனக்குள்) தங்கள் இல்லத்தினுள்ளே புகுதற்கு யான் தகுதியில்லாதவளன்றே.

சாருதத்தன்-ஏடி ! இரதனிகே ! மறுமொழியுமில்லையே ! அந்தோ!

51. விதிவலியாற் பொருணீக்க
மேவுதலில் துன்பமெலாம்
உதிதருமிந் நிலைமையினை
ஒருமனிதன் அடையுங்காற்
பதிதாமுன் நட்டோரும் பகைமையரே பன்னுளாம்
மதியன்பின் ஏவலரும் மாறுபடு நிலையினரே.

(இரதனிகையின் பக்கலெய்தி)

விதூடகன்-ஒ! இவளன்றே அந்த இரதனிகை.

சாருதத்தன்—அவ் இரதனிகை இவளா? மற்றொருத்தியாகிய இவள் யார்?

52. உண்மையின் உணர்விலா துளவென் னுடையைப்
பெண்மையிற் பிழைபடப் பேதிற் சேர்த்தனன்.

வசந்தசேனை-(தனக்குள்) இதனுல் அணிசெயப் பட்டேன்.

சாருதத்தன்—
[1]வெண்மைசால் கூதிர்நாள் மேகத் தின்மறை
தண்மதி நிலவுபோல் தயங்கு கின்றனள்.

ஆ! பிறன்மனைவியைக் காண்டல் தக்கதன்றே

விதூடகன்—ஓ! ஓ! பிறன்மனைவியைக் காண்டல் என்னும் ஐயம் வேண்டா. இவ் வசந்தசேனை காமதேவாயதனம் என்னும் பூந்தோட்டத்திற் கண்டதுமுதல் தங்களைக் காதலித்தாள்.

சாருதத்தன்—ஆ! இவள் வசந்தசேனையா! (தனக்குள்)

53. உளபெருந் திருவெலாம் ஒழிந்த ஞான்றெனக்கு
அளவிகந் திவள்முகம் ஆய காமமோர்
வளமறு [2]சிறியவன் சினத்தை மானவென்
தளருடல் உறுப்பிலே சார்ந் தடங்குமால்

விதூடகன்—நண்பரீர்! இவ்வரசன் மைத்துனன் சொல்கின்ருன்.

---

[1] வெண்மைசால் மேகமென்க.

[2] சிறியவன் சினம் செல்லாவிடத்து நிகழுமாயின், கண் சிவத்தல் இதழ்கடித்தல் முதலிய அவன் உடலுறுப்புக்களின் இயக்கத்தளவில் ஒழியும்; அதுபோல் வறியவன் காமம் பயனுருது அவன் உடலுக்குத் துன்பம் விளைக்குமவ்வளவில் ஒழியும் என்பதாம்.

சாருதத்தன்—என்ன?

விதூடகன்—பொன்மயமான அணிகலன்களை யுடையவளும், புதிய நாடகக் காட்சியில் தோன்றிய நடியைப் போன்றவளும், வசந்தசேனை என்னும் பெய ரினையுடையவளுமாகிய இக் கணிகைச்சிறுமி, காமதே வாயதனம் என்னும் பூஞ்சோலையிற் கண்டதுமுதல் நின்பாற் காதலுடையளாய் எங்களால் வலிந்து தொடரப்பட்டும் நின் இல்லத்தின்கட் புகுந்தாள்.

வசந்தசேனை—(தனக்குள்) 'வலிந்து தொடரப்பட் டாள்' என்னும் இ·.து உண்மையே. [1]இவ்வெழுத் துக்களால் அலங்கரிக்கப்பட்டவளாகின்றேன்.

விதூடகன்—ஆதலின், நீயே அவளை வெளிப் படுத்தி என்கையில் திருப்பித்தரல் வேண்டும். தரின் நீதிமன்றத்தில் வழக்கின்றி, விரைவில் தருகின்ற உனக்கு மன்னவன் மைத்துனனாகிய என்னுடன் நெருங்கிய நட்புண்டாகும். இன்றேல், தாராதிருக் கின்ற உனக்கு இறக்கும்வரை பகைமையுண்டாகும்.

---

[1] சகாரனுக்கு இணங்காமல் அவனால் வலிந்து தொட ரப்பட்டாள் என்னும் சொற்றொடரிலுள்ள ஒவ்வோரெழுத் துக்களும் வசந்தசேனைக்கு அணிகலனாக மிளிர்ந்தன. விலை மகளாகிய இவள் நம்மாட்டுக் கொண்ட காதல் பொய்யாகு மென்று சாருதத்தன் எண்ணினால் தன் முயற்சி பயனற்ற தாகுமேயென்று வசந்தசேனை எண்ணிக்கொண்டிருந்தன ளாதலின், அந்நிலையில் 'வலிந்துதொடரப்பட்டாள்' என்னும் சகாரன் கூற்று அவளுக்கு மிக்க மகிழ்ச்சி அளித்தலான் அணி கலனாயிற்று என்பதாம்.

சாருதத்தன்—(பொருட்படுத்தாமல்) [1]இவன் அறிவிலாதவன். (தனக்குள்) ஆ! இம்மங்கை தேவர்களுடன் கூடுதற்குத் தகுதியுடையவள். அதனாலன்றோ அவ்வமயத்தில்,

54. இல்லினுட் புகுகவென் றேவப் பட்டுமெற்
புல்லிய விதிநிலை நோக்கிப் போந்திலள்;
[2]பல்லிய லாடவர்ப் பயிற்சி யாற்பல
சொல்லுவ ளாயினுந் துணிந்து சொல்கிலள்.

(வெளிப்படையாக) நங்காய்! வசந்தசேனே! உருவத்தை உற்று நோக்காது அறியாமையாற் பரிசனமெனக் கொண்டு ஏவிப் பிழை செய்தவனாகின்றேன். அருள் செய்ய நின்னைத் தலைவணங்கி வேண்டுகின்றேன்.

வசந்தசேனை-(என்னிலைக்குத்) தகுதி யில்லாத இடத்திற் புகுந்த இதனாற் பிழைபுரிந்தவள் யானே. ஆதலின், அருள் புரியப் பெருமானாகிய தங்களைத் தலைவணங்கி வேண்டுகின்றேன்.

விதூடகன்—ஓ! நீங்கள் இருவீரும் ஒருவரையொருவர் இன்பமுற வணங்கினவர்களாய், [3]நெல்

---

[1] இவன் என்றது சகாரனை.

[2] பல ஆடவர்களோடு அடிக்கடி பழகியதால் மனத்துணிவோடுபேசும் வன்மையுடையவளாயிருந்தும், இப்பொழுது மிக்க அமைதியையும் வணக்கத்தையும் மேற்கொண்டிருத்தல் மிக்க இன்பம் தருவதென்பதாம்.

[3] நெல்விளைந்த கழனிகள் ஒன்றோடொன்று தலைப்பெய்தலாவது,ஒரு கழனியில்விளைந்த நெற்பயிரின் தலை அடுத்துள்ள மற்றொருகழனியிலும், அதன்கண் உள்ள நெற்பயிரின் தலை இதன்கண்ணும் சாய்தலாம்.

விளைந்த கழனிகள் போலத் தலையோடு தலை பொருந்தப் பெற்றிருக்கின்றீர்கள். யானும் [1]ஒட்டகக் கன்றின் முழங்கால்போன்ற தலையினால் வணங்கி உங்களிருவரையும் அருள் செய்ய (எழுந்திருக்கும்படி) வேண்டுகின்றேன். (என்று எழுகின்றான்.)

சாருதத்தன்—[2]அமைக; [3]உரிமை நட்பு நிலையுறுவதாக.

வசந்தசேனை—(தனக்குள்) இவ் வின்சொல் பொருட்டிட்பமும் இனிமையும் உடையது. இப்பொழுது மாறுபட்ட நிலையில் இங்கே வந்த யான் தங்குதல் பொருத்தமின்று. நிற்க. இங்ஙனம் கூறுகின்றேன். (வெளிப்படையாக) பெரும! யான் இங்ஙனம் தேவரீரது அருளுக்குப் பாத்திரமாயின், இவ் அணிகலன்களைத் தங்கள் இல்லத்தில் அடைக்கலமாக வைத்தற்கு விரும்புகின்றேன். அணிகலன்களின் பொருட்டே இக் கொடியவர்கள் தொடர்ந்து வருகின்றனர்.

சாருதத்தன்—[4]இவ்வில்லம் அடைக்கலப் பொருள் வைத்தற்கு உரியதன்று.

---

[1] ஒட்டகக்கன்றின் முழங்கால் மேடுபள்ளமாக இருக்கும். அதுபோல விதூடகன் தலை உள்ளதென்பதாம்.

[2] குற்றம் எனதாக; நினதாக; எங்ஙனமாயினும் ஆகுக. இப்பொழுது அஃது ஆராயத்தக்கதன்று என்பது கருத்து.

[3] முன்னறியப்படாத என்னில்லத்துட் புகுந்தருளியது, எக்காரணத்தால் ஆயினும் ஆகுக. அகாரணமாக என்பாற் கொண்ட உண்மையன்பு தடைப்படாது வளர்தல்வேண்டும் என்பது கருத்து.

[4] இவ்வில்லம் சிதைவுற்றும் காப்பாரில்லாமலும் இருத்தலால் தகுதியாகாது என்பது கருத்து.

வசந்தசேனை—பெரும! இது பொய். [1]அடைக்கலப் பொருள் வைத்தல் ஆடவரிடத்தேயாம். இல்லங்களி லன்று.

சாருதத்தன்—மைத்திரேய! இவ் வணிகலன்களை எடுத்துக்கொள்க.

வசந்தசேனை—அருள் செய்யப்பட்டேன் (என்று அணிகலன்களைக் கொடுக்கின்றாள்.)

விதூடகன்—(பெற்றுக்கொண்டு) [2]உனக்கு மங்கலம் உண்டாகுக.

சாருதத்தன்—ஆ! மூட! அடைக்கலப் பொருளன்றோ ஈது.

விதூடகன்—(மறைவாக) அங்ஙனமாயின் கள்வராற் கவரப்படுக.

சாருதத்தன்—[3]சமீபகாலத்திலேயே,

---

[1] ஆடவராகிய தாங்களோ ஒழுக்கநெறி பிறழாதவர்கள். இல்லம் எங்ஙனம் இருப்பினுமென்? தங்கள்பால் இதனை வைத்தல் கொடியவர்க்கு அஞ்சிப் போந்த யான் என்னைக் காப்பாற்றிக் கோடற்கேயாம் என்று வசந்தசேனை கருதினள் என்க.

[2] அவ்வணிகலன்களைத் தனக்குத் தந்ததாக நினைந்து வாழ்த்துகின்றான்.

[3] இவ்வாக்கியம் முடிதற்கு முன்னரே விதூடக வாக்கியம் வந்தது. ஆதலின், பின்னுள்ள சாருதத்தன் சொல்லாகிய 'திருப்பிக் கொடுத்துவிடுவேன்' என்பதோடு இதனை முடிக்க.

விதூடகன்—இவள் தந்த அணிகலன்கள் நம்மி டத்து (க்கள்வர்பயத்தால்) அடைக்கலமில்லாததா கவே கருதப்படும்.

சாருதத்தன்—இவ் அடைக்கலப்பொருளைத் திருப் பிக் கொடுத்துவிடுவேன்

வசந்தசேனை—பெருமானே! இம் மைத்திரேய ரைத் துணையாகக்கொண்டு யான் என் இல்லமெய்த விரும்புகின்றேன்.

சாருதத்தன்—மைத்திரேய! இப் பெண்மணியைத் தொடர்ந்து செல்வாயாக.

விதூடகன்—தாங்களே இவ் அன்னநடையாளைப் பின் தொடர்ந்து சென்றால் அரசவன்னம்போல் விளங் குவீர்கள். இவ்வேழைப் பார்ப்பானாகிய என்னை, நாற் சந்தி கூடுமிடத்துப் போடப்பட்ட உணவுப் பொருள் களை நாய்கள் கௌவுதல் போல் விளையாட்டுப் பையல் கள் நலிவுறுத்திக் கெடுப்பர்.

சாருதத்தன்—அங்ஙனமேயாக. இந்நங்கையை யானே தொடர்ந்துசெல்வேன். ஆதலின், அரசவீதியிற் கெடாதிருத்தற்குத் தகுதியான விளக்குக்களை ஏற்றல் வேண்டும்.

விதூடகன்—வருத்தமானக! விளக்குக்களைஏற்று.

சேடன்—(மறைவாக) ஆ! எண்ணெயில்லாமல் விளக்குக்கள் எப்படி ஏற்றப்படும்?

விதூடகன்—(மறைவாக) ஆ! முன்னர் எண்ணெய் நிரம்பிய அத்தகைய நம் விளக்குக்கள் இப்பொழுது

வறுமை மிக்க காமுகர்களை வெறுத்தொதுக்கும் விலை மகளிர்போல [1]நயமற்றிருக்கின்றன.

சாருதத்தன்—மைத்திரேய! அமைக. விளக்குக்கள் வேண்டா; பார்க்க.

55. காமமிகு மங்கை [2]கதுப் பெனவெளுத்துத்
தாரகையின் கணங்கள் சூழத்
தாமமிகு சந்திரன் [3]கோப் பெருந்தெருவின்
தனிவிளக்காய்ச் சார்ந்தான் அன்னுன்
சேமமிகு வெள்ளியதண் கதிர்க்கற்றை
நீர்வடிந்த சேற்றின் கண்ணே
ஏமமிகும் [4]பாலொழுக்கின் [5]இருட்குழாத்து
இடைவீழ்ந்திங் கிலகு மாலோ.

(காதலோடு) நங்காய்! வசந்தசேனே! இது நின்னில்லம். உள்ளே புகுக.

(வசந்தசேனை காதலோடு சாருதத்தனைப்
பார்த்துக்கொண்டே போகின்ருள்.)

சாருதத்தன்—நண்ப! வசந்தசேனை போய்விட்டாள். ஆதலின் வருக; நம்மில்லம் எய்துவோம்.

---

[1] நேயம் - அன்பு; எண்ணெய்.

[2] கதுப்பு - கன்னம். [3] கோப்பெருந்தெரு - அரசவீதி.

[4] பாலொழுக்கின் - இன் - ஒப்புப்பொருளது.

[5] இருட்குழாத்திடை என்றதனுல், தண்கதிரெழுச்சியின் தொடக்கம் புலப்படும். அத்தொடக்கத்தால் இருள் சிறிது சிறிதாகக் கழிகின்றது என்பதாம்.

56. இக்கோப் பெரும்வீதி யாரு மிலரன்றித்
தக்கோராங் காவலர்கள் தாமுறினு-மிக்க
இரவு [1]பலதீங் கியைதலான் வேண்டும்
கரவு தவிரவுறுங் காப்பு.

(சுற்றிவந்து) இப்பொறபணியை இரவில் நீயும், பகலில் வருத்தமானகனும் காத்தல் வேண்டும்.

விதூடகன்—பெருமான் கட்டளைப்படியே.

(என்று இருவரும் போகின்றனர்.)

"அணிகலன் அடைக்கலம்" என்னும்

முதல் அங்கம் முற்றிற்று.

---

[1] பலதீங்கு - சனவழக்கமில்லாமை, கள்வர்திரிதல், இருட் குற்றம் முதலியன.

# இரண்டாம் அங்கம்

## சூதர் நிலை

(வெளி வந்து)

சேடி—வசந்தசேனையினிடத்துத் தெரிவிக்கவேண்டுவது ஒன்றின்பொருட்டு அவள்தாய் என்னை ஏவினாள். ஆதலின், வீட்டினுட்புகுந்து பெருமாட்டியின் அருகில் அடைகின்றேன். (சுற்றிப்பார்த்து) இப்பெருமாட்டி நெஞ்சத்தால் ஏதோவொன்றை ஊன்றி நினைத்துக்கொண்டிருக்கிறாள். ஆதலின், அருகிற் செல்கின்றேன்.

(அதன்பின் இருக்கையில் இருந்தவண்ணமாய்ப் பிரிவாற்றாமை மிக்க வசந்தசேனையும், மதனிகையும் வருகின்றனர்.)

வசந்தசேனை—ஏடி! அதன்பின், அதன்பின்.

சேடி—பெருமாட்டீ! யான் ஒன்றும் கூறவில்லையே! "அதன்பின் அதன்பின்" என்பதென்ன?

வசந்தசேனை—யான் சொல்லியதென்ன?

சேடி—"அதன்பின் அதன்பின்" என்று.

வசந்தசேனை-(புருவநெரிப்புடன்) ஆம் அப்படியே,

(அணிமைக்கண் வந்து)

முதலாவது சேடி—பெருமாட்டீ! தங்கள் அன்னையார் "நீராடித் தெய்வங்களுக்குப் பூசையை நிறைவேற்றுக" என்று கட்டளையிடுகின்றார்கள்.

வசந்தசேனை—ஏடி! "இன்று நீராடல் செய்யேன்; ஆதலின், புரோகிதரே பூசையை நிறைவேற்றல் வேண்டும்" என்று தாயினிடத்து அறிவிப்பாயாக.

சேடி—பெருமாட்டியின் கட்டளைப்படியே.

(என்று போகின்றுள்.)

மதனிகை—பெருமாட்டி! நட்புப்பற்றிக் கேட்கின்றேன்; குற்றத்தை அறிய வேண்டும் என்பது பற்றியன்று. ஆதலின், இப்படியிருத்தல் என்னை?

வசந்தசேனை—மதனிகே! என்னை எத்தகையளாகக் காண்கின்றுய்?

மதனிகை—பெருமாட்டியின் நெஞ்சம் புலனுகர்ச்சியின்றியிருத்தலால், உள்ளத்தின்கட் புகுந்த ஓராடவன்பால் விருப்பம் வைத்திருக்கின்றீர்கள் என்று காண்கின்றேன்.

வசந்தசேனை—நன்கு அறிந்தனை. பிறர் உள்ளத்தை அறிவதிற் பண்டிதையாகிய மதனிகையன்றே! நீ!

மதனிகை—ஈது எனக்கு மிக்க மகிழ்ச்சி தருகின்றது. இக் காமதேவன் பகவானன்றே! இவனுல் இளம் பருவத்து ஆடவர்களுக்குத் தங்களை அடைய வேண்டும் என்னும் மகிழ்ச்சி சாலவும் வளர்கின்றது. ஆதலின், பெருமாட்டி அரசனையா? அன்றி அமைச்சர் முதலியோருள் ஒருவனையா? போற்றக் கருதியது கூறல் வேண்டும்.

வசந்தசேனை—சேடி! இன்பம் எய்த விரும்புகின்றேன்; [1]போற்றுதற்கு அன்று.

---

[1] போற்றுதல் - பொருளாளர்களை உபசரித்தல். அது விலைமாதர் இயல்பு; யான் அந்நிலையளல்லள்; குலமகளிர் இன்பம் உறுதற்கே விரும்புகின்றேன் என்பதாம்.

மதனிகை—சிறந்த கல்வி யணிகலன்களையுடைய இளைஞனாகிய ஓர் அந்தணனை விரும்புகின்றீர்களா?

வசந்தசேனை—அந்தணர்கள் என்றால் வணங்கத் தக்கவர்களன்றே!

மதனிகை—பற்பல நகரங்களிற் சென்று ஈட்டிய பொருட்பெருக்கத்தையுடைய இளைஞனாகிய ஒரு வணிகனை விரும்புகின்றீர்களா?

வசந்தசேனை—சேடி! தம் இல்லக்கிழத்தியர் அளவின் மிக்க அன்புடையர்களாயினும் அவர்களைவிட்டு அயல்நாடு சேறலான், வணிகர்கள் பிரிவினால் உண்டாகும் பெருந்துன்பத்தை உண்டாக்குபவர்கள்.

மதனிகை—பெருமாட்டீ! அரசன், அமைச்சன், அந்தணன், வணிகன் இவருள் ஒருவனையும் காமுறவில்லையாயின், இப்பொழுது தலைவியாகிய தங்களாற் காமுறப்படும் தகுதியுடையான் யாவன்?

வசந்தசேனை—சேடி! நீ என்னுடன் "காமதேவாயதனம்" என்னும் உத்தியானத்தை அடைந்தாயன்றே!

மதனிகை—பெருமாட்டீ! ஆம் அடைந்தேன்.

வசந்தசேனை—அங்ஙனம் வந்திருந்தும் ஒன்றும் அறியாதவள் போல வினவுகின்றாயே!

மதனிகை—அஃதறிந்தேன். இல்லத்துட் புகுந்த பெருமாட்டியாகிய தங்களுக்கு அருள்புரிந்த அப் பெருந்தகையினை விரும்புகின்றீர்களா?

வசந்தசேனை—அவர்பெயர் என்ன?

மதனிகை—அவரோ வைசியர் மறுகில் இருப்பவர்.

வசந்தசேனை—அவர் பெயரினையன்றே கேட்டேன்.

மதனிகை—அவரோ மாட்சி மிக்க சாருதத்தர் என எல்லாராலும் அறியப்பட்ட விளக்கமான பெயரினை யுடையார்.

வசந்தசேனை—(மகிழ்வோடு) நல்லது, மதனிகே! நல்லது. நீ நன்கு அறிந்திருக்கின்றனை.

மதனிகை—(தனக்குள்) [1]அப்படியே. (புறத்தே) பெருமாட்டி! அவரை வறியவர் என்றன்றே கேட்டிருக்கின்றேன்?

வசந்தசேனை—அதனாலேயே காமுறுகின்றேன். நல்குரவு மிக்க ஆடவனை நயந்த நெஞ்சத்தினளாகிய கணிகையே உலகத்தில் [2]இழிவில்லாதவளாகின்றாள்.

மதனிகை—பெருமாட்டி! மலர்கள் உதிர்ந்த மாமரம் உயர்ந்த சாதியாயினும், அதனை [3]வண்டுகள் எப்படி விரும்பும்?

வசந்தசேனை—அது காரணமாகவே அவைகள் [4]மதுகரங்கள் எனப் பெயர் பெற்றன.

---

[1] அவரியல்பை நன்கறிந்திருக்கின்றேன்; அவரை விரும்பியது பொருத்தமன்று என்பதாம்.

[2] பொருளாசை மிக்க கணிகையர் உண்மை யன்பினரா கார் என்னும் உலகாபவாதத்தினின்றும் நீங்குதலின், இழி வில்லாதவள் ஆகின்றாள் என்பதாம்.

[3] அறிவில்லாத வண்டுகளும் விரும்பா எனின், அறி வுடைய நீ விரும்புதல் யாங்ஙனம் பொருந்தும் என்பதாம்.

[4] மதுகரங்கள் - மதுவையுண்டாக்குபவை. அவை அத் தேனைப் பிறர்பொருட்டு ஆக்குவன; அதுபோல விலைமகளிர்

மதனிகை—ஆரியே! அவரை விரும்பினையாயின், இப்பொழுது எக்காரணத்தை முன்னிட்டு விரைந்து [1]அவர்பாற் சேர்ந்திலை?

வசந்தசேனை—சேடி! அப்பெருமான் பக்கல் விரைந்து எய்துவேனாயின், அவர் கைம்மாறுகத் தருதற்கு ஆற்றல் இல்லாமையான் மீண்டும் காண்டற்கு அரியராவர். [2]அங்ஙனம் ஆகாமை குறித்தே.

மதனிகை—[3]அக்காரணம்பற்றியேயோ நீ அணிந்திருந்த அணிகலன்களை அவர் கையிற் சேர்த்தனை?

வசந்தசேனை—சேடி! செவ்வையாக நீ உண்மை தெரிந்துளாய்.

(திரைக்குப் பின்னே)

[4]ஏ! ஐய! சூதில் தோற்றமையால் தரவேண்டிய பத்துப் பொற்காசின் நிமித்தம் பிடித்து வைக்கப்பட்ட சம்வாககன் ஓடிவிட்டான். ஓடிவிட்டான்.

---

தம்நலத்தைப் பிறர்க்குரிய வாக்குப. யான் அங்ஙனமின்றி எனக்கே இன்பம் உண்டாக முயல்கின்றேன் என்பதுதோன்ற இவ்வாறு கூறினள்.

[1] சேர்தற்கு எளியராகவும் சேராமைக்குக் காரணம் என்? என்பதாம்.

[2] விரைந்து அடைந்திலேன் என முடிக்க. யான் அவர்பாற் கைம்மாறுபெறும் விருப்பில்லாதவள் என்பதில் அவர் நம்பிக்கை அடையும்வரை என்செலவைத் தாழ்த்தல் நன்றெனக்கொண்டேன் என்பதாம்.

[3] அவர் நம்பிக்கையெய்தும்பொருட்டேயோ.

[4] இச்சொல் சபிகனுடையது. சபிகன் - சூதாடுவோர்க்கு நடுநின்று ஒழுங்கு செய்பவன். இவன் பெயர்

ஆதலிற் பிடி. பிடி. [1]நில். நில். தூரத்திலேயே பார்க்கின்றேன்.

(திரையை உயர இழுத்தற்குமுன்னரே கலக்கத்தோடு வந்து)

சம்வாககன்.—அந்தோ! இச்சூது விளையாடல் மிகக் கொடியது.

57. [2]விரவிய காற்றளை விடுத்த வேசரி
புரைதரு கவற்றினுற் புன்கண் உற்றனன்;
இரையெனக் கன்னன்வேற் கெதிர்ப்பட் டாவியை
வரைகடோற் கசனென வல்லிற் பட்டனன்.

58. [3]சூதாடல் புரிவிப்போன் துறுமுமனம்வரை முடங்கல்
மீதார வதுநோக்கி விரைந்துமறை தரலானேன்;

---

மாதுரன் என்பதாம். இவன் சூதில் வென்றிகொண்ட சூதனை நோக்கிக் கூறுகின்றான்.

[1] நில் நில் என்பது முதலியன சூதில் தோற்றோடும் சம்வாககனை நோக்கிக் கூறப்பட்டனவாம்.

[2] காற்றளை விடுவிக்கப்பட்ட கழுதை பின்கால்களால் மிக உதைத்தல்போற் கவறுகள் பெரிதும் தோல்வியுறச் செய்து வருத்த அதனுல் துன்புற்றேன் எனவும், கன்னன் வேற்படைக்கு எதிர்ப்பட்டு ஆவி நீங்கிய கடோற்கசனைப் போலச் சூதாடு கருவியால் அழிந்தேன் எனவும் பொருளாதல் அறிக. கவறு, வல் இவை சூதாடு கருவிகள். படுதல் - அழிதல்.

[3] சூதாடல் புரிவிப்போன்-சபிகன். முடங்கல்-ஓலை. சபிகன் மனம் ஓலையெழுதுவதில் பற்றிநிற்ப அது கண்டு விரைந்து மறைந்து ஓடினேன். தாரை-வழி. இவ்வழிக்கண்

மாதாரை யிவன்காணு வகையோடி யிவ்வமயம்
ஆதார மாயெவனை யடைக்கலம்புக் கமர்வேன்
யான்?

ஆதலின், இச்[1]சூதாடுகளத் தலைவனும் சூதனும் வேறிடத்து என்னைத் தேடி இங்குத் திரும்புதற்குள் யான் கால்களாற் பின்புறமாக நடந்து இப் பாழ்ங் கோயிலினுட் புகுந்து தெய்வ வுருவம் போலாவேன்.

(பலவிதமாக நடித்து அங்ஙனம் ஆகின்றான்.)

(அதன்பின் மாதுரனும் சூதனும் வருகின்றனர்.)

மாதுரன்— ஏ! ஐய! சூதில் தோற்றமையால் தர வேண்டிய பத்துப் பொற்காசின் நிமித்தம் பிடித்து வைக்கப்பட்ட சம்வாககன் ஓடிவிட்டான். ஓடி விட்டான். ஆதலிற் பிடி. பிடி. நில். நில். தூரத்திலே பார்க்கின்றேன்.

சூதன்—

59. பொன்னுல கிறைவனைப் புகலின் றெய்தினும்
உன்னுபா தலம்புகுந் துறையினும் எனும்
பன்னுமிச் [2]சபிகனிற் பற்றல் போக்கியம்
மன்உருத் திரனுங்காத் தற்கு வல்லனோ.

---

இவன் காணுவகை ஓடி யாரைப் புகலெய்துவேன்? என்பதாம்.

[1] இவனைச் சபிகன் என்பர் முதனூலார்.

[2] சபிகன் நின்னைப் பற்றுதலை விலக்கிக் காக்க உருத்திரனும் வல்லன் அல்லன் என்பதாம்.

மாதுரன்—

60. [1]நடுவனும் எனேயே மாற்றி
நாமுற நடுக்க மேற்கொள்
உடலினே யுடையா யேட
உன்புக ழொளியும் வந்த
குடியின தியல்பு மாசு
கொள்ளநல் வழிக்கொள் ளாதே
அடிதொறும் இடறி யெங்கெங்கு
அலேந்துநீ யோடுகின்ருய்?

சூதன்—(அடிச்சுவடு நோக்கி) இவன் இதோ போகின்ருன். இவ்வழி இடையில் மறைந்து விட்டது.

மாதுரன்—(ஆராய்ந்து பார்த்து) ஓ! அடிகள் திருப்பப்பட்டிருக்கின்றன. இக்கோயில் திருவுருவில்லாதது. ([2]ஆலோசித்து) வஞ்சகனுகிய சம்வாககன் பின்புறமாகத் திருப்பப்பட்ட கால்களால் தேவாலயத்துட் புகுந்தான் போலும்.

சூதன்— அப்படியானுல் தொடர்ந்து செல்வோம்.

மாதுரன்—மிக நல்லது.

(இருவரும் தேவாலயத்தினுட் புகுகின்றனர்; சம்வாககனேப் பார்த்து ஒருவருக்கொருவர் சங்கேதம் செய்துகொண்டு)

---

[1] நடுவன் - சபிகன். நாம் - அச்சம். நடுக்கம்-துடிப்பு.

[2] ஆலோசனேப் பொருளாவது: உட்புகுந்தன்றே வெளியே வரல் வேண்டும்; உட்புகுந்த சுவடு காணப்படவில்லே; வெளிப்போந்த சுவடு காணப்படுகின்றது. இதனுல் இது வஞ்சகச் செயலாகும் என்பதாம்.

சூதன்—[1]ஈதென்ன? கட்டையுருவமான விக்கிரகமா?

மாதுரன்—ஏட! அன்று; அன்று. இது கல்லினால் இயன்ற உருவம். (என்று பலவிதமாக அசைக்கின்றான். கண்ணாற் குறிப்புச் செய்து) இது நிற்க. வருக. [2]சூது விளையாடல் செய்வோம்.

(என்று பலவிதமான சூது விளையாடலைச் செய்கின்றான்.)

சம்வாககன்—(சூதாடலின் வைத்த விருப்பத்தால் உண்டாகிய விகாரங்களைப் பலவகையானும் மறைத்துத் தனக்குள்) ஆ!

61. அரிய தேயம் இழந்த வரசனுக்கு
உருமு போர்முர சோதையை யொப்பவிக்
[3] கருவி யாமுரு ளோசைதன் கையிலோர்
பொருளி லான்மனம் போதர ஈர்க்குமால்.

62. [4]மேருவின் உச்சியின் ஏற்றி வீழ்த்தல்போல்
சாருமிச் சூதினித் தவிர்தல் வேண்டுமென்று

---

[1] இது விக்கிரகமன்று; புருட வுருவமேயாம் என்பதாம்.

[2] சூது விளையாட்டில் விருப்பமுள்ள ஒருவன், பிறர் அவ் விளையாட்டை மேற்கொள்ளுங்காற் பார்த்துக்கொண்டு வாளா விருத்தல் இயலாதென்பது கருத்து.

[3] கருவியாம் உருளோசை-சூதாடு கருவியாகிய உருளும் கவற்றின் ஓசை. ஈண்டு உருள் கவற்றை யுணர்த்தும்.

[4] சூதினாலுண்டாம் வென்றி மேருவின் உச்சியில் ஏற்றல் போலவும் தோல்வி அதனினின்று வீழ்த்தல் போலவுமாம் என்க.

ஒரும்என் மனத்தையிக் கவற்றினேசைநல்
ஏருறு குயிலின்இன் னிசையின் ஈர்க்குமால்.

சூதன்—(கவறு வீழ்ந்தது) என் பக்கத்தில். என் பக்கத்தில்.

மாதுரன்—இல்லை. என் பக்கத்தில். என் பக்கத்தில்.

சம்வாககன்—(சமீபமான வேறேரிடத்தில் விரைந்து வந்து) என் பக்கத்திலன்றே வீழ்ந்தது.

சூதன்—இம்மனிதன் அகப்பட்டான்.

மாதுரன்—(பிடித்துக்கொண்டு) ஏட! பணயப் பொருள் கொடாதவனே! பிடிக்கப்பட்டாய். அப் பத்துப் பொற்காசுகளையும் கொடுத்து விடு.

சம்வாககன்—ஐயா! தருவேன்,

மாதுரன்—இப்பொழுதே தரல் வேண்டும்.

சம்வாககன்—தருவேன். [1]அருள் செய்தல் வேண்டும்.

மாதுரன்—ஏட! இப்பொழுதே தரல் வேண்டும்.

சம்வாககன்—தலையால் வணங்குகின்றேன்.

(என்று நிலத்தில் வீழ்கின்ருன்.)

(இருவரும் பலவாருக அடிக்கின்றனர்.)

---

[1] அருள் செய்தல்-காலந் தாழ்த்தலைப் பொறுத்துக் கோடற் கண்ணும்.

மாதுரன்—இத்தகைய நீயோ [1]சூது விளையாடுவோரின் கூட்டத்தாரால் பிடிக்கப்பட்டாய்.

சம்வாககன்—(எழுந்து கவலையோடு) சூதாடுவோரின் கூட்டத்தினாலேயே பிடிக்க பட்டேன். ஐயோ! சூதாடுவோராகிய நம்மவரது இக்கொள்கையைக் கடத்தலாகாதே! ஆதலின் எவ்வாறு கொடுப்பேன?

மாதுரன்— ஏட! பிணை கொடு. பிணை கொடு.

சம்வாககன்—அங்ஙனமே செய்கின்றேன். ([2]சூதன் பக்கலெய்தி) நினக்குப் பாதி தருகின்றேன். பாதியை எனக்கு விடல் வேண்டும்.

சூதன்—அவ்வண்ணமேயாக.

சம்வாககன்— ([3]மாதுரன் பக்கல் எய்தி) பாதிக்குப் பிணை செய்கின்றேன். ஐயன் எனக்குப் பாதியை விடல் வேண்டும்.

மாதுரன்—இதனுற் குறைவென்? அங்ஙனமேயாக.

சம்வாககன்— [4] (வெளிப்படையாக) ஐய! தாங்கள் பாதியை விட்டீர்களன்றே.

---

[1] நின் ஒழுக்கம் சூதாட்டக் குழுவினரனைவராலும் வெறுக்கப்பட்டதொன்று; ஆதலின் உன்னைப் பிடித்தது அக் குழுவின் பாலதாம்; என்னுல் மாத்திரமன்று என்பது கருத்து.

[2] தன்சொல் மாதுரன் செவியிற் படாவண்ணம் என்பது கருத்து.

[3] தன்சொல் சூதன் செவியிற் படாவண்ணம் என்பது கருத்து.

[4] இருவரும் கேட்கும்படி.

மாதுரன்—ஆம். விட்டேன்.

சம்வாககன்—(சூதனைக் குறித்து) நீயும் பாதியை விட்டனை யன்றே?

சூதன்—ஆம். விட்டேன்.

சம்வாககன்— [1]இப்பொழுது போகின்றேன்.

மாதுரன்—[2]எங்கே போகின்றாய்? அப்பத்துப் பொற்காசுகளைக் கொடு.

சம்வாககன்—ஐயன்மீர்! பாருங்கள். பாருங்கள் ஆ! இப்பொழுதே [3]ஒருவன் பாதிக்குப் பிணை செய்து விட்டமையால் அவன் பாதியைவிட்டான்; மற்றொருவன் தானே அப்பாதியை விட்டான். இங்ஙனம் முழுதும் விட்ட பின்னும் துணையில்லாதவனாகிய என்னை இப்பொழுதே முழுதும் கேட்கின்றான்.

மாதுரன்—(பிடித்துக்கொண்டு) வஞ்சக! மாதுரனாகிய யானோ நிபுணன். இவ்வஞ்சகத்தில் ஏமாற்றமடையேன்.

---

[1] கடன் தொகையாகிய பத்துப் பொற்காசுகளில் ஒரு பாதி சபிகனாலும் மற்றொரு பாதி சூதனாலும் விடப்பட்டமையால், கடன் முழுவதுந் தீர்ந்துவிட்டது. இனி என்னைத் தடைப்படுத்தல் தகாது என்பது கருத்து.

[2] நீ இப்பொழுதே கையில் தருவதாயிருந்தால் பாதியைத் தள்ளி வாங்குவேன். கொடாமலிருப்பதால் முற்றும் தர வேண்டும் என்பதாம்.

[3] ஒரு பாதி சூதனால் விடப்பட்டது; அவனுக்குப் பிணை கொடுக்கப்பட்ட மற்றொரு பாதி மாதுரனால் விடப்பட்டது. ஆதலின் இருவராலும் முழுதும் விடப்பட்டதென்பது கருத்து.

ஆதலின், பணயப் பொருள் கொடாதவனே! அவ்வெல்லாப் பொருள்களையும் இப்பொழுதே தரல் வேண்டும்.

சம்வாககன்—எப்படித் தருவேன்?

மாதுரன்—நின் தந்தையை விற்றுத் தா.

சம்வாககன்—எனக்குத் தந்தை எங்கே?

மாதுரன்—நின் தாயை விற்றுத் தா.

சம்வாககன்— எனக்குத் தாய் எங்கே?

மாதுரன்—நின்னை விற்றுத் தா.

சம்வாககன்— அருள் செய்க. என்னை அரச வீதிக்கண் கொண்டு செல்வீர்களாக.

மாதுரன்— செல்.

சம்வாககன்— அங்ஙனமே. (சுற்றி வருகின்றான்.) ஐயன்மீர்! இச் சூதுகளத் தலைவனிடத்திலிருந்தும் பத்துப் பொற்காசுகளுக்கு என்னை விலைக்கு வாங்குவீர்களாக. (ஆகாயத்தை நோக்கி) "என்ன வேலை செய்வாய்" என்று கேட்கிறீர்கள்? நும் இல்லத்தில் ஏவலாளாக இருப்பேன். என்ன மறுமொழி தராமற் போய்விட்டானே! இது நிற்க. மற்றொருவனாகிய இவனை நோக்கிப் பேசுகின்றேன். ([1]மீண்டும் அதனையே சொல்கின்றான்.) இவனும் மறுமொழி தராமல் என்னை அவமதித்துப் போய் விட்டானே! ஆ! மாட்சிமிக்க சாருதத்தர் செல்வம் இழந்திருக்குங்கால் இப்பேறிலனாகிய யான் சீவித்திருக்கின்றேன்!

---

[1] ஐயன்மீர் என்று முன் கூறிய சொற்றொடர்களையே கூறுகின்றான்.

மாதுரன்— ஏட! கொடு.

சம்வாககன்—எப்படிக் கொடுப்பேன்? (என்று வீழ்கின்ருன்.)

(மாதுரன் இழுக்கின்ருன்.)

சம்வாககன்—ஐயன்மீர்! காப்பாற்றுங்கள்; காப்பாற்றுங்கள்.

(அதன்பின் தருத்துரகன் வருகின்ருன்.)

[1]தருத்துரகன்—சூதாடலோ ஆடவனுக்கு அரியணையொன்று மாத்திரம் நீங்கிய அரசியலேயாகும்.

63. [2]மானத்தி னழிவி யாண்டும்
மதித்தலில் வண்ணத் தானும்,
வானுற்ற பொருளை யென்றும்
வழங்கலோ டழித்த லானும்
தானத்திற் பெருமா யத்தில்
தகுநெறி காண்ட லானும்
ஈனுற்ற சூது செல்வர்
இசைவுறாஉம் அரசை யொப்பாம்.

---

[1] தருத்துரகன் மற்ருெரு சூதனுவான்.

[2] இப்பாட்டில் சூது அரசையொப்பாம் என்பது விளக்கப்பட்டுள்ளது. மானக்கேட்டைப் பொருட்படுத்தாமையானும், மானக்கேடு வருமெனச் சிறிதும் எண்ணாமையானும், பொருளை ஆக்கலும் அழித்தலும் செய்தலானும், நிலப்பரப்பினின்றும் பெரிய ஊதியத்தைப் பெறுதற்குரிய வழியைப் பார்த்தலானும் முறையே அரசும் சூதும் ஒப்பாம் என்பது. தானம் - நிலப்பரப்பு; சூதாடுகளம். பெரும்ஆயம் எனவும், பெருமாயம் எனவும் கொள்க. ஆயம் - ஊதியம். மாயம் - வஞ்சகம். ஈன் - இவ்வுலகம். செல்வர் இசைவுறல் இரண்டிற்குமாம்.

இன்னும்,

64. [1]பொருள்வரல் சூதினாற் பொருந்து நண்பரும்
மருள்விழிப் பெண்டிரும் வாய்ப்பர் சூதினால்,
அருள்கொடை போகமும் அமையுஞ் சூதினால்;
உருவுறும் இவையெலாம் ஒழியுஞ் சூதினால்.

இன்னும்,

65. [2]எதிரிக் கோரிருக் கால்விழ வென்பொருள்
உதிரு மென்மெ யுலரும் பகடையாற்
பதியும் பன்னிரண் டீயும் படர்வழி
விதியிற் கட்டலின் வீவுற் றிரிவனால்.

(எதிரிற் பார்த்து) முன்னர் நமது சூதாடு களத்துக்குத் தலைவனாக இருந்த இம்மாதுரன் இதோ இங்கே வருகின்றான். நேர்வன நேர்க. கடத்தற்கு ஆற்றலில்லாதவனாக இருக்கின்றேன். ஆதலின் என் உடலை ஆடையான் மறைத்துக்கொள்வேன். (தன்னைக் காணக்கூடாதவாறு பல வகையான அபிநயஞ்செய்து மறைத்துக்கொள்ளும் துணிவுடன் இருக்கின்றான். மேலாடையைப் பார்த்து)

66. [3] நூலிற்ற திவ்வாடை நொய்ய பலதுளைக
ளாலுற் றிலங்குமிவ் வப்டரமே—சாலப்

---

[1] பொருள்வரல் முதலிய எல்லாம் வென்றியானும், அவ்வெல்லாம் ஒழிதல் தோல்வியானும் ஆமென்க.

[2] எதிரிக்குப் பன்னிரண்டு வீழ்ந்தால் அஃது யான் செல்லும் வழியைக் காட்டும்; தோற்றோடுவேன் என்பதாம்.

[3] இதனால் சூதாடுவோரின் வறுமை நிலை புலப்படும் என்பதாம்.

பிடித்துடலிற் போர்த்தநிலாப் பெற்றியாமீது
மடித்துச் சுருக்கவுறுமற்று.

அன்றி ஏனழயாகிய [1]இவன் என்செய்வான்? யானோ,

67. [2]பாதம் ஒன்றுவிண் பற்றவும் ஒன்றுதாஅய்ப்
பூத லத்திற் பொருந்தவும் இங்ஙனம்
ஆத வன்னுதித்து அண்ணிய மேல்கடற்
போதுங் காறும் புறத்தில் திரிவனால்.

மாதுரன்—கொடுக்கச் செய்; கொடுக்கச்செய்.

சம்வாககன்—எவ்வாறு கொடுப்பேன்?

(மாதுரன் இழுக்கின்றான்.)

தருத்துரகன்—ஓ! ஈதென்ன எதிரில் நிகழ்வது? (ஆகாயத்தை நோக்கி) "சூதாடியாகிய சம்வாககனைச் சூதுகளத் தலைவன் அல்லற்படுத்துகின்றான். விடுவிப்பார் ஒருவருமிலர்" என்றா நீங்கள் சொல்லுகின்றீர்கள்? இத் தருத்துரகனாகிய யான் விடுவிப்பேன். (அணிமைக்கண் எய்தி) வழிவிடுங்கள்; வழிவிடுங்கள். (பார்த்து) ஆ! வன்கண்ணனாகிய மாதுரனா? இச்சம்வாககனும் வலியிழந்தவன்.

---

[1] யான் என் செய்வேன்? என்பது பொருள்.

[2] இடைவிடாமற் பகற்கால முழுதும் அலைந்து திரிவேன் என்பான், ஒருகால் விண்ணிலும் மற்றொருகால் நிலத்தினுமாக உள்ளேன் என்றான். இவ் வெளிய நிலையிலுள்ள யான் யார்க்கும் அஞ்சேன் என்பது கருத்து.

68. [1]இரவெலாங் கொம்ப ரினடயசை வற்றே
இருந்தலை கவிழ்வுற் றுறங்கி
விரவிய சொறியை யோட்டினல் உராய்த்து
மிகுவடு முதுகெலாம் படைத்துப்
புரைதரு நாய்கள் நாடொறும் முழந்தாட்
பூட்டினிற் கௌவினின் றுட
விரவுமிச் செயலால் மெல்லிய னுமிவ்
வீணற்குச் சூதினுற் பயனென்?

நிற்க. மாதுரனையே சாந்தப்படுத்துகின்றேன் [அணிமைக்கண் எய்தி] மாதுர! வந்தனஞ் செய்கின்றேன்.

மாதுரன்— (எதிர் வணக்கஞ் செய்கின்றன்.)

தருத்துரன்—ஈதென்னை?

மாதுரகன்— இவன் பத்துப் பொற்காசு கடன் செலுத்தல் வேண்டும்.

தருத்துரகன்—இக்காசு [2]பழஞ்சோற்றளவினதே.

மாதுரன்— (தருத்துரகன் தோளிடுக்கிற் சுருட்டி வைத்திருக்கும் மேலாடையை இழுத்து) ஐயன்மீர்!

---

[1] செல்வம், கவலையின்மை, உடலுழப்பின்மை, மென்மைத் தன்மை, செல்வக்குடிப்பிறப்பு முதலியவையுடையார்க்கே சூதாடல் நன்ரும். இவையொன்றுமில்லாத இவற்கு வரக்கடவ பயன் யாதும் இன்றென்பதாம். மெல்லியன் என்பது இகழ்ச்சிக் குறிப்பு; வல்லுடலுடையான் என்பதாம்.

[2] பழஞ்சோறு போல மிகச் சிறியது என்பதாம்.

பாருங்கள்! பாருங்கள்! கந்தையை யுடுத்தும் இம் மனிதன் பத்துப் பொற்காசுகளைப் பழஞ்சோறென்று இழித்துக் கூறுகின்றான்.

தருத்துரகன்— ஏட! மடவோய்! அப்பத்துப் பொற்காசுகளையும் நான் கவருடலினால் வென்று தருவேன். [1]பொருளுடையான் அதனைத் தன் மார்பின் கண்ணே வைத்துக்கொண்டு வெளிக்காட்டுகின்றானா? ஏட!

69. [2]ஐயிரு காசினால் ஆனனஞ் சிவந்து
எய்தினை தனைத்தெறற்கு ஏற்றதீவினை
செய்தியைம் பொறியொடு சேர்ந்து வாழுமிந்
நொய்யவன் தன்னைநீ நோவக் கொல்கின்றாய்.

மாதுரன்— ஐய! நினக்குப் பத்துப் பொற்காசுகள் பழஞ்சோறாகும். எனக்கு இவையே நிறைந்த செல்வம்.

தருத்துரகன்—அங்ஙனமாயின் கேட்பாயாக. இவனுக்கே வேறாக இன்னும் பத்துப் பொற்காசுகளைக் கொடு. இச்சம்வாககன் மீண்டும் சூதாடல் செய்வானாக.

மாதுரன்—அதனால் ஆவதென்?

---

[1] ஒருவன்பால் ஆரவாரத்தாலும் அஃதின்மையாலும் பொருளினது உண்மை இன்மைகளைத் துணிதல் இயலாதென்பதாம். பொருளுடையான் அடக்கமாகவும் இருத்தல் கூடும் என்பது கருத்து.

[2] ஐம்பொறியுணர்ச்சியுடைய நீ அவ்வுணர்வுடைய நின் இனமாகிய இச் சம்வாககனைக் கொல்கின்றாயாதலால், உனக்கே கேடு பயக்கும் தீவினைபுரிபவனாகின்றாய் என்பதாம்.

தருத்துரகன்— வெற்றியடைவானாயின் அப்பொழுதே கொடுத்துவிடுவான்.

மாதுரன்— வெற்றியின்றேல்?

தருத்துரகன்— கொடுக்கமாட்டான்.

மாதுரன்—இனிப்பயனின்றிமொழிதல்தக்கதன்று. வஞ்சக! இங்ஙனம் தயை கூர்ந்து பேசுகின்ற நீ கொடு. சிறந்த சூது அறிவினையுடைய மாதுரனாகிய யானே சூது முறையைப் [1]பொய்ப்படுத்துவேனோ? வேறு எவனுக்கும் அஞ்சுவேன் அல்லேன். தூர்த்த! நீயே சூது விதிக்கு மாறுபட்டு ஒழுக்கம் தவறியவன் ஆகின்றாய்.

தருத்துரகன்— ஏட! யார் ஒழுக்கம் தவறியவன்?

மாதுரன்— நீயே ஒழுக்கம் தவறியவன்.

தருத்துரகன்—உன் அப்பன் ஒழுக்கம் தவறியவன். (சம்வாககனைத் தப்பியோடும்படி குறிப்பிடுகின்றான்.)

மாதுரன்— தேவடியாள் மகனே! [2]இவ்வாறே நீ சூதாடல் செய்தனை?

---

[1] வென்றவனுக்குத் தோற்றவன் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுக்கச் செய்தலே சபிகனாகிய என் கடமை. அவன் கொடாமல் ஓடவிட்டுவிடுதல் சூது முறைமை அன்று. சிறந்த சூதனாகிய யானே அம்முறை பிழைபடச் செய்யேன் என்பது கருத்து.

[2] நெடு நாளாக இங்ஙனம் அறநெறி பிறழ்ந்து சூதாடினையோ? என்பதாம்.

தருத்துரகன்— யான் [1]இவ்வாறே சூது விளையாடல் செய்தேன்.

மாதுரன்— ஏட! சம்வாகக! அப்பத்துப் பொற்காசுகளைக் கொடு.

சம்வாககன்— இப்பொழுதே கொடுத்துவிடுவேன், எப்படியேனும் முழுதும் கொடுத்துவிடுவேன்.

(மாதுரன் இழுக்கின்றான்.)

தருத்துரகன்— மூர்க்க! யான் இல்லாதபொழுது நீ இவனைத் துன்புறுத்தலாம்; என் முன்னிலையில் அவ்வாறு செய்தல் கூடாது.

(மாதுரன் சம்வாககனை இழுத்து முடக்கிய கையினால் மூக்கிற் குத்துகின்றான். சம்வாககன் இரத்த மொழுக மயக்கமுறுதலை அவிநயஞ் செய்து நிலத்தில் வீழ்கின்றான். தருத்துரகன் அணிமைக்கண் எய்தி மீண்டும் அடிவிழாமல் தடைப்படுத்துகின்றான். மாதுரன் தருத்துரகனை அடிக்கின்றான. தருத்துரகன் திருப்பி அவனைப் புடைக்கின்றான்.)

மாதுரன்— ஏட! ஏட! வியபிசாரி மகனே! என்னை அடித்ததற்குப் [2]பயனையும் அடைவாய்.

தருத்துரகன்—ஏட! அறிவிலாய்! வழியிற் செல்லுகின்ற என்னை நீ அடித்தாய்; நாளை நீதி

---

[1] பிறர்க்குத் துன்பம் விளைவியாமலே என்பதாம்.

[2] பயன்- அரசதண்டம்.

மன்றத்தில் அடிப்பாயாயின் அப்பொழுது [1]பார்ப்பாய்.

மாதுரன்— யான் பார்ப்பேன்.

தருத்துரகன்— எவ்வாறு பார்ப்பாய்?

மாதுரன்— (கண்களைத் திறந்துகொண்டு) இவ்வாறு பார்ப்பேன்.

(தருத்துரகன் மாதுரன் கண்களைப் புழுதியினால் நிரப்பிச் சம்வாககனை ஓடும்படி குறிப்பிடுகின்றான். மாதுரன் கண்களை மூடிக் கொண்டு நிலத்தில் வீழ்கின்றான். சம்வாககன் ஓடுகின்றான்.)

தருத்துரகன்— (தனக்குள்) சூதுகளத் தலைவருட் சிறந்த மாதுரனோடு எனக்குப் பகைமை யுண்டாயிற்று. ஆதலின் இங்கு இருத்தல் நன்றன்று. "ஆரியகன் என்னும் பெயரினையுடைய இடைச் சிறுவன் அரசன் ஆவான் என்று பொருளுரையாளனாகிய சித்தன் கட்டளையிட்டுள்ளான். நம் போன்றார் எல்லோரும் அவ்வாரியகனைப் பின்பற்றுவார்கள்" என்று என் அன்புள்ள நண்பனாகிய சருவிலகன் கூறினான். ஆதலின் யானும் அவன் பக்கலையே எய்துகின்றேன். (என்று போகின்றான்.)

சம்வாககன்— (அச்சத்தோடு சுற்றிப்பார்த்து) இது முன்னர் அறியப்படாத ஒருவனுடைய இல்லம்; இதன் பக்கவழி திறக்கப்பட்டிருக்கிறது. ஆதலின், இதன்கட் புகுகின்றேன். (உட்புகுதலை யவிநயித்து வசந்தசேனையைப் பார்த்து) பெருமாட்டி அடைக்கலம் புகுகின்றேன்.

---

[1] அவ்வரசதண்டம் யார்க்குக் கிடைக்கும் என்பதை அறிவாய் என்பதாம்.

வசந்தசேனை—அடைக்கலம் புகுந்த நீ அஞ்ச வேண்டா. சேடீ! பக்க வழியை மூடு.

(சேடி அங்ஙனஞ் செய்கின்றாள்.)

வசந்தசேனை— நீ யார்க்கு அஞ்சுகின்றாய்?

சம்வாககன்—பெருமாட்டீ! [1]பொருளாளனுக்கு.

வசந்தசேனை— சேடீ! [2]அப்படியானால் பக்க வழியைத் திறந்து வை.

சம்வாககன்—(தனக்குள்) பொருளாளனால் எனக்கு உண்டாகிய அச்சத்தின் காரணம் இவளுக்கு எப்படி எளிதாயிற்று? பின் வரும் இது நன்றுணர்ந்து கூறப்படுகின்றது.

70. ஒருங்கிய தன்வலி யளவை ஓர்ந்துபின்,
[3]சுருங்கிய சும்மையைச் சுமக்கும் ஆடவன்
நெருங்கிய தருவனம் நெடிது செல்லினும்
வருந்தலும் வீழ்தலும் வாய்த்தி லானரோ.

இவ்விடத்தில் என்னை இவள் [4]நன்கறிந்திருக்கின்றாள்.

---

[1] பொருளாளன் - கடன்கொடுத்தவன்.

[2] கடன் கொடுத்தவனுக்குக் கடனைச் செலுத்தி இருவர்க்கும் நலம் புரிவோம் என்பது கருத்து.

[3] சுருங்கிய சும்மை - தன் வலிக்குக் குறைந்த சுமை. பொருளாளற்குக் கடனைக் கொடுத்து இவனைக் காத்தல் இவள் செல்வ நிலைக்கு எளிதாதலின் இங்ஙனம் கூறப்பட்டது.

[4] யான் சூதில் தோற்று வந்தேன் என்பதை நன்கறிந்துள்ளாள் என்பதாம்.

மாதுரன்—(கண்களைத் துடைத்துச் [1]சூதனை நோக்கி) ஏடா! கொடு. கொடு.

சூதன்—ஐய! நாம் தருத்துரகனேடு கலகஞ் செய்துகொண்டிருக்கும் காலத்திலேயே அச்சம்வாக கன் ஓடி விட்டான்.

மாதுரன்—அச் சம்வாககனது மூக்கு என் கைக் குத்தால் உடைந்து போயிற்று. ஆதலின் வா. இரத் தம் தோய்ந்த வழியைத் தொடர்ந்து செல்வோம்.

(தொடர்ந்து சென்று.)

சூதன்—ஐய! அவன் வசந்தசேனையின் இல்லத்தை அடைந்தான்.

மாதுரன்—[2]பொற்காசுகள் தொலைந்தனவோ!

சூதன்—நீதிமன்றஞ் சென்று தெரிவித்துக்கொள் வோம்.

மாதுரன்—இவ்வஞ்சகனுகிய சம்வாககன் இவ் வில்லத்தினின்றும் வேறிடத்திற்கு நாம் காணுதவாறு போய்விடுவான். ஆதலின் தடைப்படுத்திப் பிடித்து விடுவோம்.

([3]வசந்தசேனை மதனிகைக்குக் குறிப்பில் தெரிவிக் கின்ருள்.)

---

[1] சூதனைச் சம்வாககனுக மயங்கிக் கூறுகின்ருன்.

[2] ஓகாரத்தால். சம்வாககன் இருப்பிடம் அறியப் பட்டமையால் நமக்கு வரவேண்டிய பணம் போய்விடா தென்பது போதரும்.

[3] சம்வாககன் வரலாற்றை வினவுக என்று குறிப்பிடு கின்ருள்.

மதனிகை—ஐய! எவ்விடத்திருந்து வருகின்றீர்? நீர் யார்? யாரைச் சார்ந்தவர்? எத்தொழில் கொண்டு சீவிக்கின்றவர்? யார்க்கு அஞ்சுகின்றீர்?

சம்வாககன்— அம்மா? கேளுங்கள். பெருமாட்டீ! யான் பாடலிபுத்திரம் என்னும் நகரிற் பிறந்தவன்; கிராமத் தலைவன் மகன்; உடம்பு பிடிக்குந் தொழிலாற் சீவிப்பவன்.

வசந்தசேனை—ஐய! பிறர்க்கு இன்பந் தரும் நல்ல கலையிற் பயின்றிருக்கின்றீர்.

சம்வாககன்—பெருமாட்டீ! இதுவும் [1]அறியத் தக்க கலை என்று பயின்றேன். அது வாழ்க்கைத் தொழிலாக ஆயிற்று.

சேடி—ஐய! மிகவும் வெறுப்புடன் மறுமொழி கூறுகின்றீர். அப்புறம். அப்புறம்.

சம்வாககன்—பெருமாட்டீ! அதன் பின்னர், யான் என் தந்தை யில்லத்தின்கண் வந்த துறவி முதலிய வழிச்செல்வோர் கூறக் கேட்டு, முன்னர்ப் பழகியறியாத நாட்டைக் காண்டலில் விருப்பமுடையனாய் இங்கு வந்தேன். இந்நாட்டில் இவ் உச்சயினீ நகரத்தை யடைந்து ஒப்பற்ற பெருந்தகை யொருவர்க்குப் பணிவிடை செய்தேன். அப்பெருந்தகையினரோ காண்டற்கு எல்லோராலும் விரும்பத் தக்கவர்; இன்சொலாளர்; தம் கொடைப் பெருமையைப் பிறரிடங்

[1] உடம்பு பிடிக்கும் இத்தொழிலை அறியத்தக்க கலை என்று முதலிற் பயின்றேன். பின் அதுவே வாழ்க்கைத் தொழில் ஆயிற்று என்பதாம்.

கூறுபவர் அல்லர்; நன்றல்லது அன்றே மறப்பவர். பலவாறு விரிப்பதென்? கண்ணோட்டத்தால் தம் உடல் பொருள் முதலிய எல்லாம் பிறர்க்கு உரியன வென்றே உணர்ந்தவர்; அடைக்கலம் புகுந்தார்க்கு அருள் செய்யும் வள்ளல்.

சேடி—எம்பெருமாட்டியின் நெஞ்சத்துள் விளங்கு கின்ற [1]காதற் கிழவன் உயர்குணங்களைக் கவர்ந்து இப்பொழுது உச்சயினி நகரத்தை அலங்கரிப்பவன் வேறு யாவன்?

வசந்தசேனை—நல்லது! சேடி! நல்லது. இங்ஙனமே யானும் நெஞ்சத்தால் நினைந்தேன்.

சேடி—ஐய! அப்புறம், அப்புறம்.

சம்வாககன்—பெருமாட்டீ! அவர் இப்பொழுது அளியுடன் கூடிய கொடைகளால்,

வசந்தசேனை—செல்வம் இல்லாதவர் ஆயினர் கொல்?

சம்வாககன்—யான் கூறுதற்கு முன்னரே பெரு மாட்டி அறிந்தது எப்படி?

வசந்தசேனை—இதன்கண் அறிய வேண்டுவ தென்ன? குணங்களும் செல்வமும் ஒருங்கமைதல் அரிது. [2]உண்ணுதற்குத் தகுதியில்லாத வாவியில் நீர் நிரம்பியிருக்கும்.

---

[1] சாருதத்தன்.

[2] கொடை முதலியவற்றாற் பிறர்க்குப் பயன் செய்யா தவன்பாற் செல்வம் நிரம்பியிருக்கும்; கொடையாளரிடத் துச் செல்வம் சுருங்கிவிடல் இயல்பேயாம் என்பதாம்.

சேடி—ஐய! அவர் எப் பெயரினை யுடையார்?

சம்வாககன்—அம்மா! நிலவுலகத்துத் திங்களஞ் செல்வராகிய அவர் பெயரை அறியாதார் யாவர்? அப்பெருந்தகையாளரோ வணிகர் தெருவில் வசிக்கின்றவர். "மாட்சி மிக்க சாருதத்தர்" என்று பாராட்டப்படும் பெயரினையுடையார்.

வசந்தசேனை— (மகிழ்ச்சியோடு இருக்கையினின்றும் இறங்கி) ஐய! [1]இவ்வில்லம் தங்களுடையதே. சேடி! இவர்க்கு இருக்கையைக் கொடு. சிவிறி கொண்டு இளைப்பாற்று. இவ்வையர் மிகவும் துன்புற்றிருக்கின்றார்.

(சேடி அவ்வண்ணஞ் செய்கின்றாள்.)

சம்வாககன்— (தனக்குள்) ஈதென்ன? மாட்சி மிக்க சாருதத்தரது பெயரைச் சொல்லிய அளவிலேயே எனக்கு இத்தகைய பெருமதிப்புக் கிடைத்தது. நன்று. ஐய! சாருதத்தரே! நன்று. நிலவுலகத்தில் தாங்கள் ஒருவரே [2]உண்மை வாழ்க்கையுடையீர். மற்றைய மாக்களெல்லாம் வீணே உயிர்ப்பு உடையராவர். (என்று அடிக்கண் வீழ்ந்து) பெருமாட்டி! அமைக. அமைக. இருக்கையில் இருத்தல் வேண்டும்.

---

1 காதற்கிழவராகிய சாருதத்தர்க்குப் பணி செய்தமையால் தன் இல்லத்தை அவனுடையது என்கின்றாள்.

2 எவன் வாழ்க்கையால் உலகத்திற் பலர் நல்வாழ்வெய்துகின்றார்களோ அவனே உண்மையான வாழ்க்கையுடையனாவன் என்பது கருத்து.

வசந்தசேனை— (இருக்கையில் அமர்ந்து) ஐய! [1]அப் பொருளாளன் எங்கேயுள்ளான்?

சம்வாககன்—

71. [1]நல்லோர் பிறர்க்குதவி நண்ணுங் குணச் செல்வர்;
நில்லாப் பொருள் எவர்க்கு நேராது?—புல்லும்
பெருமை மிகபபிறரைப் பேணுவோன் பேணும்
உரிமை பிறரால் உறும். (கரு)

வசந்தசேனை—அப்புறம்; அப்புறம்.

சம்வாககன்—அதன்பின் அப்பெருந்தகையாளர் அவ்வேலையையே எனக்குச் சீவனத் தொழிலாக இருக்கும்படி நியமனம் செய்தார். அவர் [2]சீலமாத்திரத்தால் எஞ்சியபின் யான் சூதாட்டலேயே பிழைப்புக்கு உரிய வழியாக மேற்கொண்டேன். பின்னர், ஊழின் மாறுபாட்டால் சூதில் பத்துப் பொற்காசுகளைத் தோற்றேன்.

---

[1] அப்பொருளாளன் எங்கே உள்ளான்? என்னும் வசந்தசேனை கேள்வி சம்வாககன் செவியிற்படாமையால் அவளுடைய உயர்குணங்களைப் பாராட்டுகின்றான். பிறர்க்கு உதவி புரியும் குணச்செல்வர் நல்லோராவர்; நிலையில்லாத பொருள் எவர்க்குத்தான் நேராது; கீழாயினோர்க்கும் நேரும் என்பதாம். பிறரைப் பெருமைமிகப் பேணுவோன் பிறரால் நன்கு பேணப்பெறுவான். ஆதலால் பிறரைப் பேணுதல் முதலிய உயர்குணங்கள் அமைந்த நீ என்னாற் பூசிக்கத் தக்கவளாவாய் என்பது கருத்து.

[2] சீலமாத்திரதால் எஞ்சல்-பொருள் முழுதும் தொலைய ஒழுக்கத்தளவில் இருத்தல்.

மாதுரன்— [1]கெட்டேன்; பொருளிழந்தேன்.

சம்வாககன் — சூதாடுகளத் தலைவன் சூதன் ஆகிய இவ்விருவரும் என்னைத் தேடுகின்றனர். பெருமாட்டியாகிய தாங்கள் எல்லாம் கேட்டறிந்தீர்கள். ஆதலின், இனித் தங்கள் கருத்தின் வண்ணமாக.

வசந்தசேனை—மதனிகே! [2]தங்குதற்கு உரிய மரங்கள் அசைவுற்றமையால் பறவைகள் இங்கும் அங்கும் சுழன்று திரிகின்றன. ஆதலின், சேடி! போ. சூதாடுகளத் தலைவன் சூதன் ஆகிய இவ்விருவரிடத்திலும் இவ்வையரே தந்தார் என்று இக் கை வளையலை நீ கொடு.

(என்று கையினின்றும் வளையலைக் கழற்றிச் சேடியினிடத்திற் கொடுக்கின்ருள்.)

சேடி—(பெற்றுக்கொண்டு) பெருமாட்டியின் கட்டளைப்படியே. (என்று போய்விடுகின்ருள்.)

மாதுரன்—கெட்டேன். பொருள் இழந்தேன்.

சேடி—இவ்விருவர்களும் உயரப் பார்த்துக்கொண்டிருத்தலானும், பெருமூச்செறிதலானும், அசைவற்றிருத்தலானும், வாயில் வழியை நோக்கிப் பேசிக்கொண்டிருத்தலானும், சூதாடுகளத் தலைவனும் சூதனும் ஆவர் என்று எண்ணுகின்றேன். (அணிமைக்கண் எய்தி) ஐய வந்தனம் செய்கின்றேன்.

---

[1] சம்வாககனைக் காணாமையால் இங்ஙனம் கூறுகின்ருன்

[2] ஆதரவாகவுள்ள வள்ளல் சாருதத்தர் செல்வம் இழந்து வறிதிருத்தலால் அவரைப் பற்றி வாழ்ந்தார் பலரும் பற்றுக்கோடின்றி வருந்துகின்றனர் என்பதாம்

மாதுரன்—நினக்கு நலம் உண்டாக.

சேடி—ஐயன்மீர்! உங்களில் சூதாடுகளத் தலைவன் யார்?

மாதுரன்—

72. [1]துடியிடை யுரிமையெத் தோன்றற் குற்றனே?
கடைவிழி நோக்கிநற் கலவியிற்சுவை
வடுவுற வயப்படா வாயினுன் மனம்
உடைதர இனியசொல் உரைக்கின்ருயரோ.

[2]என்பாற் பொருளில்லை. வேருேராடவன்பாற் செல்.

சேடி—இத்தகைய சொற்களைக் கூறுகின்றமை யால் நீ [3]சூதன் அல்லன். உனக்குக் கடன் செலுத்த வேண்டியவன் யாரேனும் உளனே?

மாதுரன்—உளன்; பத்துப் பொற்காசு கடன் செலுத்தல் வேண்டும். [4]அவனுக்கென்ன?

---

[1] துடியிடை விளி. எத்தோன்றற்கு உரிமையுடையாய் என்க.

[2] என்பாற் பொருளில்லை யென்றது அவளை மகிழ்வித் தற்கு இயலாமை குறித்து.

[3] "உங்களில் சூதாடுகளத் தலைவன் யார்" என்னும் வினவிற்குத் தான் அல்லனயின், "யானல்லேன்" என்றன்றே விடைகூறல் வேண்டும். அங்ஙனமின்றி, "என்பாற் பொருளில்லை" என்றமையால் நீ சூதன் அல்லன்; சபிகனே என்று கூறினுள் என்க.

[4] அவனுக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்ததுண்டோ? என்பதாம்.

சேடி—அவனுக்காக வசந்தசேனை இக்கைவளை யலைத் தருகின்றாள். அன்று; அன்று. [1]அச் சம்வாக கனே கொடுக்கின்றான்.

மாதுரன்—(மகிழ்வோடு பெற்றுக்கொண்டு) ஏடி! அக்குலமகனிடத்து, "நின் பிணை தீர்ந்துவிட்டது. வருக. மீண்டும் சூதாடி இன்புறலாம்" என்று கூறுவாயா?

(என்று மாதுரனும் சூதனும் போய்விடுகினறனர்.)

சேடி—(வசந்தசேனையின் பக்கலெய்தி) அம்மா! சூதாடுகளத் தலைவனும் சூதனும் மகிழ்ச்சியுடைய ராய்ப் போயினர்.

வசந்தசேனை—ஆதலின், ஐய! [2]சுற்றத்தாரை ஆற்றுவித்தற்பொருட்டுச் செல்லுங்கள்.

சம்வாககன்—பெருமாட்டி! அங்ஙனமாயின், யான் பயின்ற உடம்பு வருடும் தொழிற்கல்வியை நின் ஏவ லாளர்க்குப் பயிற்ற விரும்புகின்றேன்.

வசந்தசேனை—ஐய! இக்கலைப் பயிற்சி எவருக்குப் பயனும்படி முன்னர்ப் பணி செய்தீர்களோ அப் பெரு மாற்கே மீண்டும் அது செய்யத்தக்கது.

சம்வாககன்—(தனக்குள்) இவ்வம்மை சாமர்த்திய மாகத் தடுத்துவிட்டாள். எங்ஙனம் கைம்மாறு செய் வேன்! (வெளிப்படையாக) அம்மா! யான் சூதனால் விளைந்த இம் மானக் கேட்டால் பௌத்த சந்நியாசி

---

[1] சம்வாககனே கொடுக்கின்றான் என்று வசந்தசேனை கட்டளையிட்டதை நினைவுகூர்ந்து கூறுகின்றாள்.

[2] கடன் தீர்க்கப்பட்டது கூறி ஆற்றுவித்தற்கு என்க.

யாவேன். ஆதலின், "சம்வாககனுகிய சூதன் பௌத்த சந்நியாசியாயினுன்" என்னும் இத்தொடர்மொழியைப் பெருமாட்டி நினைவில் வைத்துக் கொள்ளல் வேண்டும்.

வசந்தசேனை—ஐய! ஆராயாது துணிதல்வேண்டா.

சம்வாககன்—அம்மா! இஃது ஆராய்ந்து துணிந்ததே.

(என்று அவ்விடத்தினின்றும் பெயர்ந்து)

72. நலமறு சூதினுல் நண்ணும் [1]நோயொடிவ்
வுலகினர்க்கு அஞ்சியே யொளித்து உறைந்தனன்
அலைவற இப்பொழுது அரசர் நீள்நெறி
குலவியே மறைவறக் கூடிச் செல்வனுல்.

(திரைக்குப் பின்னே கலகல வொலி.)

சம்வாககன்—(கேட்டு) ஓ! ஈதென்ன? (ஆகாயத்தை நோக்கி) "வசந்தசேனையினது தறிமுறி என்னும் இக்கொடிய யானை சுற்றித்திரிகின்றது" என்று கூறுகின்றீர்கள்? ஓகோ! பெருமாட்டியினது மதயானையின் பக்கல் சென்று பார்ப்பேன். அன்றி எனக்கு இதனுற் பயனென்? முன்னர்த் [2]துணிவுற்றபடி நிறைவேற்றுவேன். (என்று சம்வாககன் போகின்றுன். அதன்பின்னர்த் திரையை நீக்குதற்கு முன்னரே அழகிய ஆடை அணிகலன்களையுடையவனுய் மகிழ்ச்சியோடு கன்னபூரகன் வருகின்றுன்.)

கன்னபூரகன்—பெருமாட்டீ! எங்கே? எங்கே?

---

[1] நோய் - மனத்துன்பம்.

[2] துணிவுற்றதாவது: பௌத்தசந்நியாசியாதல்.

சேடி—சிறியவ! நின் பரபரப்பின் காரணம் யாது? முன்னிலையிலிருக்கின்ற அம்மையைப் பார்க்கின்றுயில்லை!

கன்னபூரகன்—(பார்த்து) அம்மா! வணங்குகின்றேன்.

வசந்தசேனை—கன்னபூரக! மகிழ்ச்சியான் மலர்ந்த முகம் உடையவனுய்க் காணப்படுகின்ருய். ஆதலின் ஈதென்ன?

கன்னபூரகன்—(வியப்போடு) பெருமாட்டீ! இப்பொழுது கன்னபூரகனது ஆண்மையை நீங்கள் பாராமையால் ஏமாற்றம் அடைந்தீர்கள்.

வசந்தசேனை—கன்னபூரக! என்ன? என்ன?

கன்னபூரகன்—அம்மா! கேளுங்கள். பெருமாட்டியினது தறிமுறி என்னும் பெயர்விளக்கம் மிக்க கொடிய யானை, கட்டுத்தறியை முறித்துப் பாகனையும் கொன்று சனங்களுக்கு மிக்க அச்சத்தை விளைவித்து அரசவீதியைச் சார்ந்தது. பின்னர் இவ்வமயத்தில் சனங்கள் பின்வருமாறு உரக்கக் கதறினர்.

74. நெறிதிரி சிறுர்களைப் பிறிதிடங் கொணர்மின்!
கொம்பரும் இல்லத்து உம்பரும் ஏறுமின்
பொல்லாக் களிறு ஈண்டுஒல்லை யிற்கொதித்து
[1]அண்டலை முன்னர்க் கண்டிலிர் கொல்லோ?

இன்னும்,

75. மங்கையர் அணிசிலம்பு எங்கணும் ஒருவின;
மணியார் தரவொளிர் அணிமே கலைகளும்

[1] அண்டல் - நெருங்கி வருதல்.

[1]முளைநிகர் பல்மணி நளிதர அழுத்திய
எழில்மிகு வளையலும் பழுதுறீஇச் சிதைந்தன.

அதன்பின, தன் கை கால் தந்தங்களால், அலர்ந்த தாமரைத் தடாகத்தைக் கலக்குதல்போல், உச்சயினீ நகரத்தைக் கலக்குகின்ற அக்கொடிய யானை, ஒரு துறவியைப் பிடித்துக்கொண்டது. பின்னர் அச்சத்தால் முக்கோலும் கரகமும் நழுவும்படி அச் சந்நியாசியைத் துதிக்கைநுனி யுமிழும் நீர்த்துளிகளால் நனைத்துக் கோடுகளின் நடுவண் வைத்தது. அவனைப் பார்த்துச் சனங்கள் மீண்டும், "ஆ! சந்நியாசி கொலை செய்யப் படுகின்றான்" என்று கதறினர்.

வசந்தசேனை— (நடுக்கத்தோடு) ஐயையோ! கேடு விளைந்தது; கேடு விளைந்தது.

கன்னபூரகன்—நடுங்கல் வேண்டா. பெருமாட்டீ! முற்றும் கேட்டல் வேண்டும். அதன்பின்னர், அறுபட்டலைகின்ற சங்கிலிகளையும், கோடுகளின் நடுவண் வைக்கப்பட்ட சந்நியாசியையும் சுமக்கின்ற அவ் யானையைப் பார்த்துக் கன்னபூரகனாகிய யான்-இல்லை; இல்லை. பெருமாட்டியளித்த சோற்றால் வளர்ந்த ஏவலனாகிய யான், சூதாடுகளத்துள்ள ஒருவனைக்கூவிக்கூவி அவன் வாராமையால், கடையிலுள்ள இருப்புத்தடியை என் இடது காலால் விரைந்தெடுத்துக் கொண்டு அக் கொடிய யானையை அழைத்தேன்.

வசந்தசேனை—அப்புறம். அப்புறம்.

---

[1] முளையைப்போல் ஒளிவிடும் பல மணி யென்க. நளிதர - நெருங்க.

கன்னபூரகன்—

76. விந்திய மலைக்குவடெனச்சினம் மிகுத்தே
வந்தமத தந்திமிசை வல்லை [1]அய தண்டம்
உந்தியதன் வீற்றினையொ ழித்தென்வலி யாலே
தந்தநடு வட்புகு தவத்தனை விடுத்தேன்.

வசந்தசேனை—நின் செயல் நன்று. அப்புறம். அப்புறம்.

கன்னபூரகன்—அதன்பின் அம்மா! "ஏ கன்னபூரக நன்று நன்று" என்னும் இதனை மாத்திரம் கூறிக்கொண்டு உச்சயினியிலுள்ள எல்லோரும் யான் இருக்குமிடத்தில் ஒருங்கு கூடிவிட்டனர். அதனால் அந்நகர் ஒரு பக்கத்திற் சுமைமிக்க தோணியைப்போலாயிற்று. பெருமாட்டீ! அதன பின்னர் என்னால் அறியப்படாத ஒருவர் தம் உடலில் அணிகலன்கள் அணிதற்கு உரிய உறுப்புக்களைத் தட்விப் பார்த்து, அவை வெறுமையுற்றிருத்தலான் உயரப் பார்த்து நெட்டுயிர்ப்பெறிந்து இம்மேலாடையை என்பாற் சேர்த்தனர்.

வசந்தசேனை—கன்னபூரக! இம்மேலாடை சாதி மலர்களின் மணமுள்ளதா? அன்று? என்று அறிக.

கன்னபூரகன்—அம்மா! யானையின் மதமணத்தால் அச் சாதிமலர் மணத்தை நன்கு அறிகின்றேன் இல்லை.

வசந்தசேனை—பெயரையாவது பார்.

கன்னபூரகன்—இப்பெயரைப் பெருமாட்டியே படிக்கவேண்டும். (என்று மேலாடையை விரித்துக் காட்டுகின்றான்.)

---

[1] அயதண்டம் - இருப்புத்தடி.

வசந்தசேனை—"மாட்சிமிக்கசாருதத்தருடையது"

[என்று படித்து அவாவுடன் வாங்கிப் போர்த்துக் கொள்ளுகின்றாள்.]

சேடி—கன்னபூரக! இம் மேலாடை நம் பெருமாட்டிக்கு அழகு செய்கின்றதா?

கன்னபூரகன்—ஆம். இம்மேலாடை நம் பெருமாட்டிக்கு அழகு செய்கின்றது.

வசந்தசேனை—கன்னபூரக! இவ் வணிகலன் நினக்குப் பரிசிலாகும், (என்று ஆபரணத்தைக் கொடுக்கின்றாள்.)

கன்னரபூரகன்—(பணிவுடன் பெற்றுக்கொண்டு வணங்கி) இப்பொழுது பெருமாட்டிக்கு மேலாடை நன்றாக அழகு செய்கின்றது.

வசந்தசேனை—கன்னபூரக! இவ்வமயம் மாட்சி மிக்க சாருதத்தர் யாண்டுள்ளார்?

கன்னபூரகன்—இவ்வழியாகவே இல்லத்தை நோக்கிச் சென்றார்.

வசந்தசேனை—சேடீ! வீட்டின் மேல்தளத்து வாயிற் பக்கத்துள்ள மேடையில் ஏறி மாட்சி மிக்க சாருதத்தரைப் பார்ப்போம்.

(எல்லோரும் போய்விடுகின்றனர்.)

"சூதர் நிலை" என்னும்

## இரண்டாம் அங்கம் முற்றிற்று.

# [1]மூன்றும் அங்கம்

## கன்னமிடல்

[அதன்பின் [2]சேடன் வருகின்றான்]

சேடன்:

77. தூய சீலமும் தொண்டுசெய்
வோரிடத்து அருளும்
மேய நாயகன் பொருளிலன்
என்னினும் மேலோன்
ஆய அப்பொருட் செருக்குறீஇப்
[3]பயன்செயும் அமயம்
[4]காயுங் தீயவன் தலைவனுக்
கருதுதற்கு அமையான்.

---

[1] இம் மூன்றும் அங்கத்தில், வசந்தசேனையின் சேடியாகிய மதனிகையின்பாற் காதல் கொண்ட சருவிலகன் என்னும் களவுத் தொழிலையுடைய ஒரு பிராமணன், சாருதத்தன்பால் அடைக்கலமாக வைக்கப்பட்ட வசந்தசேனையின் அணிகலன் களைக் களவு செய்தல் கூறப்படுகின்றது.

[2] சாருதத்தனுடைய ஏவலாளாகிய வருத்தமானகன்; அடைக்கலப் பணிகளைப் பகலிற் காக்கும்படி நியமிக்கப் பட்டவன்.

[3] பயன்செயும் அமயம்-பணியாளர்க்குக் கூலி முதலியன கொடுக்கும் காலம். [4] காய்தல் - வெகுளல்.

78. [1]பைங்கூழ் இரைமேயப் பற்றித் திரிஎருதும்
தங்காது அயலான் தலைப்புகூஉம்-மங்கையரும்
சூது விழைவோரும் தொல்லியற்கை யாம்பிழையும்
ஓதும் தடைக்கண் உரு.

பெருமான் சாருதத்தர் இசைகேட்கச் சென்று நெடுநேரம் ஆயிற்று; நடுநிசியும் கடக்கின்றது; இன்னும் வந்திலர். ஆதலின், வீட்டு வெளியாயிற் புறந்திண்ணைக்கண் எய்தி உறங்குவேன். (என்று அங்ஙனம் செய்கின்றான்.)

(அதன்பின் சாருதத்தனும் விதூடகனும் வருகின்றனர்.)

சாருதத்தன்—ஆ! ஆ! இரேபிலன் பாடிய இசை நன்று. நன்று. யாழோ கடலிற் பிறவா இரத்தினம். என்னை?

79. [2]காலமாற் றுது காமம்விஞ் சினர்க்குக்
கருத்துற இசைந்தநற் றோழி;
கோலுமோர் குறிக்கட் கூடல்நீட டிப்பிற்
கொளும்அயர்வொல்லையின் ஒழிக்கும்;

---

[1] கொடை முதலியவையும் அளவின்மிகிற் குற்றமாதலானும், அதனை இயற்கையின் மேற்கொண்ட தலைவன் நல்குரவுற்றும் ஒழிவெய்திலனாதலானும் சேடன் இங்ஙனம் கூறினான்.

[2] தோழியாகும் என்க. இச்செய்யுளின் நான்கடிகளானும் முறையே யாழானது, கூட்டமின்றிக் காட்சி முதலியவற்றால் காதன் மிக்க தலைவன் தலைவி ஆகிய இருவரையும் தோழியாம் நிலையினின்று உள்ளத்தை ஒன்றுபடுத்துக் கூட்டுவிப்பது என்பதூஉம், களவுப் புணர்ச்சியில் தலை

மாலுறப் பிரிவாம் நோய்மிகுத் தவரை
மகிழ்தர உடன்நிலை நிறுத்தும்;
பாலுறும் அன்பிற் கூடினர்க்கு ஆசைப்
பரவையை உவகையிற் பெருக்கும்.

விதூடகன்—ஓ! வருக! இல்லம் எய்துவோம்.

சாருதத்தன்—ஆ! இரேபிலன் பாடிய இசை மிக நன்ருக இருந்தது.

விதூடகன்—எனக்கோ இரண்டு செயல்கள் நகைப்பை உண்டாக்குகின்றன. ஒன்று பெண்மகள் வடமொழியைப் படித்தல்; மற்ருென்று ஆண்மகன் சூக்கும இன்னிசை பாடுதல். வடமொழியைப் படிக்கும் பெண்மகள், புதிதாக மூக்குக் கயிறு கோக்கப்பட்ட இளம்பசுவைப் போல மிகவும் "சூ சூ" என்று ஒலிக்கின்ருள். சூக்கும இன்னிசை பாடும் ஆண்மகன் மெல்லிய மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்து கொண்டு மந்திரம் செபிக்கின்ற கிழப்பருவப் புரோகிதனை ஒக்கின்ருன். இவ்விருவரும் எனக்கு இன்பம் பயப்பவர் அல்லர்.

சாருதத்தன்—நண்ப! இன்று இரேபிலன் பாடிய இசை மிகவும் நன்ருக இருந்தது. நீ மகிழ்கின்ருய் அல்லை.

---

வன் தலைவி இருவருள் ஒருவர் குறியிடத்து வரவு நீட்டிக்குங்கால் ஆங்கு முதற்கட் சென்று வரவெதிர்பார்த்து அச்சமும் காதலும்அதிகரிக்கப்பெற்ற மற்ருெருவர்க்கு ஆறுதலளிப்பது என்பதூஉம், கூடிய காதலன் காதலி இருவர்க்கும் தெய்வ வயத்தாற் பிரிவு நேர்ந்துழி அத்துன்பத்தால் அசைவு பிறவாது நிலையுறச் செய்வது என்பதூஉம், துன்பம் விலக்கல் மாத்திரையான் அமையாது கூடியின்புறுவார்க்கு மேன் மேலும் இன்பம் விளைவிப்பது என்பதூஉம் புலனும்.

80. [1]கருவியும் மிடறும் ஒன்றுதல் மதுரங்
கனிதரல் சமநிலை விளக்கம்
உரியபல் சுவையும் மென்மையும் உறுதல்
உளத்தினைத் தன்வயம் ஈர்த்தல்
மருவும்அக் கீதப் பெருமைஎன் நாவான்
மலிதர வுரைத்தலிற் பயனென்?
கருதுநல் இசைதேர் அரிவை ஆண் உருவிற்
கரந்தன ளோஎன நினைந்தேன்.

81. [2]வன்னத்தின் ஏற்றமோடு இழிவு தம்முள்
வயங்குநடு ஈறுஉச்சம் மந்தம் ஆதல்
துன்னியதா ளத்திசைவின அடங்கல் மீண்டும்
தொடங்கல்இவை எளிது அமைதல் சுவையாற் பின்னும்

---

[1] கருவியும் மிடறும் ஒன்றுதல்-வீணையொலியும் மிடற்றொலியும் பிரிப்பின்றி இயைந்து நிகழ்தல். மதுரம்-இசை, கருத்து இவைகளுக்கேற்ற இனிய எழுத்துக்களும் சொற்களும் அமைதல். சமநிலை-இசை ஆளத்தியெடுக்குங்காலும், சுரங்களை அடுக்கிப் பாடுங்காலும் வேறுபாடு தோன்றுவண்ணம் ஒன்றுபடுதல். விளக்கம்-இசைபாடுங்கால் அவ்விசைப் பாடலின் சொற்பாகுபாடுகளும் விளங்கச் செய்தல். பல் சுவை-இன்பச்சுவை முதலியன.

[2] வன்னம்-இராகநிலையை நிருணயிக்கும் சுரங்களின் விசேடம். ஏற்றம்-ஆரோகம். இழிவு-அவரோகம். நடு ஈறு: உச்சம் மந்தம் என்பவற்றை நிரனிறையாககொண்டு நடு உச்சம், ஈறு மந்தம் என இயைக்க. ஆளத்தியெடுக்குங்கால் மத்தியநிலையில் எடுத்தும், முடிவுநிலையிற் படுத்தும் பாடல் வேண்டும் என்பதாம். எளிதாதல்-அநாயாசமாதல். சுவை பற்றி மீண்டும் மீண்டும் கூறுதல என்க.

பன்னுதல்இந் நலம்அமையச் சுரங்கள் கூட்டிப்
பாடுபவன் மிடற்றிசையும் பகர்நல் யாழின்
மன்னிசையும் இசைக்காலங் கடந்துங் கேட்டு
மகிழ்பவன்போற் செல்கின்றேன் உண்மை
யீதால்.

விதூடகன்—ஓ! நண்பரீர்! அங்காடித் தெருக்களிலுள்ள நாய்களும் நன்றாக உறங்கிவிட்டன. ஆதலின், இல்லம் எய்துவோம். (எதிரே பார்த்து) நண்பரீர்! பாருங்கள்; பாருங்கள். இத் திங்களஞ்செல்வன் இருள் வருதற்கு அவகாசம் கொடுப்பவன்போல் விட்புலமாகிய மேல் மாளிகையினின்றும்[1] இறங்குகின்றான்.

சாருதத்தன்—நீ நன்று கூறினாய்!

82. [2]நீரில் மூழ்கிய வனசரக்
களிற்றுடை முகத்திற்
கூரியன்ற அக் கோட்டிரு
நுனியென ஒடுங்கிச்
சாரும் இம்மதி இருட்குழாம்
உற இடம்தந்தே
ஒரும் உன்னதக் கலைநுனி
தெரிதர ஒளித்தான்.

விதூடகன்—ஓ! ஓ! இது நமது இல்லம். வருத்தமானக! வருத்தமானக! வாயில் வழியைத் திற.

---

[1] மறைவடைகின்றான் என்பதாம்.

[2]நீரில் மூழ்கிய யானையின் கோட்டு நுனிகள் சிறிது சிறிதாக மறைதல்போலத் திங்கட்செல்வன், இருட்குழாம் பரவ அதனிடைத் தன் கலைகளை ஒடுக்கி மறைவடைகின்றான் என்பதாம்.

சேடன்—ஐயராகிய மைத்திரேயரது குரலைக் கேட்கின்றேன். பெருமான் சாருதத்தர் வந்தனர் ஆதலின், இவருக்கு வாயில் வழியைத் திறக்கின்றேன். (அங்ஙனம் செய்து) பெருமானே! வணங்குகின்றேன். மைத்திரேயரே! தங்களுக்கும் வணக்கம் செய்கின்றேன். இங்கு விரிக்கப்பட்ட இருக்கையில் ஐயன்மீர் இருத்தல் வேண்டும்.

(இருவரும் உட்புகுந்து இருக்கின்றனர்.)

விதூடகன்—வருத்தமானக! பெருமான் சாருதத்தர் கால்களைக் கழுவுதற்கு இரதனிகையை அழை.

சாருதத்தன்—(தயையோடு) உறங்குகின்றவளை எழுப்ப வேண்டா.

சேடன்—ஐய! மைத்திரேயரே! யான் நீர்கொண்டு வருவேன். நீங்கள் கால்களைக் கழுவுங்கள்.

விதூடகன்—(சினத்தோடு) ஓ! நண்பரீர்! பிறப்பினுலேயே அடிமையாகிய இவன் இப்பொழுது நீர் கொண்டு வருபவனும். அந்தணனுகிய என்னைக் கால் கழுவ ஏவுகின்ருன்.

சாருதத்தன்—நண்ப! மைத்திரேய! நீ நீரைக் கொணர்க. வருத்தமானகன் கால்களைக் கழுவுக.

சேடன்—ஐய! மைத்திரேயரே! நீர் கொடுங்கள்.

(விதூடகன் அவ்வண்ணம் செய்கின்ருன். சேடன் சாருதத்தன் கால்களைக் கழுவிவிட்டுப் போகின்ருன்.)

சாருதத்தன்—இவ்வந்தணனுக்குப் பாத்தியநீர் கொடுக்க வேண்டும்.

விதூடகன்—எனக்குப்பாதோதகத்தாற்பயனென்? யான் சுமை முதலியவற்றால் வருந்திய கழுதையைப் போல மீண்டும் நிலத்திற் புரள வேண்டும்.

சேடன்—ஐய! மைத்திரேயரே! அந்தணரன்றே தாங்கள்.

விதூடகன்—பல விடப்பாம்புகளின் நடுவே நஞ்சில்லாத நீர்ப்பாம்புபோலப் பல அந்தணர்கள் நடுவில் யானும் ஓர் அந்தணன்.

சேடன்—ஐய! மைத்திரேயரே! அங்ஙனம் ஆயினும் கழுவுவேன். (அவ்வண்ணம் செய்து) ஐய! மைத்திரேயரே! வசந்தசேனை அடைக்கலமாக வைத்த இப் பொற்பணி முடிப்பைப் பகலில் நானும் இரவில் நீங்களும் காக்கவேண்டும். ஆதலின், பெற்றுக்கொள்ளுங்கள். (என்று கொடுத்துவிட்டுப் போய்விடுகின்றான்.)

விதூடகன்—(பெற்றுக்கொண்டு) இன்னும் இ∴திருக்கின்றதா? என் உறக்கத்தைக் களவாடுகின்ற இழிந்த இப்பொற்பணி முடிப்பைக் கவர்தற்கு உரிய கள்வன் இவ்உச்சயினீ நகரத்தில் ஒருவனும் இல்லையா? ஓ! நண்பரே! நான்கு வாயில்கள் கூடும் உள்ளிடத்தே இதனை வைக்கின்றேன்.

சாருதத்தன்—

83. விலைமகள் உடல்அணி மேவும் இக்கலன்
குலமகள் உறையுளிற் கூடல் ஒல்லுமோ?
புலமுறும் அந்தண! பூவை யின்கர
தலமுறும் அளவும் நீ தாங்கல் வேண்டுமால்.

விதூடகன்—நீங்கள் துயில்கின்றீர்களா?

சாருதத்தன்—ஆம்.

84. [1]கருவியாம் விழியைப் பற்றிக்
கவரும்இத் துயிலென் நெற்றித்
திருவுறுந் தலத்தினின்றெற்
சேர்தரல் போலும் அன்றி
உருவினைக் காட்டாது ஒல்லை
யுறுமுதிர் பருவம் போல
மருவிய மனித னாற்றல்
மறைதர வளரு மாலோ.

விதூடகன்—அங்ஙனமாயின் உறங்குவோம்.

(உறங்குதலை அவிநயம் செய்கின்றான்.
அதன்பின் சருவிலகன் வருகின்றான்.)

85. [2]பரிய தேகநன்கு உட்புகப்
பயிற்சியின வலியும்
உரிய ஆற்றலும் கொடுகள
வுறும்வழி உஞற்றி.
உரைய மாவுடல் உறுப்பெலாம்
நிலமுறீஇ யுடற்றேல்
இரியும் வெள்ளரிப் பாம்பென
இனிதுசெல் குவனால்

(ஆகாயத்தைப்பார்த்து மகிழ்ச்சியோடு)

---

[1] துயில்கின்றவனுக்கு முதலில் மனத்தின் செயலொழி வும், அதன்பின் முறையே தலைசாய்தல் கண்மூடல் உடற் றளர்வு முதலியனவும் உண்டாமாதலின், நெற்றித்தலத்தி னின்றும் சேர்கின்றது போலும் என்றான் என்க.

[2] பருத்தவுடல் நன்கு உட்புகுமாறு பருமையும் சிறுமை யும் இன்றி அளவிற்பட்ட கன்னவழி யென்க.

ஓ! பகவானுகிய இச் சந்திரன் அத்தவெற்பின் மறைகின்ருன்கொல்! அதனுலன்றே,

86. [1]அன்னியர் இல்லம் தீங்கை
அடைதரத் துணிந்து வீரம்
நன்னருற்று ஊர்காப் பாளர்
நடுக்கத்தால் உழலு கின்ற
என்னைவல் லிருள்வீக் கத்தால்
இலங்குதா ரகைம றைத்துத்
துன்னும்இவ் விரவு தாய்போல்
துணைந்துபோர்த் தளிக்கு மாலோ.

உத்தியானத்தின் அணிமைக்கண் உள்ள இடத்திற் சுவர்த்துளை செய்து இரண்டு சுவர்களின் இடைக்கட் புகுந்து விட்டேன். ஆதலின், இப்பொழுது நான்கு வாயில்கள் கூடும் உள்ளிடத்தையும் கெடுப்பேன். ஓ!

87. [2]இழிவிதெனப் பெரியோர்க ளியம்புவரால்
உறங்குங்கால் இழைக்குந் தீங்கைப்;
பழியிலரை வஞ்சித்தல் பரிபவம்ஆ
தலிற்களவு பண்பன்றென்ப;

---

[1] ஊர் காப்பாளரால் நேரும் நடுக்கமென்க. துணிந்து உற்று உழலுகின்ற என்னை என்க.

[2] மக்கள் உறங்குங்காலத்துச் செய்யப்படும் தீச் செயலாகிய களவைக் குறித்துப் பெரியோர்கள் இஃது இழிந்த செயலென்ப. பழியிலர்-ஒருகுற்றமும் இழையாதவர்; நம்பிக்கையுடையார். பரிபவம்-மானக்கேடு. பண்பு-ஆண்மைக்குணம். பிறர்க்கடங்காமை-சுதந்தரம். அதன்கண் ஒழிவில் பழியுறுதல் களவுத்தொழிலானும். அங்ஙனமாயினும் களவுத்தொழில், பிறர்க்கு அடங்கிநடக்கும் ஊழியத்தினும்

ஒழிவில்பழி பிறர்க்கடங்கா மையின் உறினும்
ஊழியத்தின் உயர்வாம் சற்றே
அழிவுறமன் னவர்துயிலின் இந்நெறிமுன்
மேற்கொண்டான் அசுவத் தாமன்.

88. நீருற நனைந்து சிதைந்ததாய்க் கரவின்
நெறிகுடை யோசைதோற் றுதாய்
நேருறக் காணும் நெறியிடை யகன்று
நிலவுமத் துளையில தாகிக்
கூருவர் அரித்துக் குறைதலாற் [1]சுடுமண்
குன்றிவீழ் நிலையதாய் [2]மகளிர்
பார்வைசார்விலதாய்ச் சுவர்த்தலம் அமையிற்
பயனுறும் தொடங்குமிவ் வினையே.

(சுவரைத் தடவி) எப்பொழுதும் கதிரவன் கிரணம் படிதலானும், மழைநீரால் நனைதலானும், வன்மை

---

சற்று உயர்வுடையதென்பதாம். மன்னவர்-உபபாண்டவரும் திருஷ்டத்யும்னனுமாவர்.

பாரதப்போர் முடிவெய்தி பின்னர்க் கண்ணபிரான் பாண்டவரை வேறோரிடத்திற் கொணர்ந்து வைத்திருத்தலை அறியாது, காழக இல்லத்துட் புக்குக் கவலையற்றுத் துயின்ற உபபாண்டவர்களையும் திருஷ்டத்யும்னனையும் பாண்டவரெனக்கொண்டு, அசுவத்தாமன் கொலைப்படுத்த செய்தி பாரதத்துட் காண்க.

கொலையினும் களவு குறைந்த குற்றமுடையதுஎன்பது குறிப்பிற் புலப்படுத்தவாறு.

[1] சுடுமண்-செங்கல்.

[2] பெண்கள் அச்சுறும் இயல்பினராதலின் விரைவில் விழித்து அலறுவர் என்பதுபற்றி அன்னார்பார்வை சார்வில தாய் என்று கூறப்பட்டது.

யற்று உப்பரிக்கப்பட்டுள்ளது இச் சுவர்த்தலம். இங்குப் பெருச்சாளி தோண்டிய துளையும் உள்ளது. ஆ! இவ் வேலைப்பயன் நிறைவேறிற்று. இதுவே, முருகக் கடவுளாற் செய்யப்பட்ட களவு நூல்களை வாழ்க்கைக்கு உரியனவாக மேற்கொண்ட களவாசிரியர்களின் முதலாவது சித்தி இலக்கணம். இத் தொழிற்றொடக்கத்தில் இப்பொழுது எத்தகைய துளை வழியைச் செய்வேன். இவ்விடயத்தில் பகவானாகிய கனக சக்தியினால் துளைவழியுண்டாக்கும் உபாயம் நான்கு வகையாகக் கூறப்பட்டன. அவை சுடு செங்கலாயின் ஒவ்வொன்றாகப் பெயர்த்தல், சுடப்படாத செங்கலாயின் கல்லுதல், மண்ணுருவாயின் நனைத்தல், மரவுருவாயின் அறுத்தல் என்பனவாம். ஆதலின், சுடுசெங்கல்லையுடைய இவ்விடத்து ஒவ்வொன்றாகப் பெயர்த்தலே செய்யத் தக்கது. அதன் கண்,

88. [1]மலர்தருதா மரைவடிவம் வரும்இரவி
யுருவம்இள மதியம் வாவி
அலர்தரல்சு வத்திகமாம் இல்லுருவம்
நிறைகுடம்போல் அமைத லாமால்;

---

[1] கன்னத்துளை தாமரை மலர்போறல் முதலிய ஏழு வடிவங்களை உடையதாகும்:—(1) அலர்ந்த தாமரைமலர் போலச் சிறிது நீண்டும் குறுகியும் உள்ள வட்ட வடிவம். (2) சூரியமண்டலம் போலச் சமமான வட்ட வடிவம். (3) பாதி மதி போன்ற வடிவம். (4) அகன்ற சுவரிற் கிணறுபோற் குடையப்படும் வடிவம். (5) இயல்பாகவே வன்மையற்ற சுவரில் வேண்டுமளவு அகற்சியாக அகழ்தலிற் பரந்த வடிவம். அலர்தரல்-பரந்த வடிவம். (6) சுவத்திகமாம் இல்லுருவம்:—இது சதுரமாகவும் நான்கு பக்கங்களிலும் நடுவண்

தலம் உறைவோர் பிற்றைநாட் கண்டுபெரும்
வியப்பெய்தத் தக்க என்றன்
வலமுறுசிற் பத்தொழிலின் மாட்சியினை
எவ்விடத்து வயங்கச் செய்வேன்?

ஆதலின், சுடுசெங்கலானுகிய இவ்விடத்து நிறைகுட வுருவமே செய்யத்தக்கதாகும். அதனை உண்டாக்கு வேன்.

90. முன்னைநாள் இரவிற் [1]பேர்த்த
உவர்உறீஇ முதுமை சாலத்
துன்னிய பிறசு வர்க்கண்
துளைபல வுருவிற் செய்தேன்;
உன்னும் அச் செயலைப் பக்கல்
உறுபவர் காலை நோக்கி
மன்னும்என் திறத்தின் மாண்பும்
பிழைகளும் வயங்கச் சொன்னர்.

வேண்டுவன அருளும் சிவகுமாரனும் முதலாசிரி யனுமாகிய [2]முருகப்பிரானுக்கு வணக்கம். அந்தண ரிடதது அன்பு மிக்க தேவனும், தேவர்களால் வணங் கத் தக்கவனுமாகிய கனகசக்தி யாசிரியனுக்கு

காதுபோற் சிறிது நீண்டுள்ள இல்லத்தின் வடிவம். (7) நிறை குடம்போற் கழுத்துச் சிறுத்து மற்றைய பாகம்பெருத்துள்ள வடிவம். அமைதலாம் என்னும் பயனிலைக்குக் கன்னத்துளை என்பது எழுவாயாகும்.

[1] பேர்த்த-பெயர்க்கப்பட்ட. பேர்த்த சுவர், உவருற்று முதுமை சாலத் துன்னிய பிற சுவர் என இயைக்க.

[2] முருகப்பிரான் களவு நூலாக்கிய முதலாசிரியராவர். கனகசக்தி முதலிய மூவரும் வழி நூலாசிரியராவர்.

**வணக்கம்;** பாற்கரநந்தி யாசிரியனுக்கு வணக்கம்; என்ஊ முதன் மாணுக்கனுகக் கொண்ட யோகாசாரி யனுக்கு வணக்கம். என்மாட்டு உவகை மிக்க அந்த **யோகாசாரியன்** பச்சிலை மையை எனக்கு உதவினுன்.

91. அன்னபச் சிலைநல் மையை
அணியுடற் பூச லான்மற்று
என்ஊனயிக் காவ லாளர்
காண்கிலர். இதனுல் மற்ருேர்
முன்னுற என்பால் உய்க்கும்
முஊப்படை யுடலின் கண்ணே
துன்னுபு புண்செய் யாது
தொலையுமால் இனிமற் றென்ளுே!

(அங்ஙனம் பூசிக்கொள்கின்ருன்.) ஆ! ஆ! எனது அளவு நூல் எடுத்துவர மறந்துவிட்டேனே. (நினைவு கூர்ந்து) ஆம். இப் பூணூல் அளவு நூலாக உபயோ கப்படும். இம் முப்புரி நூலோ, பொதுவாக அந்தணர் களுக்குச் சிறந்த பெரிய உபகாரப் பொருளாகும்; என் போன்ருர்க்கோ மிகச் சிறந்த உபகரணமாகும். எங்ஙனமெனின்,

92. சொல்முப் புரிநூல் சுவரில் துளை அளக்கப்
பொன்மங் கலஅணியின் பூட்டகற்ற
வன்மைத்தாழ்
தெற்றும் கதவு திறக்க வகிதேள் நஞ்சு
உற்றவர்க்குக் கட்டஉத வும்.

அளந்துகொண்டு துளையுண்டாக்கத் தொடங்குகின் றேன். (அங்ஙனம் அளந்துபார்த்து) இத் துளைக்கண் ஒரு செங்கல் மாத்திரம் எஞ்சியிருக்கின்றது. ஆ! ஆ! பாம்பு கடித்துவிட்டதே! (பூணூலால் விரலைக் கட்டி விடவேகத்தை அவிநயிக்கின்ருன். சிகிற்சை செய்து)

சுகமுற்றேன். (மீண்டும் துளைத்து உள்ளே பார்த்து) ஓ! விளக்கு ஒளிர்கின்றது. அதனாலன்றே,

93. [1]துளைவழி நிலமுறீஇச் சுவணப் பொன்மையுற்று
ஒளிநெறி விலகிருள் சூழ ஓங்கிய
தெளிவிளக் குறுசிகை யுரைகல் சேர்பொனின்
மிளிர்தரு கோடுபோல் விளங்கு கின்றதால்.

(மீண்டும் துளைவேலையைச் செய்து முடித்து) இத்துளை வேலை நிறைவேறிற்று. நிற்க; உட்புகுகின்றேன்; அன்றி விரைந்து புகுதல் வேண்டா. புருடப் பிரதிமையை உள்ளே செலுத்துகின்றேன். (அங்ஙனம் செய்து) ஓ! ஒருவருமில்லை. முருகப்பிரானுக்கு வணக்கம். (உட்புகுந்து பார்த்து) ஆ! இரண்டு ஆண்மக்கள் துயில்கின்றனர். நிற்க. தற்காப்பின் பொருட்டு வாயில் வழியைத் திறந்து வைக்கின்றேன். என்செய்வேன்! இல்லம் சிதைவுற்றிருத்தலாற் கதவுமுளை ஓசையிடுகின்றது. ஆதலின் நீரைத் தேடுவேன். எங்கே நீர் இருக்கும்? (இங்கும் அங்கும் பார்த்து நீரைக் கொணர்ந்து தெளித்துக்கொண்டு ஐயத்தோடு) இது வேண்டா. நிலத்தில் வீழ்கின்ற நீரே ஓசையை உண்டாக்கும். இது நிற்க; (பின்புறமாக மெல்லத் தாங்கிக் கதவைத் திறந்து) கதவு திறந்ததாக இருக்க. இப்பொழுது இவ்விருவரும் பொய்யுறக்கம் கொள்கின்ற

[1] துளை வழியாக நிலத்தைப் பொருந்தித் தங்கம்போற் பொன்மை நிறம் உற்று இருள் பக்கத்தே சூழ ஓங்கிய விளக்கு என்க. அவ்விளக்கின் சுடர் இருளின் நடுவில் கரிய உரைகல்லில் உரைத்த பொற்கோடுபோல் விளங்கித் தோன்றுகின்றது என்பதாம்.

னரா? அன்றி உண்மையாகவே உறங்குகின்றனரா? என்று இங்ஙனம் ஆராய்கின்றேன். (அச்சுறுத்திச் சோதித்து) ஆ! இவ்விருவரும் உண்மையாகவே துயில்கின்றனர் ஆதலானன்றே;

94. ஈங்கிவர் உயிர்ப்பு வெளிச்செலீஇக் காலம்
இடைக்கணுத் தையுற விலதால்;
ஊங்கிறு குறக்கண் இமைப்பில மூடி
யுள்ளசை வின்றியுற் றனவால்;
தாங்கிய [1]உடலும் அவயவம் குலைந்து
தளர்வுறீஇச் சயனத்தின் அளவின்
ஓங்குய துறக்கம் பொய்ம்மையேல் விளக்கின்
ஒளியெதிா் முகமுறப் பொறுரால்.

(நாற்புறமும் பார்த்து) ஓ! ஈதுஎன்னை? [2]மத்தளம்! இது முரசு; இது படகம்; இது யாழ்; இவை குழல் கள்; இவை நாட்டியத்திற்கு உபயோகமான பிரதிமை கள். இது நாட்டிய ஆசிரியன் இல்லமோ? சாருதத் தன் இல்லம் என்னும் துணிவால் உட்புகுந்தேன். [3]இவன் உண்மையாகவே வறியவனோ? அன்றி அரசர் பயத்தாலாவது கள்வர் பயத்தாலாவது பொருளை நிலத்திற் புதைத்து வைத்திருக்கின்றான்கொல்! [4]அங்

---

[1]உடலும் ஓங்கியது என்க. ஓங்குதல்—மிகுதல்.

[2]மத்தளம், வீணை முதலிய கருவிகள் சாருதத்தன் இல்லத்தில் இருத்தல் அவன் செல்வனாயுள்ள காலத்தில் அவற்றின் பயனை நன்கு அனுபவித்தவன் என்பதைப் புலப் படுத்தும்.

[3]இவன்-சாருதத்தன்.

[4]ஆற்றல் மிக்க யான் நிலத்திற் புதைந்து கிடக்கும் பொருளை எங்ஙனம்ஆயினும் எளிதிற் கொள்வேன் என்பது கருத்து.

ஙனமாயின் சருவிலகனுகிய எனக்கும் புதைபொருள் என்பதொன்று உண்டோ? நிற்க. [1]வித்துக்களை அபிமந்திரித்து இறைக்கின்றேன். (அங்ஙனம் செய்து) சிதறிக் கிடக்கும் வித்துக்கள் ஓரிடத்திலும் திரண்டு சேர்ந்தில. ஓ! உண்மையாகவே இவன் வறியவன். நிற்க. [2]போகின்றேன்.

விதூடகன்—(கனவுகண்டு பேசுகின்ருன்.) ஓ! நண்பரீர்! கன்னத்துளைபோலக் காணப்படுகின்றது. கள்வனைப்போலக் காண்கின்றேன். ஆதலின், இப் பொற்பணி முடிப்பை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள்.

சருவிலகன்—இம் மனிதன் இவ் வில்லத்தினுள்ளே புகுந்த என்னைக் கள்வனென்றுஉணர்ந்து வறியவன் ஆயினேன் என்று பரிகாசம் செய்கின்ருன் போலும்! ஆதலின்,இவனைக் கொன்றுவிடலாமா? அன்றி அச்சத்தாற் கனவிற் கள்வனைக் கண்டு பேசுகின்ருன்கொல்! (பார்த்து) ஓ! நீராடுங்கால் உடுக்கப்படும் பழந்துகிலான மறைக்கப்பட்டு விளக்கொளியான் ஒளிர்கின்ற இஃது உண்மையாகவேபொற்பணிமுடிப்பாகும். நிற்க; பெற்றுக்கொள்கின்றேன். அன்றி என்னேடு ஒத்த வறுமையாளனுகிய நற்குலத்து உதித்த மனிதனைத் துன்புறுத்தல் தக்கதன்று ஆதலின், செல்கின்றேன்.

விதூடகன்—ஓ! நண்பரே! இப் பொற்பணி முடிப்பைப் பெற்றுக்கொள்ளவில்லையாயின் பசுவினதும்,

---

[1]மந்திரித்து இறைக்கப்பட்ட வித்துக்கள் பொருள் புதைந்த நிலத்தில் திரண்டு ஒன்றுசேரும் என்பது கொள்கை.

[2]என் அவா நிறைவேருமையால் வெளிச்செல்கின்றேன் என்பதாம்.

அந்தணனது மாகிய விருப்பங்களைத் தடுத்தலான் உண்டாகும் பாவத்துக்கு ஆளாவீர்!

சருவிலகன்—மாண்பு மிக்க ஆவின் விருப்பமும் அந்தணன் விருப்பமும் கடக்கத் தகாதவை ஆதலின் பெற்றுக்கொள்வேன். அன்றி விளக்கு ஒளிர்கின்றதே. விளக்கை அவித்தற்கு உரிய தீவிழ் விட்டில் என்னிடம் உள்ளது. அதனைச் செலுத்துகின்றேன். அதற்குரிய இடமும் காலமும் இவையே. யான் விட்ட இவ் விட்டில் இவ் விளக்கின் மேற்பாகத்திற் பலவாறு சுழன்று திரிதற்கே செல்கின்றது. பத்திரபீடமென்னும் பெயரையுடைய இவ்விட்டில், தன் சிறகுகளால் இவ் விளக்கை அவித்துவிட்டது. இஃது உண்டாக்கிய இருள் மிகவும் இழிந்ததே. அன்றி, யானும் நம் பிராமண குலத்துக்கு இருள் உண்டாக்கிவிட்டேன். இஃது இழிவே. யானே நான்கு மறைகளையும் உணர்ந்து இரத்தலில் விருப்பமில்லாத ஓரந்தணன் புதல்வனாகிய சருவிலகன். மதனிகை என்னும் கணிகையின் நிமித்தம் செய்யத் தகாதனவற்றை மேற்கொண்டேன். இப்பொழுது அந்தணன் வேண்டுகோளை நிறைவேற்றுகின்றேன். (என்று பெற்றுக்கொள்ளத் தொடங்குகின்றான்.)

விதூடகன்—ஓ! நண்பரே! நும் நுனிக்கை குளிர்ந்திருக்கின்றதே.

சருவிலகன்—ஆ! மறந்துவிட்டேன்! [1]தண்ணீரில் தோய்ந்தமையால் என் நுனிக்கை குளிர்ச்சியுடையதாயிற்று. சூடாதற் பொருட்டுக் கைகளைக் கக்கங்

---

[1]கதவின் அடிப்பாகம் ஒலி செய்யாமையின் பொருட்டுத் தண்ணீர் அள்ளி நனைத்ததைக் குறித்துக் கூறினான்.

களில் வைக்கின்றேன். (நிருத்தத்தால் இடக்கையைச் சூடு செய்து [1]பெற்றுக்கொள்கின்றான்.)

விதூடகன்—பெற்றுக்கொண்டனையா?

சருவிலகன்—இவ் அந்தணனது வேண்டுகோள் கடக்கத்தக்கதன்று. ஆதலிற் பெற்றுக்கொண்டேன்.

விதூடகன்—இப்பொழுது விலைப் பொருளை விற்றுவிட்ட வணிகனைப்போல் யான் சுகமாகத் தூங்குவேன்.

சருவிலகன்—மகாப் பிராமண! நூறு யாண்டு உறங்குவாயாக. அந்தோ! மதனிகை என்னும் கணிகையின் பொருட்டு இங்ஙனம் பிராமண குலத்தை நரகத்தில் வீழ்த்துகின்றேன். அன்றி [2]யானே வீழ்ந்தவன் ஆகின்றேன்.

95. [3]ஆண்மையின் துணிவினை அடக்கி வாட்டுமிவ்
வேண்மைசால் நல்குரவிழிக்கத் தக்கதாம்.

---

[1]பொற்பணி முடிப்பைப் பெற்றுக்கொள்கின்றான் என்று முடிக்க.

[2]யான்செய்த தீமையின் பயனை யானே நுகரவல்லேன் நம் குலத்தார்க்கு இஃது இழிவு செய்யாது என்பதாம்.

[3]நல்லனவற்றின் மேற்கொள்ளத்தக்க ஆண்மையைக் களவுத் தொழிலாகிய தீயசெயலிற் பயன்படுத்தியமையால், அவ் வாண்மையின்துணிபை நல்குரவு அடக்கி வாட்டியது என்றான் என்க. நாண் மிகும் இதனின்—நாணத்தை மிகுவிக்கும் இந் நல்குரவினால். சேண்மையிற் பழித்தல்-தன் நிலைக்குச் சிறிதும் நெருங்கத் தகாததென்று பழித்தல் இத் தீத்தொழிலாகிய களவைப் பழித்தலோடு அதனையே மேற்கொள்ளவும் செய்தேன் என்பதாம்.

நாண்மிகும் இதனின்யான் நன்றில் செய்கையைச்
சேண்மையிற் பழித்தலும் செய்த லும்முளேன்.

ஆதலின், மதனிகையை விலையிற் கோடற்கு வசந்தசேனையின் இல்லத்தை நோக்கிச் செல்லுகின்றேன். (சுற்றிப் பார்த்து) ஓ! பாதவொலிபோற் கேட்கப்படுகின்றதே? காவலர் வாராதிருக்க வேண்டும். நிற்க, தம்பம்போல அசைவற்றிருக்கின்றேன். அன்றிச் சருவிலகன் ஆகிய என்னைக் காவலாளர் என் செய்வர்? ? யானே,

96. [1]பாய்தலிற் பூசை; ஓட் லின் இரலை;
பற்றுப் சிதைத்தலிற் பருந்து;
வாய்மையிற் பொய்யிற் றுயில்பவ னிலைமைய
மதித்தலின் நாய்; அகி ஊர்தல்;
ஆய்பிற வுருவோடு உடல்கொளல் மாயை;
அயல்மொழி யறிவின்வாக் கிறைவி;
ஏய்விளக்கு இரவின்; நுழைவழிப் பல்லி;
இருநிலத்து அசுவம்; நீர் நாவாய்.

---

[1] பூசை-பூனை. இரலை-மான். அகி-பாம்பு. யானே பாய்தலிற் பூனையாகவும், துள்ளியோடுதலில் மானாகவும், பற்றிச் சிதைத்தலிற் பருந்தாகவும், துயில்பவன் நிலைமையை மோந்தறிதலில் நாயாகவும், ஊர்ந்து செல்லுவதில் பாம்பாகவும், பிறவுருவங்களையும் உடல்களையும் கோடலில் மாயையாகவும், வேற்று மொழி யறிதலில் வாக்கிறைவியாகவும், இரவில் விளக்காகவும், குறுகிய துவாரத்திற் புகுந்து மறைதலில் பல்லியாகவும், நிலத்தில் விரைந்தோடுதலிற் குதிரையாகவும், நீரில் தோணியாகவும் உள்ளேன் என்பதாம்.

97. [1]ஓடலிற் பாம்பு; நிற்பின்
உறுமலே; சுழன்று யாண்டும்
ஆடலிற் கலுழன்; யாரும்
அறிவுரு இடத்திற் றங்கம்;
நாடலின் முயலே யொப்பேன்;
நண்ணிய பிறரைப் பற்றிக்
கோடலிற் செந்நாய்; அஞ்சாக்
குணத்தினுன் மடங்கல் ஒப்பேன்.

(வந்து)

இரதனிகை—அந்தோ! அந்தோ! வீட்டு வெளி வாயில் திண்ணையில் வருத்தமானகன் உறங்கினுன். இவ்விடத்தில் அவன் காணப்பட்டிலன். நிற்க. ஐயர் மைத்திரேயரைக் கூவி அழைக்கின்றேன். (என்று சுற்றி வருகின்ருள்.)

சருவிலகன்—(இரதனிகையைக் கொல்ல விரும்பு கின்ருன். உற்றுநோக்கி) என்னே? பெண்பாலோ? நிற்க. போகின்றேன். (என்று போய்விடுகின்ருன்.)

இரதனிகை—(அச்சத்தோடு சென்று) அந்தோ! அந்தோ! நம் இல்லத்திற் கன்னத்துளை யுண்டாக்கிக் கள்வன் வெளிச்செல்கின்ருன். நிற்க. மைத்திரேயரை அடைந்து எழுப்புகின்றேன். (விதூடகன் பக்கல் எய்தி) ஐய! மைத்திரேயரே! எழுந்திருங்கள். எழுந் திருங்கள். நம் வீட்டிற் கன்னத்துளை யுண்டாக்கிக் கள்வன் வெளிச்செல்கின்ருன்.

---

1 இந் நிலையணுகிய என்னைக் காவலர் என்ன செய்வர்? என்பதாம்.

விதூடகன்—(எழுந்து) ஆ![1] இழிந்தவளே! "கள்வனைச் செய்து கன்னத்துளை வெளிச்சென்றது" என்று சொல்கின்ருய்?

இரதனிகை— வீணரே! பரிகாசம் வேண்டா. இக் கன்னத்துளையைப் பார்க்கவில்லையோ?

விதூடகன்—ஆ! இழிந்தவளே! என்ன சொல்லுகின்ருய்? "இரண்டாவது வாயில்வழி போலக் கன்னவழி திறக்கப்பட்டது" என்றன்றே சொல்லல் வேண்டும். ஒ! நண்பராகிய சாருதத்தரே! எழுந்திருங்கள். எழுந்திருங்கள். நம் இல்லத்திற் கன்னமிட்டுக் கள்வன் வெளிச்சென்று விட்டான்.

சாருதத்தன்—நிற்க. ஒ! பரிகாசம் வேண்டா.

விதூடகன்—ஒ! பரிகாசம் அன்று. நீங்கள் பாருங்கள்.

சாருதத்தன்—எவ்விடத்தில்?

விதூடகன்—ஒ! இதுவே.

சாருதத்தன்—(பார்த்து) ஆ! ஆ! இக் கன்னத்துளை அழகாக இருக்கின்றது.

98 [3]மேலிடந் தொடங்கிழிச் சுடுமண் வீழ்த்தலிற்
சூலிது நடுவகல் சுருக்க மாந்தலை

---

[1] உறக்கத்துக்குத் தடை செய்தமையால் உண்டாகிய சினத்தால் இங்ஙனம் கூறினன்.

[2] இங்ஙனம் மாற்றிக் கூறியது இரதனிகை வீணைக அஞ்சுகின்ருள் என்று அவளைப் பரிகசிக்க என்க.

[3] சுடுமண்—செங்கல். சூலுதல்—குடைதல். இது இக் கன்னத்துளை. நடுவண் அகற்சியையும் தலைக்கண் சுருக்கத்

சாலும் நல்தகவிலர் சார்பி ஞல்வெரீஇ
ஏலுமாண் இல்லம் நெஞ்சு இடிந்தது ஒக்கு
மால்.

இத் தொழிற் கண்ணும் பயிற்சி வன்மை இருக்கின்றதா?

விதூடகன்—ஓ! நண்பரே! இக் கன்னத்துளை யானது, புதிதாக வந்த கள்வன், அன்றி இத் தொழிற் பயிற்சியில் விருப்பமுள்ள மற்றொருவன் ஆகிய இவ்இருவருள் ஒருவனுற் செய்யப்பட்டதாகும். இன்றேல் இவ் உச்சயினீ நகரத்தில் எவன் நம் இல்லத்தின் செல்வ நிலைமையை அறியாமல் இருக்கின்றான்?

சாருதத்தன்—

99. வேற்றுநாட் டிருந்து தொழில்பயில் பவன்என்
வீட்டினில் துளைவழி புரிந்தோன்,
போற்றும் அப் பொருள்ஈண் டின்மையால்இனிது
புரிதுயில் உடையெமை யுணரான்;
தேற்றமாய் முன்னர் நமது உயர் இல்லச்
செழுமையைக் கண்டு அவாவுற்றீண்டு
ஆற்றும்இத் துளையை நெடிதுநூன்று எய்த்தே
அவாவறப் பின்னர்விட்டு அகன்றான்.

---

தையும் உடையது என்றதனுல் இக் கன்னத்துளை குடவுருவம் உடைத்தென்பது போதரும். தகவிலர்-கள்வர். இக் கன்னத் துளை கள்வரின் சார்பினுல் அஞ்சி ஓர் அழகிய பெரிய இல்லம் நெஞ்சு பிளக்கப்பெற்றாற் போலக் காணப்படுகின்றது என்பதாம், தீயவர் சார்பை அஞ்சி நல்லோர் இதயம் பிளவுறும் என்னும் தொனிப்பொருள் தோன்றலும் உணர்க.

அதன்பின் இவ் ஏழைக் கள்வன், தன் நண்பர் களுக்கு "[1]வைசிய குமாரன் "இல்லத்துட் புகுந்து யான் ஒன்றையும் அடைந்திலேன்" என்று கூறு வானோ?

விதூடகன்— ஓ! ஆகூழ் இல்லாத அக்கள் வனையே குறித்து ஏதற்காக வருந்துகின்றீர்கள்? அவன், இது பெரிய வீடு என்று நினைந்து இங்கிருந்து இரத்தின அணிகலன்களையாவது பொற்பணி முடிப் பையாவது எடுத்துச் செல்லலாம் என்று துணிந்து வந்தவன். (நினைவுற்றுத் துன்பத்தோடு தனக்குள்) அப் பொற்பணி முடிப்பு எங்குள்ளது? (மீண்டும் நினைவுற்று வெளிப்படையாக) ஓ! நண்பரே! நீங்கள் எப்பொழுதும் "மைத்திரேயன் மூர்க்கன்; அறிவில் லாதவன்" என்று கூறுவதுண்டு. அப் பொற்பணி முடிப்பை உங்கள் கையில் தந்துவிட்டமையால் யான் நன்கு ஆராய்ந்து செய்தவன் ஆகின்றேன். இன்றேல் அந்த இழிந்த கள்வனாற் கவரப்பட்டி ருக்கும்.

சாருதத்தன்—பரிகாசம் வேண்டா.

விதூடகன்—ஓ! யான் அறிவிலன் ஆயினும் பரி காசம் செய்தற்குரிய இடம் காலம் இவை அறியாத வனா?

சாருதத்தன்—எப்பொழுது தந்தாய்?

---

[1] சாருதத்தன் வாணிகத் தொழிலுடையனாதலின் "வைசிய குமாரன்" என்று கூறப்பட்டான்.

விதூடகன்—ஓ! யான் தங்களை நோக்கி "உங்கள் நுனிக்கை குளிர்ந்திருக்கின்றது" என்று கூறிய பொழுது தூங்கேன்.

சாருதத்தன்—ஒருவாறு [1]இங்ஙனமும் இருக்க லாம். (நாற்புறமும் பார்த்து [2]மகிழ்ச்சியோடு) நண்ப! தெய்வ வசத்தால் நினக்கு உவப்பாவது ஒன்றைத் தெரிவிக்கின்றேன்.

விதூடகன்—கள்வன் கவர்ந்திலனா?

சாருதத்தன்—கவர்ந்து விட்டான்.

விதூடகன்—அங்ஙனமாயின் உவத்தல் எது பற்றி?

சாருதத்தன்—இக்கள்வன் பயன் எய்தினன் என் பது பற்றி.

விதூடகன்—இப் பொற்பணி முடிப்பு அடைக் கலப் பொருளன்றோ!

சாருதத்தன்—அடைக்கலப் பொருளா? (மயக்க முறுகின்றான்.)

விதூடகன்—நீங்கள் தேறுதல் எய்துங்கள். அடைக்கலப் பொருளைக் கள்வன் கவரின் நீங்கள் எதற்காக மயங்குகின்றீர்கள்?

சாருதத்தன்—(தெளிவுற்று) நண்ப!

---

[1] கை கால் கழுவியமையால் நுனிக்கை குளிர்ந்திருத் தல் கூடும் என்பதாம்.

[2] தன் வீட்டிற் புக்க கள்வனும் பொருட்பயனுடைய னாய்ச் சென்றான் என்பது பற்றிய மகிழ்ச்சி.

100. [1]எல்லோரும் என்னை எளிமைப் படுத்து உரைப்பர்
அல்லாதெவன் உண்மை ஆதரிப்பான்?-பொல்லாஇவ்
வையந் தனில் ஆண்மை மாற்றும் வறுமைபிறர்
ஐயம் உறற்கு ஏது வாம்

அந்தோ!

101. அருளறு தீயவூழ் ஐயகோ எனைப்
பொருளற வன்பினிற் பொருந்தல் அன்றி என்
மருளறும் ஒழுக்கமும் [2]மலின மாகவின்று
இருளுறச் செய்யுமால் ஈதென் வண்ணமே?

விதூடகன்—கொடுத்தவன் யார்? வாங்கினவன் யார்? சான்று யார்? என்று யானே மறுத்துவிடுவேன்.

சாருதத்தன்—யான் இப்பொழுது பொய்யுரைப் பேனு?

102. ஏற்றநல் அடைககலம் இனிதின் [3]ஈதர
வேற்றிடத்து இரப்பினுன் மீண்டும் ஈட்டுவல்.
போற்றுநல் லொழுக்கமாம் பொருட்குக் கேட்டினை
ஆற்றும் இப் பொய்யுரை யாடல் கில்லெனே.

---

[1] உண்மை—கள்வர் கவர்ந்தது. பொருளோடு ஆண்மையும் அழிந்தமையால் அந்நிலை உலகத்துள்ளார் எல்லோரும் ஐயுறுதற்கு இடனும் என்பதாம்.

[2] மலினமாக — அழுக்குற.

[3] ஈகர-திருப்பிக் கொடுக்க.

இரதனிகை—அடைக்கலப் பொருள் இழந்தமையால் பெருமாட்டியாகிய [1]தூதையின்பாற் சென்று தெரிவிப்பேன். (என்று போய்விடுகின்ருள்.)

(சாருதத்தன் மனைவி சேடியோடு வருகின்ருள்.)

மனைவி—(பரபரப்போடு) ஏடி! பெருமானுகிய நம் தலைவர் மைத்திரேயரோடு உண்மையாகவே உடல் தீங்கின்றி யிருக்கின்ருரா?

சேடி—பெருமாட்டி! உண்மையாகவே தீங்கின்றி யிருக்கின்ருர். ஆனல், விலைமகளுடைய அணிகலன்கள் மாத்திரம் கள்வர்களாற் கவரப்பட்டன.

(மனைவி மயக்கமுறுதலை அவிநயம் செய்கின்ருள்.)

சேடி—எம்பெருமாட்டியாகிய தூதை ஆறுதலடைய வேண்டும்.

தூதை—(தெளிவுற்று)சேடி!"பெருமான் உடல்தீங்கின்றியுள்ளார்" என்று கூறுகின்ருய்? அவ்வண்ணல் இப்பொழுது உடல் தீங்குற்றுளார் எனினும் நன்றே. ஒழுக்கம் கெடுதல் நன்றன்று. இப்பொழுது உச்சயினீ நகரத்துள்ளார், "வறுமை மிகுதியால் பெருமான் சாருதத்தரே இத்தகைய தீச்செயலைச் செய்தவர்" என்று இங்ஙனம் கூறுவர். [மேலே பார்த்து நெட்டுயிர்ப்பெறிந்து] ஏ! பகவானுகிய விதியே! தாமரையிலையில் வீழ்ந்த நீர்த்துளிகளைப்போல் சலிக்கின்ற வறுமையாளரின் வினைப்பயன்களால் விளையாடுகின்றனே? தாய் வீட்டிலிருந்து பெற்ற இவ் விரத்தினமாலை

---

[1] தூதை—சாருதத்தன் மனைவி.

விதூடகன்—அக்காரியம் [1]இழக்கப்பட்டது.

சாருதத்தன்—அவள் இரத்தினவளியை [2]ஏற்றுக் கொள்ளவில்லையா?

விதூடகன்—[3]இவ்வளவு பாக்கியம் நமக்கு எவ்வாறு உண்டாம்? புதிய தாமரைமலர் போன்ற அழகிய கைகளைத் தலையிற் கூப்பி வணக்கத்தோடு பெற்றுக் கொண்டாள்.

சாருதத்தன்—அங்ஙனமாயின் இழக்கப்பட்டதென்று கூறியது என்னை?

விதூடகன்—ஓ! ஏன் இழக்கப்பட்டிலது? நம்மால் விற்றுண்ணப்படாததும், உபயோகிக்கப்படாததும், கள்வரால் கவரப்பட டதும், சிறுவிலையுடையதுமாகிய பொற்பணி முடிப்பின் நிமித்தம் கடல்வலயத்தில் மிகச் சிறந்த இரத்தினமாலை அவளால் கவரப்பட்டதன்றோ?

சாருதத்தன்—தோழ! அங்ஙனமன்று.

144. நம்முழை யுயர்குணம் நன்று பற்றுபு
செம்மையின் அவள்ணி சேமஞ் செய்தனள்;
அம்மவவ் விலையிலா வுறுதி யன்பிற்கே
யிம்மணி மாலையாம் இசைவின் ஈதலே.

---

[1] இரத்தினவளியை அவள் கவர்ந்து கொண்டாள் என்பது கருத்து.

[2] ஏற்றுக்கொள்ளாவிடின் மாற்றுச் செயல் பயனிலதாகும் என்று கருதி இவ்வாறு கூறினன்.

[3] போகூழாற் பற்றப்பட்டிருக்கும் இந்நிலையில் இரத்தினமாலை அவளால் ஏற்றுக்கொள்ளப்படாமல் எங்ஙனமிருக்கும்? என்பதாம்.

விதூடகன்—ஓ! நண்பரீர்! வசந்தசேனை, தன் தோழிமார்களுக்குக் குறிப்பில் தெரிவித்துத் தன் முகத்தை ஆடை நுனியால் மறைத்துக்கொண்டு என்னை நோக்கி நகைத்தாள். இதுவும் எனக்குத் துன்பம் விளைவிக்கும் இரண்டாவது காரணமாகும். ஆதலின், யான் அந்தணனாக இருந்தும் இப்பொழுது தங்களைத் தலையால் வணங்கித் தெரிவித்துக்கொள்ளுவதாவது: "பற்பல தீங்குகளை விளைவிக்கும் இவ் விலைமகள்பால் வைத்துள்ள மனத்தை மீட்டல் வேண்டும்" என்பதே. விலைமகளோ பாதகுறட்டினுட் புகுந்த சிறிய பரற்கற் போல மீண்டும் வருத்தமுற்று விலக்கத்தக்கவள். இன்னும் ஓ! நண்பரீர்! பொருட்பெண்டிர், யானை, கணக்கன், துறவி, கீழ்மகன், கழுதை [1]இவர்கள் உள்ள இடங்களிற் கொடியவர்களும் வாழ்க்கை பெறமாட்டார்கள்.

சாருதத்தன்—நண்ப! பலவாறு பழித்துரைத்தல் வேண்டா. அமைக. என் நிலைமையே என்னை மீட்கின்றது. பார்க்க.

145. [2]கடுக ஓடலின் முயலுமவ் விவுளிதன் கால்கள்
முடுகு மூப்பினால் வலிதப முன்னியாங் குனற்று

[1] பொருட்பெண்டிர் இன்ப விளையாடல்களாற் பொருளைக் கவர்தலானும், யானை மிகு பொருட் செலவாற் பரிபாலிக்கத் தக்கதாகலானும், கணக்கன் கணக்கால் வஞ்சித்தலானும், துறவி பற்றொழித்தலை உபதேசித்து எல்லோரையும் மடியாளராகச் செய்தலானும், கீழ்மகன் இழிந்த செயல்களிற் புகுத்திக் கேடு செய்தலானும், கழுதை எல்லாப் பைங்கூழ்களையும் உண்டு அமங்கலகரமாக இருத்தலானும் இவர்கள் உள்ள இடங்களில் வாழ்தல் நலந் தருவதன்றாம் என்க.

[2] இவுளி - குதிரை. அவற்றின்-அவ்வப் பொருளினின்றும். ஒருவன் வறியவனாக இருப்பின் அவன் எண்ணங்கள்

அடரும் எண்ணங்கள் வறியற்கெப் பொருளினும்
அணுகி
முடிவிற் கேடுறீஇ யவற்றின்மீண் டுள்ளத்தே
மூழ்கும்.

தோழ! இன்னும்,

நேரிசை வெண்பா

146. இப்பெண் பொருட்கே யியைபவள்மற் றுதலினல்
அப்பொருள்மிக் குள்ளாற் கவளுரியள்—
[தனக்குள்] இல்லை. இவள் குணத்தாற் பெறற்பாலளே.
[வெளிப்படையில்]—செப்பும்
பொருளிழந்தேன் ஆதலினுற் பூவை புரியும்
அருளிழந்தேன் ஆயினேன் யான்.

விதூடகன்—[கீழ்நோக்கித் தனக்குள்] இவர் மேனேக்கிப் பெருமூச்செறிதலால் என்னுல் தடுக்கப் பட்ட இவருக்குக் காதல் மிகவும் பெருகிற்றென்று ஊகிக்கின்றேன். ஆதலானன்றே "காமம் கடத்தற் கரியது" என்று பெரியோர் கூறுவர். [வெளிப்படையில்] ஓ! நண்பரீர்! "இன்று மாலைக் காலத்தில் யான் அங்கு வருவேன் என்பதைச் சாருதத்தர்பாற் சொல்லுக" என்று அவள் கூறினுள். ஆதலின், இரத்தின மாலையைப் பெற்றுக்கொண்ட அளவில் மகிழ்ச்சியுருது மற்றென்றைப் பெறுதற்கும் வரக்கூடுமென்று எண்ணுகின்றேன்.

---

பல பொருள்களினும் சென்று ஆற்றலின்மையாற் பயன் பெருமற் கேடுற்று மீண்டு அவன் உள்ளத்தே அடங்கிவிடும் என்பதாம்.

சாருதத்தன்—தோழ! அங்ஙனமேவருக. [1]மகிழ்ந்து செல்வாள்.

சேடன்—(வந்து) ஐயன்மீர்! யான் சொல்வதை உற்றுக் கேளுங்கள்.

147. எங்ஙனம் எங்ஙனம் எழுமுகிற் கண்டம்
பொழிதரும் அங்ஙனம் புறந்தோல் நனையும்
எங்ஙனம் எங்ஙனம் இளந்தண் காற்றிவ்
வுடற்கண் ஒன்றும் அங்ஙனஞ் சடக்கென
என்னுளம் நடுங்குமால் என்னே! என்னே!

(சிரித்து)

148. எழுதுளை யோடுநல் லிசைதரு குழலும்
எழுநரம் போடிசை யாழும்வா சிப்பன் அக்
கழுதையின் ஒலியெனக் கானமும் பாடுவேன்
தும்புரு நாரதன் என்போர் இருவருள்
என்போற் கானம் இசைப்பவர் யாரே?

"கும்பீலக! நீ சென்று எனது வரவை மாட்சிமிக்க சாருதத்தர்பால் தெரிவி" என்று பெருமை மிக்க வசந்தசேனை எனக்குக் கட்டளையிட்டிருக்கின்றாள். ஆதலின், மாட்சி மிக்க சாருதத்தரது இல்லத்தை அடைகின்றேன். (சுற்றி வந்து வாயில்வழி நுழைதலை அபிநயித்துப் பார்த்து) இதோ சாருதத்தர் இளமரப் பூங்காவில் இருக்கின்றார். அந்தப் பொல்லாச் [2]சிறு பையலும் இதோ இருக்கின்றான். ஆதலின், அருகிற் போகின்றேன். இச் சிறுமரப்பொழிலை அடைதற்

---

[1] அவள் விரும்பியதைக் கொடுப்பேன் என்பது கருத்து.
[2] விதூடகன்.

குரிய வழி முடப்பட்டிருக்கின்றதே! நிற்க. இந்தப் பொல்லாச் சிறு பையலுக்குக் குறிப்புக் காட்டுகின்றேன். (என்று சிறிய பரற்கற்களை எறிகின்ருன்.)

விதூடகன்—ஆ! இப்பொழுது வேலிசூழ்ந்த விளா மரத்தையெறிதல்போல என்னைச் சிறு கற்களால் எறிகின்றவன் யார்?

சாருதத்தன்—இச்சோலைக்கண் உள்ள மேல் வீட்டுப் புறந்திண்ணையில் விளையாடுகின்ற புருக்களால் வீழ்த்தப்பட்டிருக்கும்.

விதூடகன்—இழிவு மிக்க பொல்லாப் புருவே! இரு. இரு. முதிர்ந்து பழுத்த மாம்பழத்தை வீழ்த்தல் போல இம்மரத் தடியால் நின்னை இம் மேல்வீட்டினின்றும் நிலத்தில் வீழ்த்துவேன். (என்று மரத்தடியை ஓங்கிக்கொண்டு ஓடுகின்ருன்.)

சாருதத்தன்—(பூணூலை இழுத்து) தோழ! இரு. இதனுல் என்ன? வருந்தத்தக்க இப் புரு, பேடையோடு கூடியிருக்கட்டும்.

சேடன்—ஈதென்னை? புருவைப் பார்க்கின்ருன். என்னைப் பார்க்கின்ருனில்லை. மற்றொரு சிறு கல்லால் மீண்டும் எறிகின்றேன். (அங்ஙனமே செய்கின்ருன்.)

விதூடகன்—(நாற்புறமும் பார்த்து) கும்பிலகனு? அப்படியாயின் அருகிற் செல்கின்றேன். (பக்கல் அணுகி வாயில் வழியைத் திறந்து ஏட! கும்பிலக! வா. உன் வரவு நல்லதாக.

சேடன்—(உட்புகுந்து) ஐய! வந்தனம்.

விதூட்கன்—ஏட! இம்மழைக்கால் இருட்டில் நீ எதற்காக வந்தாய்.

சேடன்—ஏட![1]இதோ அவள்.

விதூடகன்—[2]யார்? இவள் யார்?

சேடன்—இதோ அவள்.

விதூடகன்—இழிதகவ! இப்பொழுது ஈதென்ன? வறுமைக் காலத்திற் கிழத்துறவிபோல [3]ஸா ஸா என்று மேல்மூச்செறிகின்றாய்?

சேடன்—ஏட! நீயும் இப்பொழுது இந்திர விழாவிற் பலிவிருப்பமுள்ள காக்கைபோலக் 'கா கா' என்று எதற்காக நன்றாகக் கத்துகின்றாய்?

விதூடகன்—இனி இன்னதென்று சொல்.

சேடன்—(தனக்குள்) இவ்வாறு சொல்லுவேன். (வெளிப்படையில்) ஏட! நினபால் ஒன்று வினவுகின்றேன்.

விதூடகன்—[5]யான் வென்று உன்தலையிற் காலை வைத்து விடுவேன்.

---

[1] வசந்தசேனையின் வருகையை விதூடகன் முன்னரே அறிந்தவன் என்பதாலும் அவள் வருகையை வெளிப்படையாகக் கூறலாகாது என்பது பற்றியும் 'இதோ அவள்' என்று குறிப்பாகக் கூறினன்.

[2] இன்னாள் என வெளிப்படக் கூறவில்லை என்னுஞ் சினத்தால் 'யார்? இவள் யார்?' என்றான்.

[3] ஸா என்பதற்கு வடமொழியில் அவள் என்பது பொருள். ஈண்டு இது மூச்சின் அநுகரண ஒலியாகக் கொண்டு கூறப்பட்டது.

[4] கா என்பதற்கு வடமொழியில் யாவள் என்பது பொருள். இது காக்கையொலியாகக்கொண்டு கூறப்பட்டது

[5] யான் விடை கூறி வென்றுவிடுவேன் என்பது கருத்து.

சேடன்— அடே! அப்படியானுல் அறிந்து சொல். எக்காலத்தில் மாமரங்கள் அரும்புகின்றன?

விதூடகன்—அடே! இழிதகவ! முதுவேனிற் காலத்தில்.

சேடன்—(நகைத்து) அடே! இல்லே. இல்லே.

விதூடகன்— (தனக்குள்) இப்பொழுது இவ்விடயத்தில் என்ன சொல்லுவேன்! (நினைவு கூர்ந்து) நிற்க. சாருதத்தரை யடைந்து கேட்கின்றேன். (வெளிப்படையில்) அடே சிறிது நேரம் நில். (சாருதத்தர்பக்கல் அணுகி) ஓ! நண்பரீர்! ஒன்று வினவுகின்றேன். எக்காலத்தில் மாமரங்கள் அரும்புகின்றன?

சாருதத்தன்—மூட! வசந்தகாலததில்.

விதூடகன—(சேடனருகிற் சென்று) [1]மூட! வசந்த காலத்தில்.

சேடன்—நின்பால் இரண்டாவதாக ஒன்றை வினவுகினறேன். நல்ல செல்வப் பெருக்குடைய கிராமங்களைக் காப்பது எது?

விதூடகன்—அடே! வீதி.

சேடன்—(நகைப்போடு) அடே! இல்லே. இல்லே.

விதூடகன்—நிற்க. ஐயத்தில் வீழ்ந்துவிட்டேன். (நினைவுற்று) நிற்க. சாருதத்தரை மீண்டும் கேட்கின் றேன். (மீண்டும் திரும்பிச் சாருதத்தரை நோக்கி அங்ஙனமே கேட்கின்ருன்.)

சாருதத்தன்—நண்ப! சேனை.

---

1 சாருதத்தர் 'மூட' என்று தன்னை விளித்ததையே கொண்டு தானும் சேடனை நோக்கிக் கூறுகின்ருன்.

விதூடகன்—(சேடன் பக்கல் அணுகி) அடே! இழிதகவ! சேனை.

சேடன்—இரண்டனையும் ஒருதொடராக்கிவிரைந்து சொல்.

விதூடகன்—சேனை வசந்த.

சேடன்—அடே! மாற்றிச் சொல்.

விதூடகன்—(உடம்பைத் திருப்பிக்கொண்டு) சேனை வசந்த.

சேடன்—அடே! மூடப்பயலே! பதங்களை மாற்றிக் கூறு.

விதூடகன்—([1]கால்களைத் திருப்பிக்கொண்டு) சேனை வசந்த.

சேடன்—அடே மூட! எழுத்துப் பதங்களை மாற்றிச் சொல்.

விதூடகன்—வசந்தசேனை.

சேடன்—அத்தகைய இவள் வருகின்றாள்.

விதூடகன்— அப்படியாயின் சாருதத்தர்பால் தெரிவிக்கின்றேன். (அருகிற் சென்று) ஓ! சாருதத்தரே! தங்களுடைய [2]தனிகன் வருகின்றான்.

---

[1] பதங்கள் என்பதற்குக் கால்கள் எனப் பொருள் கொண்டு கால்களைத் திருப்பிக்கொண்டு கூறினான்.

[2] தனிகன்-கடன் கொடுத்தவன். வசந்தசேனை பொருள் கவர வருகின்றாளென்று கருதி அவ்வாறு கூறினன்.

சாருதத்தன்—நம் [1]வீட்டில் தனிகன் எங்கே?

விதூடகன்—நம்வீட்டின்கண் இல்லையாயின்வாயிலின்கண் இருக்கின்ருன். இதோ வசந்தசேனை வந்து விட்டாள்.

சாருதத்தன்—நண்ப! என்னை [2]ஏமாற்றுகின்ருயா?

விதூடகன்—என் சொல்லில் நம்பிக்கையில்லையாயின் இக் கும்பீலகனைக் கேளுங்கள். அடே! இழிதகவ! கும்பீலக! அருகில் வா.

சேடன்—(அருகிற் சென்று) ஐய வந்தனம்.

சாருதத்தன்—நல்லோய்! நின் வரவு நல்லதாக. சொல். உண்மையாகவே வசந்தசேனை வந்து விட்டாளா?

சேடன்—இதோ! அவ் வசந்தசேனை வந்து விட்டாள்.

சாருதத்தன்—(மகிழ்ச்சியோடு) நல்லோய்! யான் ஒரு பொழுதும் அன்புரையைப் பயனில்லாததாகச் செய்வதில்லை. ஆதலின், மகிழ்ச்சியோடு தரும் இப் பரிசிலைப் பெற்றுக்கொள். (என்று மேலாடையைக் கொடுக்கின்ருன்.)

---

[1] நம் வீட்டை நோக்கி இத் தனிகன் வரவேண்டியதென்? யான் யாரிடத்திலும் கடன் வாங்கியதில்லையே? என்பதாம்.

[2] பொய்யுரையால் எனக்குக் காதலை வளர்விக்கின்ருய் என்பது கருத்து.

சேடன்— (பெற்றுக்கொண்டு வணங்கி மகிழ்ச்சியுடையனாய்) பெருமாட்டியிடம் தெரிவிக்கின்றேன். (என்று போய்விட்டான்.)

விதூடகன்—ஓ! ஓ! இத்தகைய மழை நேரத்தில் எதற்காக வந்தாளென்று அறிகின்றீர்களா?

சாருதத்தன்—நண்ப! நன்கு துணிகின்றேனில்லை.

விதூடகன்—யான் அறிவேன். இரத்தினமாலைசிறு விலையுடையது; பொற்பணி முடிப்புப் பெருவிலையுடையது என்று கொண்டு மகிழ்ச்சியடையாமல் மற்றொன்றைப் பெறுதற்கு நாடி வந்தாள்.

சாருத்தத்தன—[1] மகிழ்ச்சியுடையளாய்ச் செல்வாள்.

(பின்னர் ஆடைஅணிகள் திகழ [2]அவிசாரிகை வேடம் பூண்டு காதல் மிக்க வசந்தசேனையும் குடைபிடிக்கும் சேடியும் விடனும் வருகின்றனர்.)

விடன்— (வசந்தசேனையை நோக்கி)

149. [3]காமுகராய் வழிச்செல்வோர் கணந்தொடர
இன்பநுகர் காலத்தேநாண்

---

[1] அவளுக்குக் கொடுக்கத் தகாத பொருள் யாதுளது? என்பது கருத்து.

[2] அவிசாரிகை-காமநோயாற் பற்றப்பட்டுத் தலைவன் இருக்குமிடத்தை நாடிச் செல்கின்றவள்.

[3] நாண் ஏமம் உறீஇ-நாணுகிய காவலை எய்தி. விலைமகளிர்க்குச் சுரதகாலத்தில் நாணம் பூணுகு மென்ப. சுரதநிலமாகிய அரங்கம்-இன்பம் நுகர்தற்குரிய இடம். மதனர்

ஏமமுறீஇச் சுரதநில மெனுமரங்கில்
விளையாட்டின் ஏகும் இம்மான்
தாமரைநீங் கியதிருவோ தனிமதனர்
மென்படையோ தகைசால் கற்பின்
தூய்மையுறு குலமகளிர்க் குறுதுயரோ
மதனதருத் துலங்கும் பூவோ.

வசந்தசேனே பார்! பார்!

150. [1]பிரிந்துறை மகளிர் வருந்துள மொத்த
பிறங்கற் சிமயத் திறங்கித் தூங்கும்
உருவுடைப் புயல்கள் உரற்றின; அவ்வொலி
கேட்டுளங் களித்துக் கிளர்சிறை விரித்து
விரைந்தெழூஉ மயில்கள் மிளிர்மணிச் சிவிறியின்
விண்ணினை விசிறுதல் போலும் நண்ணிய
சேற்றில் தோய்ந்து தோற்றும் முகமுடைத்
தவளைகள் மழையில் தாக்குறீஇத் திவளும்
அந்நீ ருண்ணுவ; முன்னுவெங் காம
மீதுறு மயில்கள் வாய்திறந் தகவுவ;
செந்நிறக் கடம்பு பொன்விளக் கிடுவன

---

மென்படை-மலர். முதலிற் காமனை வீரனாகக் கொண்டு அவனது படைக்கலமாகவும், பின்னர் அவனை மரமாகக் கொண்டு மலராகவும் உருவகப்படுத்தமையால், கூறியது கூறல் இன்றாமெனக் கொள்க.

[1] வருந்து உள்ளம் ஒத்த புயல்கள் எனவும், இறங்கித் தூங்கும் உருவுடைப் புயல்கள் எனவும் கூட்டுக. பிரிவின் வருந்தும் மகளிருள்ளம் கருமைநிறம்பற்றி யொப்பாம். பிறங்கல்-மலை. சிமயம்-குடுமி. குலவொழுக்கிறந்த கீழ்மக்கள் பால் துறவுநிலை விளக்க முறாமைபோல முகிற்படலத்தில் மதி மறையுமென்க.

குலவொழுக் கிறந்த நலமில் லோர்கொள்
மாணறு துறவிற் சேணுறு முகிலின்
மதிமறை தருமால்; விதிமுறை யிழுக்கிய
தாழ்குடிப் பிறந்த தருணி போல
அலேமின் ஓரிடம் நிலேயுதல் இன்றே.

வசந்தசேனே—ஐய! [1]நன்று கூறினீர். [2]இப் பெண், [3]அறிவிலாய்!

151. '[4]நெருங்கிய பயோதரத் தென்னி னேயன்மிக்கு
ஒருங்கியின்புறினுனக்கென்னென்ருேலமிட்டு
அருஞ்சினம் உற்றெனத் தகைந்த டிக்கடி
மருங்கிரா மாற்றவள் வழிம றைக்குமால்.

விடன்—நிற்க. இங்ஙனம் செய். இரவாகிய இப் பெண்ணைப் பழித்துரைப்பாயாக.

---

[1] 'தாழ்குடிப் பிறந்த தருணி போல மின்னல் ஓரிடத்து நிலேயுதல் இன்று'' என்று முற்செய்யுளின் இறுதியிற் கூறியன ப் பாராட்டுகின்ருள்.

[2] இப்பெண் என்பது பின் வருஞ் செய்யுளில் இரா மாற்றவள் என்பவற்ருேடு இயையும். மாற்றவளாகிய இரவென்னும் இப்பெண் எனப் பொருள்கொள்ள வேண்டும்.

[3] வசந்தசேனேயைக் குறித்து.

[4] பயோதரம்-மேகம்; நகில். நேயன் சந்திரனேக் குறிக்கும். இரவுக்கு நாயகன் அவனுகலின். இரா மாற்றவள்-இரவாகிய ஸபத்தினி. இரவு இன்பம் நுகர்தற்கு ஏற்றதாகலின், மாற்றவள் எனப்பட்டது. வசந்தசேனே, தன்னே நோக்கி இரவாகிய மாற்றவள் கூறியதாகக்கொண்டு கூறியது.

வசந்தசேனை—ஐய! பெண்பாலார்க்கு இயற்கையாக அமைந்த [1]கெட்ட எண்ணம் வாய்ந்த இவ்விரா மகளைப் பழித்தலால் வரும் பயன் யாது? ஐய! பார்க்க.

152. [2]மங்குல் பொழிக உறுமுக மாவசனி
இங்கு விடுக இவற்ருனென்?—பொங்கிய
தண்மையொடு வெம்மையினைத் தாமதியார் தம்மன்பர்க்கு
எண்மையுறச் செல்மகளிர் ஏற்று.

விடன்—வசந்தசேனை! பார்க்க, பார்க்க. இது மற்றென்று.

153. [3]காற்றெனும் வினைவ ஞற்கடு வேகங்
கலந்துநீர்த் தாரையாம் பெரிய
கோற்றிரள் அரவப் போர்ப்பறை முழக்கும்
குலவுமின் பதாகையுங் கொண்டு
சாற்றுமக் கொண்மூ அரசுவிண் ணிடமாங்
தரியலர் நகர்நடுச் சார்ந்தங்கு
ஆற்றலில் பகைவ னஞ்செழு மதியின்
அமைகரம் அனைத்தையும் பெறுமால்.

---

[1] இயற்கைக் குணத்தை மாற்றல் அரிது என்பதாம்.

[2] இடையூறு பலவுறினும் அவற்றைக் கடந்து காதலன்பாற் சேர்தற்குக் காமன் துணையுண்டென்பது கருத்து.

[3] மேகமாகிய வல்லரசு, காற்றெனும் அமைச்சனுற் கடுவேக முற்றுத் தாரையாகிய அம்புத்திரளையும் இடிமுழக்கமாகிய பறையையும் மின்னலாகிய கொடியையும் கொண்டு விண்ணுகிய பகைவர் நகர் நடுவண் புக்குத் திங்களாகிய பகைவனிடத்தினின்றும் திறை முழுதும் பெறுகின்றுன் என்பதாம். வினைவன்-அமைச்சன். கோல்—அம்பு. தரியலர்—

வசந்தசேனை—இஃதிங்ஙனமாக. ஆ! இது மற்றொன்று.

154. [1]களிற்றரை சென்னக் கருமையுற் றகடு
காலினால் நிரம்பலின் நான்று
பிளிற்றிமின் பகத்தால் நிறம்பல வமைந்து
பிறங்குமிப் புயலினெஞ் சுடைகால்
அளித்துறு மகிழ்நர்ப் பிரிந்துறை மகளிர்க்கு
அண்ணுசாப் பறையென வஞ்ச
வுளப்பகம் உப்பைப் புண்ணிலிட் டென்ன
உரற்றுமா விதனவா வொழிக.

விடன்—வசந்தசேனே! இஃது இங்ஙனமாக மற்றொன்றைக் காண்க.

---

பகைவர். கரம்-திறை; கிரணம். ஒரு வல்லரசு பகைவனிருக்கும் நகர் நடுப் புக்கு அவனைத் தாழ்வித்துத் திறை பெறுதல்போலச் சந்திரனுக்கு இருப்பிடமாகிய விண்ணிற் பரந்து அவனொளியைத் தடுத்தலான் மேகத்தின் பெருமை புலப்படுத்தவாறு.

[1] யானை போலக் கருமை நிறம் பெற்று, வயிறு காற்றால் நிரம்புதலால் தொங்கிப் பேரொலி செய்து, மின்னலானும் கொக்குக்களானும் பன்னிறம் வாய்ந்து விளங்கும் இம் முகிலால் நெஞ்சம் உடைந்திருக்குங்கால், இவ்வஞ்ச உள்ளத்தை உடைய கொக்கு, உப்பைப் புண்ணிலிட்டாங்கு மகிழ்நரைப் பிரிந்துறையும் மகளிர்க்குச் சாப்பறையெனப் பேரொலி செய்யும். ஆ! இதன் அவாக் கெடுக என்பதாம். அகடு-வயிறு. கால்-காற்று. நான்று—தொங்கி. பகம்-கொக்கு. அளித்துஉறும்-அருள்புரிந்து கூடும். வஞ்ச உளப் பகம் உரற்றும் என்க. உரற்றல்—பேரொலி செய்தல்.

155. [1]கொக்கினங்க ளேவெண் டலைப்பாகாக்
கூரொளிமின்
தக்கவா மேல்சைக்குஞ் சாமரையா—மிக்க
மதவா ரணவுருக்கொள் வாஞ்சை யுறல்போற்
பதவா னகம்விளங்கல் பார்.

வசந்தசேனை—ஐய! பார்க்க. பார்க்க.

156. [2]வானனை தமாலபத்திர நீலம்
வயங்குமிம் முகில்களுண் கதிரைத்
தானுடைத் தம்பு படவிழுங் கரிபோற்
தாரையால் விழும்பல புற்று

---

[1] கொக்கினம் வளைந்து சுற்றுதலால் தலைப்பாகு ஆகவும், மின்னல் மறைந்து வெளிப்படுதலானும் வெண்ணிறத்தானும் சாமரையாகவும் கொள்ளப்பட்டன. பட்டத்து யானைக்குத் தலைப்பாகும் சாமரையும்உண்டென்ப. விண் யானையுருக்கோடலில் விருப்பமுள்ளதுபோற் காணப்படுதலைப் பார் என இயைக்க.

[2] தமாலபத்திரம்போல் நீலநிறம் வயங்கும் இம் முகில்களால் உண்ணப்பட்ட கதிரை வான் தானுடைத்து. அம்புகளால் தாக்கப்பட்டு யானை வீழ்தல் போல மழைத்தாரைகளால் தாக்கப்பட்டுப் புற்றுக்கள் விழுகின்றன. வன்றிறவில்லாத் தலைவனை யோட்டி அவன் மனைவியை வலியர்ளுெருவன் கவர்தல்போல, மேகம் சந்திரனை ஓட்டிச் சந்திரிகையைக் கவர்ந்துகொண்டது என்பதாம். தமாலம்-பச்சிலை. வான் தானுடைத்தென்பதனல் வானிடமெல்லாம் மேகங்கள் பரந்து சூரியனை மறைத்தன என்பது போதரும். மேகங்கள் சூரியனை மறைத்தலோடு சந்திரனையும் மறைத்தல் ஈண்டுக் கூறப்படுதலால் இக்காலத்தை மாலைப் பொழுதின் இறுதியாகக் கொள்ளவேண்டும்.

மேனிலத் துறும்பொன் விளக்கென மின்னல்
விளங்கும்வெண் ணிலவினை மேகம்
ஆனவன் திறலில் தலைவனை யோட்டி
அவன்மனை கவர்ந்தெனக் கவரும்.

விடன்—வசந்தசேனே! பார்க்க, பார்க்க

157. [1]மின்னலாங் கச்சை யாப்பு
மிளிர்தரக் களிறு போலத்
துன்னிநின் றெங்கு மோடித்
துதையொழுக் குடையிக் கொண்மூப்
பொன்னில வேந்த னாணை
பூண்டுபின் நானி லத்தை
உன்னுவெண் பொற்க யிற்றால்
உயர்நிலத் தீர்ப்ப போன்ற.

158. [2]மிகுங்காற்றால் நிறைந்தொலித்து மேதியினம்
போற்கறுத்து மின்ன லாய

[1] மின்னலாகிய உதரபந்தனக்கட்டு விளங்கக் களிறு போல நெருங்கி யாண்டும் ஓடி நெருங்கிய நீரையொழுக்கும் இம் மேகங்கள், இந்திரன் ஆணையைத் தாங்கி நிலத்தை வெள்ளிக் கயிற்றால் மேனிலத் தீர்ப்பபோற் காணப்படுகின்றன என்பதாம். யானைக்கு ஒழுக்கு மத நீராகும். மழைத் தாரைகள் விண்ணினின்று நிலம்வரை இடையறாது உறுதலானும், வெண்ணிறம் உடைமையானும் வெள்ளிக் கயிறு போன்றன. இந்திரன் தன்னாற் காக்கப்படும் நிலம் செய்மையிலிருத்தலை அணிமையிற் கொணரக் கட்டளை தர, மேகங்கள் ஈர்ப்பன போலும் என்பது உவமையைத் தன்னுள் அடக்கிய தற்குறிப்பேற்ற அணியாகும்.

[2] மேதி-எருமை. பறக்குங் கடல்போல விளங்கும் முகில். புதுமழை பெய்யுங்கால் நிலத்தில் மண்மணம் தோன்றும்.

தகுஞ்சிறகால் விண்பறக்குஞ் சலதியெனத
தயங்குமுகில் சாருங் கந்தம்
புகுந்தமையரான் வீறுற்றுப் புதியபசும்
புன்முளையாற் பொலியும் பூமிக்கு
உகுந்தானர பலவீழ்த்தல் ஒளிர்வயிர
மணிப்படையாற் பிளததல் ஒக்கும்.

வசந்தசேனை—ஐய! இது மற்றென்று.

159. [1]கேகையினுல் வருகவரு கெனவகவி
மயில்களெலாங் கிளர்ந்தழைப்ப
ஓகைமிகுங் கொக்கினங்கள் விரைந்துயரப்
பறந்துதிரி யொளிர அஞ்சிச்
சோகமிக வுறம்வகினம் தாமரைப்பூ
அமளியினைத் துறந்து நோக்க
மேகமிது மைக்குழம்பால் திசைதீற்றி
யெனவிருண்டு மிசைக்கட் செல்லும்.

விடன்—இஃது இங்ஙனம். ஆதலிற் பார்க்க.

---

பூமிக்கு-நிலத்தின்கண். பிளத்தற்குச் செயப்படுபொருள் நிலமாகும். உருவம் ஒலி பரப்பு நீருடைமை என்னும் இவற்ருன் மேகத்துக்குக் கடல் ஒப்பாகும். வெண்மையானும் கூர்மையானும் மழைத்தாரைகளுக்கு வச்சிரப்படை ஒப்பாகும். நிலம் தன்னுளடக்கிய பயனை முழுதும் நெடுநாளாக மக்களுக்கு வழங்கவில்லை என்னும் சினத்தால் பிளக்கத் துணிந்தது போலும் என்பது குறிப்புப் பொருள்.

[1] கேகை-மயிலின் குரல். எகினம்-அன்னம். முகிலெழுச்சியில் மயில்களும் கொக்குக்களும் உவகையுறுவன. அன்னம் துன்புறும். பெரியோர்க்கு நலமுண்டாய அளவில் அவரைச் சார்ந்தார்க்கு ஆக்கமும் சாராதார்க்குக் கேடும் உண்டாம் என்னும் உண்மையைக் குறிப்பிற் புலப்படுத்தவாறு.

160. [1]அசைவறுதா மரைக்குழுவாங் கண்முகிழ்த்துப்
பகலிரவை யறியா தல்லும்
மிசைவருமின் னுல்மறைந்து மறுகணத்தில்
வெளிப்படமே தினியாம் நங்கை
தினசமுகம்போர்த் தசைவின்றிக் குடைபோலச்
செறிந்தமுகல் விதான மாக
இசைவுறச்சூழ் மழைசுவரா இயைந்தவொரு
நீர்த்தாரை யில்லில் தூங்கும்.

வசந்தசேனை—ஐய! இஃது இங்ஙன ன்றே. ஆதலிற் பார்க்க. பார்க்க

161. [2]பொல்லாதா ரிடைப்புரிந்த நன்றியென
ஒளியிழந்து பொன்றும் விண்மீன்
அல்லாருந் திசையனைத்தும் அன்பினியல்
காதலனை யகன்ற பெண்போல்
[3]எல்லாரும் அமரர்பதி படைநெருப்பான்
மிகவுமக மியைந்து வெம்பி

---

[1] மேதினியாம் நங்கை நீர்த்தாரையாகியஇல்லில் தூங்குவது போலும் என்க. கண்முகிழ்த்தலும், இரவு பகல் அறியாமையும், கனவு தோன்றி மறைதலும், போர்த்துக் கோடலும், அசைவற்றுக் கிடத்தலும், பக்கச்சுவர் மேன்மூடலுள்ள வீட்டிற்படுத்தலும் உறங்குவோர்க்கு உள்ளன. அல்-இருள். விதானம்-மேற்கட்டி. மேலே நெருங்கிய முகில் விதானமாகவும், பக்கத்தே சூழ்ந்த முகில்கள் சுவராகவும் அமையப்பெற்ற இல்லில் என்க. நீர்த்தாரை-இடையறாத நீர்வீழ்ச்சி.

[2] காதலனையகன்ற பெண்போல் திசையனைத்தும் அல்லாரும் என்க. அல் ஆர்தல்-இருள் நிறைதல்.

[3] எல்-ஒளி. அமரர்பதி படை-வச்சிராயுதம் முகில் பொழிதல், விசும்பு-வச்சிரப்படையின் நெருப்பால் உள்

ஒல்லாத நீருருவின் விசும்புருகி
வீழ்தருமென் றுளங்கொள் கின்றேன்.

இன்னும் பார்க்க.

162. [1]வறுமையிற் புதிய செல்வம்
வாய்த்தவன் போலச் சால
உறுமிமேல் நோக்கித் தாழ்ந்திவ்
வுலகிற்பல் லிடத்தும் பெய்து
சிறுமைசெய் யிருளகத்திற்
செறிதரப் புரிந்து யாரும்
அறிதர உருவம் பல்வே
றமைந்திவண் தோன்றும் இவ்வான்.

விடன்—இ.ஃ. திங்ஙனம்.

163. [2]மின்னலின் விசும்பெரி மேவுதல் போலும்
துன்னிய கொக்கினஞ் சூழ்தர லானனி

---

வெதும்பி உருகி நீருருவின் வீழ்தல்போற் காணப்படுகின்றது என்பதாம்.

[1] இவ்வான் புதியசெல்வம் வாய்ந்தவன் போலத் தோன்றும் என்க. முகில், இடியொலி செய்து மேற்சென்றும் கீழிறங்கியும் பெய்து வானிடமெல்லாம் இருள் செறியப் புரிந்து யானை, மலை, மாளிகை முதலிய பல்லுருவெய்தித் தோன்றும் என்பதும், புதியசெல்வன் வன்சொற் கூறிச் செல்வக் களிப்பால் மேல்நோக்கி எதிர்நின்றோரை அவமதித்தும் பார்க்க விரும்பாமல் கீழ்நோக்கித் தகாத இடங்களில் தற்பெருமை குறித்துப் பொருள் வழங்கியும் அஞ்ஞான இருளை அகத்திற் கொண்டு பல்வேறு இயல்புகளைப் பொருந்தியும் நிற்பன் என்பதும் புலப்படுதல் உணர்க.

[2] விசும்பு, போலும் நேருறத்தோன்றும்; என்க. விசும்பு எழுவாய். முருக்கிய-அழிக்க.

சிரிப்பது போலுமிவ் வுருப்புனற் ருரையாம்
உந்துபல் சரந்தரும் இந்திர தனுவால்
பேரமர் முருக்கிய பெயர்தரல் போலும்
உலறிய இடியினுல் அலறுதல் போலும்
நலிதரு காற்றிஞல் நடுங்குதல் போலும்
நீருண் டிருண்டு சார்தரு முகில்களாற்
பெருங்கரும் பாம்பும் ஒருங்குசெறி புகையும்
நெருங்குதல் போலும் நேருறத் தோனறுமால்.

வசந்தசேனை—

164. [1]அன்பியல் காதலன் அகத்தைச் சாருவேன்
முன்புறு கொண்டனின் முழக்கின் அச்சுறீஇ
நின்பெருந் தாரையாம் நீள்க ரங்களால்
என்புரம் தீண்டலின் இகத்தி நாணமே.

ஓ! இந்திர!

165. [2]கொண்டல்முழக்காற் குமுறுதிநின்னுடை னக்குப்
பண்டுபயில் காமப் பரிசுண்டோ?—அண்டி
விழிநோக்குங் காதலன்பால் மேவுமெனை மாரி
வழிமறித்தல் மாண்பன் றுனக்கு.

166. அகலியை தன்பொருட்டால்யான்கோதமனென்
றிகலுமதி காமத் தியைந்து—புகலுமுரை

---

[1] கொண்டல்-மேகம்; விளி. சாருவேனை அச்சுறுத்திக் கைகளால் என் உடம்பைத் தொடுதலின் நாணமில்லாயாயினை என்க. புரம்-உடம்பு. விருப்பமில்லாத ஒருத்தியை வலிந்து தீண்டல் நாணில் செய்கையாகும் என்பதாம்.

[2] மாரி-மழையால். பெண்பாலரிடத்து வீரங்காட்டல் ஆண்மையன்றாதலின் ''மாண்பன்று'' என்று கூறப்பட்டது.

பொய்யன்றே யிந்திர[1] அப்புன்கண் எனக்குமுள
தையோ மழையை யகற்று.

167. பேரொலியைச் செய்துமழை பெய்திங் கசனிபல
[2]ஆர விடுக்கினுமென் னுயிரங்கண் - நேர்மகவ
காதலனைச் சாரக் கருதிப் படர்மகளிர்க்கு
ஏதுந் தடையாவ தில்.

168. [3]ஆடவர் வன்கணர் ஆத லான்முகில்
மாடுறப் பேரொலி செயினுஞ் செய்கமன்
ஏடவிழ் கூந்தலார்க் கியையும் இன்னலை
நாடிலை மின்னலாம் நங்கை நீயுமே.

விடன்—அம்மே! பழித்துரைத்தல் வேண்டா. தங்களுக்கு இம்மின்னல் உதவி செய்வதாகும்.

169. [4]மன்னுமயி ராவதத்தின்
மார்பினலை பொற்கயிறும்

---

[1] அப்புன்கண்—அவ் வருத்தம். கோதமன் சினத்தை யறிந்தும் உள்ளத்தால் நினைந்த அகலியையைக் கூடுதற்கு நீ கொண்டவருத்தம், காதலனைக் கூடுதற்குச் செல்லும் எனக்கும் உண்டென்பதாம்.

[2]ஆர-நிறைய.

[3] முகிலை ஆடவனாகவும் மின்னலைப் பெண்மகளாகவும் கொண்டு கூறியது. இன்னல்-துன்பம். மின்னல் அடிக்கடி கண்களுக்குப் புலப்பட்டு மறைதலால் வழிச்செல்லுதற்கு இடையூறு செய்கின்றது என்பது கருத்து.

[4] முகில்கள், ஐராவதம் மலைச்சிகரம் இல்லம் இவற்றின் வடிவங்களாகக் காணப்படுதலானும், மின்னல், வெண்மை பொன்மை நிறமுடையதாகத் தோன்றுதலானும் ஒப்புமை அறியப்படும். முகில் நீலநிறம் உடையதாயினும், மின்னுத்

துன்னுமலை யுச்சியின்கண்
தோன்றுதூகிற் கொடியுமுயர்
மன்னர்மக வானில்லின்
நடுவணுறு தீபமும் போல்
மின்னிகின துயிரனையான்
மேவுமிடம் விளம்புறுமால்.

வசந்தசேனை—ஐய! அஃது உண்மையே. இதோ தோன்றுகின்றது அவ்வில்லம்.

விடன்—எல்லாக் கலைகளையும் உணர்ந்த தங்களுக்கு இப்பொழுது உபதேசிக்கற்பாலது ஒரு சிறிதுமின்று. ஆயினும், நட்புரிமை சிறிது கூறத் தூண்டுகின்றது. இக்காதலன் இல்லத்துள் புகுந்தபின் சினத்தை மிகுதியாகக் கொள்ளல் கூடாது.

170. [1]ஊடனீட் டிப்பினின் பொழியும் என்னினும்
ஊடலின் றெனிற்சுகம் உறுதல் எங்ஙனம்?
ஊடுதி சினங்கொளா உறுத்தி காந்தனைக்
கூடுதி யன்னதால் உவகை கூட்டுதி.

---

தோன்றும் பொழுது வெண்மையாகக் காணப்படும். ஆதலின் ஐராவதமாகக் கூறப்பட்டது. ஒரு சமயம் மேகத்துக்குக் கீழும், மற்றொரு சமயம் மேலும், பிறிதொரு சமயம் நடுவிலும் மின்னல் வெளிப்படுதலின் மூன்று விதமாக உவமிக்கப்பட்டது.

[1] ஊடல் நட்டித்தல் துனியாகும். அதனால் இன்பமின்றாம். ஊடுதல் இன்ப வளர்ச்சிக்கு ஏதுவாகும். "ஊடுதல் காமத்திற்கின்பம்" (திருக்குறள் 1330.) "துனியும் புலவியுமில்லாயிற் காமங், கனியுங் கருக்காயு மற்று' (திருக்குறள் 1306) என்பன ஈண்டு ஒப்பு நோக்கற்பாலன.

நிற்க. இனிச் செயற்பாலது இது. ஓ! ஓ! யார் மாட்சி மிக்க சாருதத்தர்க்குப் பின் வருமாறு அறிவித்தல் வேண்டும்.

171. [1]செங்நிறவெண் ணிறக்கடம்பின் மலர்மணமும்
புயற்குழுவுந் திகழிக் காலம்
மின்னலினம் புதவொலியின் மிகநடுங்கி
நினைக்காணும் வேட்கை யாற்றன்
பொன்னொளிர்நூ புரவடியிற் படிந்தகருஞ்
சேறுகழீஇப் பொருவில் காமம்
மன்னியுளம் மகிழ்ந்தளகம் நனைதரக்கா
தலனும்நின் மனைக்க ணுற்றாள்.

சாருதத்தன்—(கேட்டு) நண்ப! இஃது என்ன வென்று அறிக.

விதூடகன்—தங்கள் கட்டளைப்படியே. (வசந்தசேனையின் பக்கல் அணுகி அன்போடு) அம்மே! தங்களுக்கு மங்கலம் உண்டாக.

வசந்தசேனை—ஐய! வந்தனம். ஐயன் வரவு நலமுடையதாக. (விடனை நோக்கி) ஐய! குடை பிடிக்கும் இவள் தங்களுக்கே இருக்கட்டும்.

விடன்—(தனக்குள்) என்னைத் திரும்பிப்போம்படி செய்தற்கு இவ்வுபாயத்தைத் திறமையோடு மேற்

---

[1] அற்புதம்-மேகம். சிவிகை முதலியவற்றில் ஏறிவரும் தகுதியுடையளாயிருந்தும் காலான் நடந்து மழையால் நனைந்து நேர்ந்த அச்சத்தையும் பொருட்படுத்தாமல் வந்ததற்குக் காரணம் அவள் காதலன்மாட்டுள்ள காதல் நிறைவென்பது கருத்து.

கொள்ளுகின்றாள். (வெளிப்படையாக) அங்ஙனமே ஆக. அம்மே! வசந்தசேனே!

172. [1]பொல்லாமை யுருவினதாய்ச் செருக்கொடுவஞ்
சகமாயை பொய்ம்மை யாதி
யெல்லாமுண் டாவதற்கோர் பிறப்பிட்மா
யின்பவிளை யாட்டிற் கில்லாய்ச்
சொல்லாருஞ் சுரதவிழாப் பேறுடைய
தாய்த்துலங்குங் கணிகைக் கூலத்
தொல்லாத கண்ணோட்ட மெனும்பண்டக்
கெளிதின்விலை யுறுவ தாக.

வசந்தசேனை—ஐய! மைத்திரேயரே! உங்களுடைய சூதர் எங்கிருக்கின்றார்?

விதூடகன்—(தனக்குள்) ஓ! ஓ! இவள் கூறிய சூதர் என்னும் சொல்லால் நம் நண்பர் [2]அலங்கரிக்கப் பட்டுள்ளார். (வெளிப்படையில்) அம்மே! இவர் உலர்ந்த மரங்களையுடைய உபவனத்தில் இருக்கின்றார்.

---

[1] கணிகையராகிய கடைத்தெருவில் கண்ணோட்டமாகிய பொருட்கு விலை எளிதின் உறுவதாக என இயைக்க. கண்ணோட்டம் ஈண்டு ஆடவர் மனத்தை இன்புறுத்தலாகும். அதற்கு விலையாக அவர் பொருளை எளிதின் அடைக என்றான்.

[2] சாருதத்தர் அடைக்கலப் பொருளைச் சூதில் தோற்றார் என்னும் பொய்ம்மொழியை வசந்தசேனை ஏற்றுக்கொண்டு அவரைச் "சூதர்" என்று கூறியதாக நினைந்து அடைக்கலப் பொருளைக் கவர்ந்தார் என்னும் பழியை அச்சொல் ஒழித்தலின், அதனை அணிகலனாகக்கொண்டு கூறினான்.

வசந்தசேனை—ஐய! உங்களுடைய உலர்ந்த மரங்கள் சூழ்ந்த உபவனம் என்று சொல்லப்படுவது யாது?

விதூடகன்—பெருமாட்டி! எவ்விடத்தில் உண்ணுதலும் பருகுதலும் இல்லையோ அவ்விடமே யாம்.

(வசந்தசேனை புன்முறுவல் செய்கின்ருள்.)

விதூடகன்—ஆதலின் பெருமாட்டி உட்புகுக.

வசந்தசேனை—([1]மறைவிற் சேடியை நோக்கி) இவ்விடத்து உட்புகுந்து யான் [2]என்ன சொல்லுவேன்?

சேடி—"[3]சூதரே! இம் மாலைப்பொழுது தங்களுக்கு இன்பமுடையதாக இருக்கின்றதா?" என்று சொல்லுங்கள்.

வசந்தசேனை—[4]அவ்வளவு சொல்லுவதற்கு ஆற்றல் உடையேனு?

---

[1] விதூடகன் அறியாவண்ணம்.

[2] அன்புண்மையும் என் எளிமையின்மையும் புலப்படுதற்கு உரிய எச்சொல்லைக் கூறுவேன்? என்பது கருத்து.

[3] "சூதரே" என்னும் விளியால் என்வரவு அணிகலன்களின் நிமித்தமாகும்; கூடல் கருதி வலிய வந்ததாகக் கொள்ளற்க என்பது போதரும். இஃது எளிமையின்மையைப் புலப்படுத்தும். 'தங்களுக்கு இன்பமுடையதாக இருக்கின்றதா?' என்னும் இதனுல் எனக்குக் கூடலின்மையால் இன்பந் தந்திலது என்பது போதரும். இஃது அன்புண்மையைப் புலப்படுத்துவதாகும்.

[4] முதற்காட்சியில் இவ்வளவு சொல்ல இயலுமா? என்பதாம்.

சேடி—அவ்[1]வமயமே தங்களை ஆற்றலுடையா ளாகச் செய்யும்.

வசந்தசேனை—(உட்புகுந்து அருகிற்சென்று [2]மலர்களால் தட்டி) ஏ! சூதரே! இம்மாலைப்பொழுது தங்களுக்கு இன்பம் உடையதாக இருக்கின்றதா?

சாருதத்தன்—(பார்த்து) ஆ! வசந்தசேனை வந்து விட்டாள். (மகிழ்ச்சியோடு எழுந்து) ஏடி! காதலி!

173. [3]என்றுமிம் மாலை விழித்திருப்ப வேகுகின்றது
என்றும் பெருமூச் செறியவிராப்-பொன்றினவால்
மாதுன் னுடனு மகிழ்வேற் ககல்விழியிப்
போதயர்வு போக்கும் பொழுது.

ஆதலின் நின்பொருட்டு நல்வரவு கூறுகின்றேன். இதோ இருக்கையுள்ளது. இதன்கண் இருக்க வேண்டும்.

---

[1] சாருதத்தனைக் கண்ட அமயம், நாணத்தைப் போக்கிக் காதலை விரிவுறச் செய்யும் என்பதாம்.

[2] மலர்களால் தட்டுதல் தன்னைக் காமன் அம்புகள் தாக்குகின்றன என்பதைப் புலப்படுத்தற்காம்.

[3] விழித்திருப்ப ஏகுகின்றதென்பது வறிதே கழிகின்றதெனும் பொருள் தரும். நிகழும் மாலைப் பொழுதும் அங்ஙனமேயாம் என்பான் 'கழிகின்ற' தென நிகழ்காலத்தானும், வரும் இரவு இன்பந் தருதற்கு ஏதுவாம் என்பான் சென்ற இரவுகளைப் 'பொன்றின' என இறந்த காலத்தானும் கூறினன். பொழுது-இம்மாலைப் பொழுது. இப்போது அயர்வு போக்கும்-இவ்வமயம் நின் வரவால் துன்பத்தை ஒழிப்பதாகும்.

விதூடகன்—இதோ இருக்கையுள்ளது. பெருமாட்டி இருக்கவேண்டும்.

(வசந்தசேனை இருக்கையில் இருக்கின்றாள்.
அதன்பின் எல்லோரும் இருக்கின்றனர்.)

சாருதத்தன்—நண்ப! பார்க்க. பார்க்க.

174. [1]ஒருசெவி நுனியிடைத் தூங்கு மொண்கடம்பு
அரசிளங் குமரனுக் காட்டு மஞ்சனம்
புரைதரு மழைதரும் புனலி னாலொரு
திருமுலை நனைதர வாட் டுஞ் சீர்மையே.

ஆதலின், நண்ப! வசந்தசேனையின் ஆடைகளிரண்டும் நனைந்து போயின. வேறு இரண்டு சிறந்த ஆடைகளைக் கொண்டு வருக.

விதூடகன்—பெருமான் கட்டளைப்படியே செய்வேன்.

சேடி—ஐய! மைத்திரேயரே! நீங்கள் இருங்கள். [2]யானே நம் பெருமாட்டிக்கு உரிய பணிவிடைகளைச் செய்வேன். (அங்ஙனமே செய்கின்றாள்.)

---

[1] கடம்பு—கடப்பமலர். நீராட்டப்படும் ஒரு நகில் இளவரசனை ஒக்குமென்றமையால் மற்றொன்று இருக்கையி லிருக்கும் பேரரசனைப் போல உள்ளதென்பது போதரும். கடம்பு புனலினால் நகில் நனைதர ஆட்டும் சீர்மை இளவரசற்கு ஆட்டும் மஞ்சனத்தை ஒப்பாம் என இயைக்க.

[2] யான் உடன் கொண்டு வந்த ஆடைகளைக் கொடுத்து உபசரிப்பேன் என்பதாம்.

விதூடகன்—(மறைவித் சாருதத்தனைநோக்கி) ஏ! நண்பரீர்! பெருமாட்டி வசந்தசேனையின்பால் ஏதாவது ஒன்றைப்பற்றி [1]வினவுகின்றேன்.

சாருதத்தன்—அங்ஙனமே செய்க.

விதூடகன்—(வெளிப்படையில்) சந்திரனது ஒளி மறைந்திருக்கும் இத்தகைய மழைக்காலத்து இருளில் பெருமாட்டி இங்குவந்தது எக்காரணத்தைமுன்னிட்டு?

சேடி—பெருமாட்டி! இவ்வந்தணர் [2]அநாகரிகர்.

வசந்தசேனை—அடி' [3]நிபுணர் என்று சொல்.

சேடி—இப்பெருமாட்டி "அவ் விரத்தினமாலையின் விலை எவ்வளவு?" என்று கேட்பதற்காக இங்கு வந்தாள்.

விதூடகன்—([4]மறைவில்) ஓ! ஓ! "இரத்தினமாலை சிறு விலையுடையது; பொற்பணி பெருவிலையுடையது என்று கருதி மகிழ்ச்சியடையாதவளாய், மற்றென்றைத் தேடுதற் பொருட்டு இங்கு வந்திருக்கின்றாள்" என்று முன்னமே யான் கூறினேனன்றோ?

சேடி—இப்பெருமாட்டி அவ்விரத்தினமாலை தன்னது என்று கூறிச் சூதில் தோற்றுவிட்டாள். அச்

---

1 வினவுதலால் உரையாடல் நிகழும் என்பதாம்.

2 காமுகர்களின் இரகசியநிலை வினவத் தக்கதன்று, ஆதலின்.

3 இன்பவளர்ச்சிக்கு இவ்வினா, தலைக்கிடாக உள்ள தாகலின்.

4 சேடி யறியாவாறு சாருதத்தனை நோக்கிக் கூறியது.

சூதாடுகளத தலைவனும் அரசன் கட்டளையை மேற்கொண்டு எங்குச் சென்றான் என்பது தெரியவில்லை.

விதூடகன்—அம்மே! யான் சொல்லியதே நின்னாலும் சொல்லப்பட்டது.

சேடி—சூதாடுகளத் தலைவனைத் தேடிக் காணும் வரை இப்பொற்பணியை ஏற்று வைத்துக்கொள்ளுங்கள். (என்று அதனைக் காட்டுகின்றாள்.)

விதூடகன்—(சிந்திக்கின்றான்.)

சேடி—ஐய! மிகவும் உற்றுப் பார்க்கின்றீர். இதனை முன்னர்க் கண்டிருக்கின்றீரோ?

விதூடகன்—அம்மே! சிற்பத் திறமையால் இஃது என் கண்களைக் கவர்கின்றது.

சேடி—ஐய! கண்களால் [1]வஞ்சிக்கப்பட்டீர். நும்பால் அடைக்கலமாக வைக்கப்பட்ட அப்பொற்பணி இதுவே.

விதூடகன்—(மகிழ்ச்சியோடு) ஓ! நண்பரீர்! நம் இல்லத்தினின்றும் கள்வராற் கவரப்பட்ட பொன் அணிகலமே இது.

சாருதத்தன்—நண்ப!

175. [2]அடைக்கலமாம் அப்பொருட்கு யாமாறு செய்யப்
படைத்த கரவியல்நம் பாலே—எடுத்திவள்தான்

---

[1] முன்னர்க் கண்டது நினைவுக்கு வாராமையான், கண்களால் என்றது ஔபசாரிகம்.

[2] களவு செய்யப்பட்ட அடைக்கலப்பொருட்கு எதிராக நாம் படைத்துக்கொண்ட வஞ்சகத் தன்மையையே இவள்

சொன்னவிது வாய்மைத் துணிவோவிளையாட்டோ

இன்ன தெனவறியேன் யான்.

விதூடகன்—ஓ! நண்பரீர்! அப்பொற்பணி இதுவே யென்று என் பிராமணத் தன்மையாற் சூளுறவுற்று உறுதி கூறுகின்றேன்.

சாருதத்தன்—அங்ஙனமாயின் எனக்கு மிகவும் [1]மகிழ்ச்சியே.

விதூடகன்—(மறைவில்) ஓ! "எங்கிருந்து இப் பொற்பணியை அடைந்தீர்கள்?" என்று வினவுகின் றேன்.

சாருதத்தன்—அதனுல் என்ன குற்றம்?

விதூடகன்—(சேடியின் செவியில்) [2]இங்ஙன மன்றே?

சேடி—(விதூடகன் செவியில்) [3]இங்ஙனமன்றே?

சாருதத்தன்—என்ன பேசுகின்றீர்கள். யான் அதற் குப் புறம்பானவனு?

---

எடுத்துக் கூறினள். இஃறு உண்மையோ? விளையாட்டோ? அறியேன் என்பதாம். கரவுஇயல்-வஞ்சகவொழுக்கம்.

[1] அவ்வடைக்கலப் பொருள் திருடப்படவில்லை என்பது பற்றி.

[2] இப்பொற்பணி எங்கிருந்து கிடைத்தது என்பதாம். கள்வராற் கவரப்பட்டதைப் பற்றியதாதலின் செவியில் மறைவாகக் கூறப்பட்டது.

[3] சருவிலகன் களவிற்கொண்டு மதனிகைக்குச் சேர்த்த செய்தியும் இரகசியமாதலின், செவியிற் கூறப்பட்டது.

விதூடகன்—(சாருதத்தன் செவியில்) [1]இங்ஙன மன்றே

சாருதத்தன்—நலமுடையாய்! உண்மையாகவே அதுதானு இப்பொற்பணி?

சேடி—ஐய! ஆம்.

சாருதத்தன்—நலமுடையாய்! எனக்கு இனியது தொன்றை அறிவிப்பின் அதனை யான் ஒருபொழுதும் [2]வறிதாகச் செய்வதில்லை. ஆதலின் மகிழ்ச்சிக்கு அறிகுறியாகத் தரப்படும் இக் கணையாழியைப் பெற்றுக்கொள். (என்று மோதிரமில்லாத கையைப் பார்த்து நாணம் எய்துகின்றான்.)

வசந்தசேனை—(தனக்குள்) இதனாலன்றே விரும்பப்படுகின்றீர்கள்.

சாருதத்தன்—(மறைவில் விதூடகனை நோக்கி) ஆ! துன்பம்!

176. [3]பொருளி லார்க்குயிர் வாழ்க்கையிப் பூமியிற்
கருதில் என்பயன்? காய்தலு வத்தலாம்
இருமை யும்பய னில்லன வாமெதிர்
புரிய எண்ணிற் பொருளிலை யாதலின்.

---

[1] உண்மை இவ்வாறென்பதாம்.

[2] அதற்குப் பரிசில் அளித்தல் என் இயல்பு.

[3] இப்பூமியிற் பொருளிலார்க்கு உயிர்வாழ்க்கை என்ன பயன் உடையது? யாதும் இன்று என்பதாம். வறியவனருளாலும் சினத்தாலும் பிறர்க்கு வரக்கடவ இன்ப துன்பங்கள் இல்லை என்பது கருத்து.

177. வற்றல் மரமும் மணிநீ ரிலாக்குளமும்
துற்று மிறகிழந்து சோர்குருகும்—உற்றவிடப்
பல்லிழந்த வல்லரவும் பாரிற் கருதுங்கால்
நல்குரவா ளற்பொருவும் நன்று.

178. [1]பண்டுணர்ந்து பயின்றோரைக் கூடியதால்
நிலைமறைந்த பண்புளேனுக்கு
எண்டகுநற் பரிசீதற் கியைகாலம்
பயனிலதா யிருந்த திங்ஙன்
அலைடியநல் குரவாளர்க் கரியபுனல்
அறுகிணறும் அடிக்கண் இற்று
விண்டுநிலம் வீழ்மரமும் பாழ்மனையும்
ஒப்பாக விளம்ப லாமால்.

விதூடகன்—ஆ! மிக்க வருத்தமுறுதல் வேண்டா. (வெளிப்படையிற் பரிகாசமாக) பெருமாட்டி! யான் நீராடுங்கால் உடுத்தும் என் ஆடையைத் தரல் வேண்டும்.

வசந்தசேனை—ஐய! சாருதத்தரே! இவ் [2]இரத்தின மாலையால் இவளை நிறுத்துணர எண்ணியது தக்க தன்று.

---

[1] பழைய நண்பரைக் கூடியதால். நிலைமறந்த-மகிழ்ச்சி மிகுதியால் தம் வறிய நிலையை மறந்த. புனலறு கிணறும், வீழ்மரமும், பாழ்மனையும் முறையே நீர்வேட்கை யுடையார்க்கும், பறவைகளுக்கும், ஐயமேற்றுண்போர் முதலியோர்க்கும் பயன் செய்யாமை போல, வறியவர் தம்மை யடைந்தோர்க்கு வேண்டுவன செய்ய இயலார் என்பது கருத்து.

[2] சிறு விலையுள்ள பொற்பணிக்கு எதிராக மிகு விலையுள்ள இரத்தினமாலையைத் தந்தது, யான் பேராசையுடை

சாருதத்தன்— ([1]நாணத்தோடு புன்முறுவல் செய்து) வசந்தசேனே! பார்க்க. பார்க்க.

179. [2]எல்லோரும் என்னை எளிமைப் படுத்து உரைப்பர்
அல்லாதெவன் உண்மை ஆதரிப்பான்பொல்லா இவ்
வையந் தனில் ஆண்மை மாற்றும் வறுமைபிறர்
ஐயம் உறற்கு ஏதுவாம்.

விதூடகன்—அம்மே! தாங்கள் இவ்விடத்திலேயே உறங்கவேண்டுவதுதானே?

சேடி—(சிரித்து) ஐய மைத்திரேயரே! இப்பொழுது உங்கள் [3]அநாகரிகத் தன்மையை மிகுதியாகப் புலப் படுத்துகின்றீர்.

விதூடகன்— ஏ! நண்பரீர் மகிழ்ச்சியோடு வீற்றிருக்கும் மக்களை மிக்க நீர்த் தாரைகளால் ஓட்டுதல் போல இம்மேகங்கள் மீண்டும் பொழிகின்றன.

சாருதத்தன்—நீ நன்று கூறினை.

---

யளா என்பதை ஆராய்தற்கே போலும். இவளை என்பது தன்னைப் படர்க்கை யாகக் கூறியது.

[1] சூதில் தோற்றேன் என்று பொய் கூறி அணிகலப் பொருளுக்கு ஈடு செய்தல் அன்புடைமைக்கு ஒத்ததாகாது என்பது பற்றி நாணமுடையன் ஆயினன்.

[2] இது, 3ஆம் அங்கத்து 100ஆம் செய்யுளாக வந்துள்ளது காண்க.

[3] எங்கள் கருத்துணராமல் இங்ஙனம் வெளிப்படை யாகக் கூறியது அநாகரிகமாகும் என்பதாம்.

180. [1]சேற்றிடைக் கமல நாளஞ்
செறிநுதியென்ன விண்ணில்
தோற்றுமிம் முகிலைக் கீண்டு
தூயநீர்த் தாரை வீழ்தல்
தேற்றுமத் திங்கட் செல்வன்
மறைதலாற் சேணும் நங்கை
ஊற்றுடைத் துன்பக் கண்ணீர்
ஒழுக்குதல் போலும் அன்றே.

181. [2]அலமுறு படையோன் ஆடைபோல் திகழும்
அம்புதம் அருச்சுனன் கணைபோல்
பலமிகு கூர்மை படைத்துநல் லொழுக்கிற்
பயில்பவ ருளமெனத் தெளிந்த
நிலவுவெண் ணிறத்த தாரைகள் விரைவில்
நிலமிசை வீழ்த்தல்மே னிலத்திற்
குலவுமிந் திரன்த னிதிக்கணித் திலத்தின்
குழுவினைச் சொரிதலை யொக்கும்.

காதலீ! பார். பார்.

---

[1] கமல நாளத்தின் நுதி சேற்றிடைப் பிளந்து வெளிப் பட்டாற் போல இம்முகிலைக் கீண்டு நீர்த்தாரைகள் வீழ்தல், சேணுகிய நங்கை, தன் நாயகனுகிய திங்களஞ்செல்வனைக் காணுமையால் வருந்திக் கண்ணீர் ஒழுக்குதல் போலாம்.

[2] அலம் உறு படையோன்-கலப்பைப் படையையுடைய பலராமன். அவன் ஆடை நீலநிறமுடையது. படைத்துத் தெளிந்த தாரைகள், வெண்ணிறத்த தாரைகள் எனக் கூட்டுக. நிதி-கருவூலம்.

182. [1]கலவையாங் தமால பத்திரக் குழம்பிற்
கவினுமிப் புயற்குழுத் திமிர்ந்து
மலர்மணஞ் சீத மலிதர நெருங்கு
மாலைவந் தினிதுமேல் விசிற,
இலகுமிவ் விண்ணை முகில்வர வின்ப
வுவகையி னிராகமுற் றிம்மின்
வலியவந் தன்பன் தனைத்தழீஇ மகிழும்
மங்கையைப் போற்றமு வுறுமால்.

(வசந்தசேனை இன்பச்சுவை தோன்ற அபிநயித்துச் சாருதத்தனைத் தழுவுகின்ருள்.)

சாருதத்தன்— (ஊற்றின்பத்தை அனுபவித்துத் தானும் அவளைத் தழுவிக்கொண்டு)

183. [2]விண்முகில்காள் மிக்கொலிமின்
மேவு நுமதருளாற்
கொண்மதன நோயிற்
குறையெனுடல்—தண்மைமிகும்

---

[1] தமாலபத்திரம்-பச்சிலை மரத்தின் இலை. இன்-ஒப்புப் பொருளது. புயற்குழுவைத் திமிர்ந்து, மாலைக் காலத்து இளங்காற்றுமேல் விசிற, இலகும் விண் என்க. திமிர்தல்—பூசுதல். வந்து-காற்று. முகில் ஆகுபெயர்; கார்காலத்தை யுணர்த்தும். இராகம்-ஆசை; செந்நிறம். விண்ணை இம்மின் மங்கையைப் போல் தழுவும் என்க. அன்பன் வேண்டாமலிருக்குங்கால் வலிய வந்து அவனைத் தழுவும் மங்கை போல் என்றதனுல், விண் வேண்டாமலிருக்கும் நிலையில் அதன்கண் மின் இயைந்து என்பது புலனும்.

[2] கடம்பு-செங்கடம்பு; ஈண்டு அதன் மலரை யுணர்த்தும். என் உடம்பு கடம்ப மலரின் தன்மையை யுடையதாகும் என்க. கடம்பு ஊற்று இன்பம் உறுதல்-கார்காலத்து நீர்

ஊற்றின்பத் தாற்புளக
முற்றவ் விராகத்தால்
ஏற்குங் கடம்பின் இயல்.

விதூடகன்—இழிதகவுடைய மேகபடலமே! பெரு மாட்டியாகிய வசந்தசேனையை மின்னலினுல் அச்சுறுத்துகின்ருய். ஆதலின், இப்பொழுது நீ மிகவும் பொல்லாங்கு உடையையாகின்ருய்.

சாருதத்தன்—நண்ப! நீ இங்ஙனம் பழித்துரைத் தல் தகாது.

184. [1]என்போல்வார்க் கெட்டா
வினிய ளெனைத் தழுவிப்
பொன்போற் கொளத்தாம்
புரிந்தமையான்— மின்னலொடு
வீழுநீர்த் தாரை
விடாஅப் புயற்குழுவும்
வாழ்கநூ ருண்டு மகிழ்ந்து.

---

தோய்தலாற் செழிப்புறுதல். புளகமுறுதல்-அகவிதழ் விரியப்பெறுதல். இராகம் எய்தல்-செந்நிறமடைதல். இதனால் என்னையும் கடம்பையும் பயனுறச் செய்த நின் பேரொலி சிறப்புற்றுத் திகழ்வதாக என்பதாம்.

[1] தாம்-முகில்களும் மின்னலும். மின்னலோடு புயற்குழுவும் எற்கு உதவி புரிந்தமையான் நூருண்டு மகிழ்ந்து வாழ்க என்பதாம். வசந்தசேனையை இங்கு வரச்செய்ததோடு அமையாது திரும்பிப் போகவொட்டாமலும் செய்தது பேருதவியாகும் என்பதாம்.

இன்னும் தோழ!

185. [1]ஆடவர் தம்மனை அடைந்த மங்கையர்
சாடிய மழையினுல் நனைந்த தண்ணுடல்
பீடுறத் தழீஇக்கொளப் பெறுவ ரேலவர்
நாடிய வாழ்க்கையே நலத்தின மிக்கதாம்.

காதலி! வசந்தசேனே!

186. நிறுவியவித் தூண்களின்மேல் [2]நிலைபிறழ்ந்த
[3]வேதியின்க ணெருங்கிச் சார்ந்த
மறுமிகுமேற் பரப்புநிலஞ் சிதைவுற்று
வீழ்நிலையில் வயங்கும் வெண்மை
பெறுசுதைநீர் தீற்றியொளிர் சித்திரமார்
[4]பித்தியிது பிளந்து விண்ணிற்
செறியுமுகில் பொழிநீரால் நனைதரலின்
ஈங்கிருத்தல் செவ்வி தன்றால்.

(உயரப் பார்த்து) ஆ! இந்திரவில்! காணப்படுகின்றது! காதலி! பார்க்க. பார்க்க.

187. மின்னலாம் நாவும் மிளிரிந்திரதனுவாம்
துன்னுமுயர்நீள் கரமுந்தோன்றவே–மன்னுமுகில்

---

[1] மழையால் நனைதலையும் பொருட்படுத்தாமல் வந்ததனுல் அவளது காதலின் சிறப்புப் புலனுகும். இந்நிலையிற் கூடுதலே ஆடவர்க்குக் கிடைத்தற்கரிய பேருகும் என்பதாம்.

[2] நிலைபிறழ்தல் - சிதைதல். [3] வேதி–தூண்களின்மேல் விதானத்துக்கு ஆதாரமாகக் கட்டப்பட்ட செங்கற்கட்டு.

[4] பித்தி-சுவர்.

[5] கொட்டாவி கொள்ளுவோன் நாவை வெளிப்படுத்திக் கைகளை உயரத் தூக்கி அலகை விரிப்பன் என்பது ஈண்டு உணரற்பாலது.

தட்டா வகல்கதுப்புாச் சார விசும்பொளிர்தல்
கொட்டாவி கொள்ளுதல்போ லும்.

ஆதலின் வருக; இல்லத்தினுட் புகுவோமாக.

[எழுந்து சுற்றி வருகின்றனர்.]

188. [1]ஓலேயின் மரத்திற் கல்லின்
உற்றநீர்ப் பரப்பிற் ருக்கி
ஆலுநற் ருரம் மந்தம்
அதிவிரைவோடு சண்டம்
ஏலுற மீட்டப் பட்டிங்
கிசைதரும் இனிய யாழைப்
பேரலவிம் மழையின் ருரை
தாளத்திற் பொருந்தி வீழ்வ.

[எல்லோரும் போய் விடுகின்றனர்.]

"புயன்மறைப்பு" என்னும்

## ஐந்தாம் அங்கம் முற்றிற்று.

---

1 நீர்வீழ்ச்சி, ஓலே மரம் கல் நீர்நிலே இவற்றில் தாக்கு தலால் முறையே சுரங்களின் உச்சம் மந்தம் விரைவு சண்டம் என்னும் நிலேகள் தோன்றுவன. யாழ், இசை வெளிப்படுத் துங்கால் இங்ஙனம் ஆகும். ஆதலின், அதனேப்போலத் தாளத்தோடு பொருந்தி நீர்த்தாரைகள் வீழ்வன என்க. ஆலல்-ஒலித்தல். ஏலுற-பொருந்த.

# [1]ஆறும் அங்கம்

## வண்டிமாற்றம்

[அதன்பின் [2]சேடி வருகின்றாள்.]

சேடி—ஏன் இன்னும் பெருமாட்டி துயில்நீத்தெழுந் திலள்? நிற்க. உட்புகுந்து எழுப்புவேன்.

[என்று நிருத்தத்தால் உட்புகுதலை அவிநயிக்கின்றாள்.]

[அதன்பின் உடலை ஆடையாற்போர்த்துத் துயில்கின்ற வசந்தசேனை வருகின்றாள்.[3]]

சேடி—[உற்றுப் பார்த்து]பெருமாட்டீ! எழுந்திருங் கள். எழுந்திருங்கள். விடியற்காலம் வந்துவிட்டது.

---

[1] வசந்தசேனை வருதற்குப் பூந்தோட்டத்திலிருந்து சாரு தத்தனால் அனுப்பப்பட்ட வண்டியில் விலங்கை முறித்துச் சிறையினின்றும் வெளிப்பட்ட ஆரியகன் என்னும் இடைச் சிறுவன் ஏறிக்கோடலும், வண்டி மாற்றத்தாற் சகாரன் வண்டியில் வசந்தசேனை ஏறிக்கோடலும் இவ்வங்கத்திற் கூறப்படும்.

[2] இன்ப விளையாட்டினால் காலைப்பொழுதில் அயர்ந்து உறங்கும் வசந்தசேனையை எழுப்புதற்குச் சாருதத்தருடைய சேடி வருகின்றாள்.

[3] வருகின்றாள் என்பது ஈண்டு இலக்கணையால் தோன்று கின்றாள் என்னும் பொருளதாகும். இன்னோரன்ன பிற இடங் களிலும் இவ்வாறே சந்தர்ப்பம் நோக்கி வருதல் என்பதற் குப் பொருள் கொள்க.

வசந்தசேனை—[கண் விழித்து] என்ன! [1]இராப் பொழுதே விடியற்காலம் ஆயிற்று?

சேடி—[2]என் போன்றார்க்கு இது விடியற்காலமே. [3]பெருமாட்டிக்கோ இராப் பொழுதேயாம்.

வசந்தசேனை—ஏடி! உங்கள் சூதர் எங்கே போய் விட்டார்?

சேடி—பெருமாட்டீ! மாட்சி மிக்க சாருதத்தர், வருத்தமானகன் என்னும் சேடனுக்குக் கட்டளையிட் டுப் பின் [4]புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட் டத்தை அடைந்தார்.

வசந்தசேனை—என்னவாறு கட்டளையிட்டார்?

சேடி—"இரவிலேயே வண்டியைச் சித்தப்படுத்தி வை. வசந்தசேனை போக வேண்டும்" என்று கட்டளை யிட்டார்?

வசந்தசேனை—ஏடி! [5]யான் எங்கே போகவேண்டும்?

---

[1] இரவின் கால அளவே குறுகிற்றே என்பது கருத்து.

[2] இன்ப நுகர்ச்சி யில்லாதவர்களாகிய என்போன் றார்க்கு என்க.

[3] இன்பச் சுவையின் ஈடுபட்டு ஒழிவு பெறுமையின்.

[4] கரண்டம் என்பது மூங்கில் முதலியவற்றாற் செய்யப் பட்ட பெட்டியை உணர்த்தும். மலர் நிறைந்த பெட்டி போறலின், பூந்தோட்டம் புட்பகரண்டகம் என்று வழங்க லாயிற்று.

[5] தன் இல்லத்திற்குப் போகும்படி சாருதத்தர் ஆணை தந்தனரோ? என்று ஐயுற்றுப் பிரிவச்சமுடையளாய் இங்ங னம் வினவுகின்றாள்.

சேடி—பெருமாட்டீ! சாருதத்தர் இருக்கும் இடத்திற்கு.

வசந்தசேனை—[சேடியைத் தழுவிக்கொண்டு] இரவில் நன்ருகப் பார்க்கப்பட்டிலர். ஆதலின், இப்பொழுது விளக்கமாகக் காண்பேன். ஏடி! இப்பொழுது நாற்கட்டு இல்லத்தினுள்ளே புகுந்துவிட்டேனே!

சேடி—நாற்கட்டு இல்லத்தினுள்ளே மாத்திரமன்று; எல்லோருடைய [1]நெஞ்சத்தினுள்ளும் நுழைந்துவிட்டீர்கள்.

வசந்தசேனை—சாருதத்தருடைய பரிசனங்கள் [2]வருந்துகின்றனரோ?

சேடி—இனி வருந்துவர்.

வசந்தசேனை—எப்பொழுது?

சேடி—பெருமாட்டி [3]வெளிச்செல்லுங்கால்.

வசந்தசேனை—அங்ஙனமாயின் யானே முதலில் வருத்தம் உறுதற்குரியளாவேன். [வேண்டிக்கொண்டு] ஏடி! இவ்விரத்தினமாலையைப் பெற்றுக்கொள். என்

---

[1] ஒழுக்கநலத்தால் இல்லற நிலையினர் எல்லாராலும் பாராட்டப்படுகின்றீர்கள் என்றவாறு.

[2] எல்லோருடைய நெஞ்சத்தினுள்ளும் நுழைதல் வருத்தம் பற்றியோ மகிழ்வு பற்றியோ என்பதை அறிய விரும்புகின்றவளாய் இங்ஙனம் கேட்டனள். மாற்றவள் வரவால் துன்புறும் நிலையினளாகிய சாருதத்தர் மனைவியைச் சார்ந்த பரிசனங்களாதலின் அவர்க்கும் அவ்வருத்தம் உண்டாகியிருக்கலாம் என்பதாம்.

[3] தங்கள் பிரிவே வருத்தம் தருவதாகும் என்றவாறு.

உடன்பிறந்தாளாகிய பெருமாட்டி தூதையின் பக்கல் எய்தி இதனைக் கொடுத்துப் பின் வருமாறு சொல். "யான் மாட்சி மிக்க சாருதத்தருடைய குணங்களுக்குத் தோற்று ஈடுபட்ட பணிப்பெண் ஆவேன். அங்ஙனமே தங்களுக்கும். ஆதலின், இவ்விரத்தினமாலை தங்கள் கழுத்திற்கே அணிகலனாதல் வேண்டும்."

சேடி—அம்மே! சாருதத்தர் பெருமாட்டி தூதையை அவசியம் [1]கோபிப்பார்.

வசந்தசேனை—போ. கோபிக்கமாட்டார்.

சேடி—[பெற்றுக்கொண்டு] கட்டளைப்படி செய்வேன். [என்றுகூறி வெளிச் சென்று மீண்டும் வருகின்றாள் ] அன்னாய்! பெருமாட்டி தூதை பின் வருமாறு கூறுகின்றாள். "இவ்விரத்தினமாலை எம்பெருமானால் நுமக்குப் பரிசிலாகத் தரப்பட்டதாகும்; இதனை யான் பெற்றுக்கொள்ளுதல் தகுதியன்று; எம்பெருமானே எனக்குச் சிறந்த அணிகலனாவர்; என்பதை நீங்கள் அறிந்து கொள்ளல் வேண்டும்."

[அதன்பின் [2]சிறுவனை அழைத்துக்கொண்டு
இரதனிகை வருகின்றாள் ]

இரதனிகை—குழந்தாய்! வருக. சிறுதேர் உருட்டி விளையாடுவோம்.

---

[1] அடைக்கலப் பொருட்கு ஈடாகக் கொடுக்கப்பட்டதைத் திருப்பி வாங்கிக்கொள்ளுதல் தவறாகும் என்பது பற்றிக் கோபிப்பார் என்பதாம்.

[2] சிறுவன்–சாருதத்தன் புதல்வனாகிய உரோகசேனன்.

சிறுவன்—[வருத்தத்தோடு] இரதனிகே! எனக்கு இம்மண் வண்டி எதற்காக? [1]அப் பொன் வண்டியைத் தா?

இரதனிகை—[துன்பத்தோடு பெருமூச்செறிந்து] குழந்தாய்! நமக்குப் பொன்னைப் பற்றிய பேச்சு ஏது? தந்தையார்க்கு மீண்டும் செல்வம் வந்து நிறைந்தபின் பொன்வண்டியால் விளையாடுவாய். [2]இவனைப் பிறி தொன்றால் மகிழ்விப்பேன். பெருமாட்டி [3]வசந்தசேனை யின் பக்கல் எய்துவேன். [அருகிற்சென்று] அன்னாய்! வந்தனம்.

வசந்தசேனை—இரதனிகே! நின்வரவு நல்லதாக. இச் சிறுவன் யாருடைய குழந்தை? அணிகலன்களால் அலங்கரிக்கப்படாத உடலையுடையவனாயினும், மதி மண்டிலம் போல் திகழ்கின்ற முகத்தையுடையனாய் என் இதயத்தை மிகவும் இன்புறுத்துகின்றான்.

இரதனிகை—இவன் மாட்சி மிக்க சாருதத்த ருடைய புதல்வன்; உரோகசேனன் என்னும் பெயருடை யான்.

வசந்தசேனை—[கைகளை நீட்டி] என் அருமை மகனே! வருக தழுவுக [என்று கூறி மடித்தலத்தே

---

[1] சுட்டு அயல்வீட்டுக் குழந்தையாற் கொண்டு வரப்பட் டது என்பதை உணர்த்தும்.

[2] பின்னர்த் தான் செயற்பாலதைக் கூறுகின்றாள்.

[3] வசந்தசேனையின் பக்கல் சென்றால் வேறு நிகழ்ச்சி களால் இது மறக்கப்படும் என்பது கருத்து.

இருக்க வைத்து] இவன் தந்தையின் உருவத்தை ஒத்து விளங்குகின்றான்.

இரதனிகை—உருவத்தை மாத்திரமன்று; சீலத்தையும் அங்ஙனமேயுடையான் என்று எண்ணுகின்றேன். இவனால் மாட்சிமிக்க சாருதத்தர் [1]அகமகிழ்ந்து இன்புறுவார்.

வசந்தசேனை—இவன் எதற்காக அழுகின்றான்?

இரதனிகை—இவன் அடுத்த இல்லத்தில் வாழும் ஒரு செல்வனுடைய குழந்தையின் பொன்வண்டியை உருட்டி விளையாடினான். அச்சிறுவன் அப்பொன் வண்டியைக் கொண்டுபோய்விட்டான். அதன்பின் அப்பொன்வண்டியை விரும்பித் தேடும் இவனுக்கு இம் மண்வண்டிய்ய யான் செய்து கொடுத்தேன். அதன் மேல் இவன் என்னைப்பார்த்து "இரதனிகே! எனக்கு இம்மண்வண்டி எதற்காக? அப்பொன்வண்டியையே தரல் வேண்டும்" என்று சொல்லுகின்றான்.

வசந்தசேனை—ஆ! துன்பம்! இவனும் பிறர் செல்வங்கண்டு வருந்துகின்றானே! ஆ! தெய்வமே! தாமரையிலைக்கண் வீழ்ந்த [2]நீர்த்திவலைகளைப் போன்ற மக்களுடைய செல்வங்களால் நீ விளையாடுகின்றாய். [என்று கண்ணீருதிர்த்து] குழந்தாய்! அழ வேண்டா. பொன்மயமான வண்டியினால் விளையாடுவாய்.

சிறுவன்—இரதனிகே! இவள் யார்?

---

[1] வறியநிலையில் இவனால் ஆறுதலடைவர் என்றவாறு.

[2] நீர்த்திவலை, நிலையின்மையையும் சுருக்கத்தையும் புலப்படுத்தும் உவமையாம்.

வசந்தசேனை—நின் தந்தையின் குணங்களால் ஈடுபடுத்தப்பட்ட பணிப்பெண்.

இரதனிகை—குழந்தாய்! இப்பெருமாட்டி உன் தாயாவாள்.

சிறுவன்—இரதனிகே! நீ பொய் சொல்லுகின்ருய். [1]இவ்வம்மை என் தாயாயின் எப்படி அலங்காரம் உடையவள் ஆயினுள்.

வசந்தசேனை—குழந்தாய்! அழகியமுகம் உடையனுய் மிகவும் வருந்திக் கூறுகின்ருய். [நாட்டியத்தால் அணிகலன்களைக் கழற்றி அழுதுகொண்டு) [2]இப்பொழுது யான் உன் தாயாயினேன். ஆதலின் இவ்வணிகலன்களைப் பெற்றுக்கொள். பொன்மயமான வண்டியைச் செய்துகொள்.

சிறுவன்—பார். நான் வாங்கிக்கொள்ளமாட்டேன். நீ அழுகின்ருய்.

வசந்தசேனை-(கண்ணீரைத் துடைத்துக்கொண்டு குழந்தாய்! யான் அழவில்லை. போ. விளையாடு. (அணி

---

[1] என் தாய்க்கு அணிகலன் இல்லையே என்று கருதிக் குழந்தை கூறியது,

[2] அணிகலன்கள் இல்லாமையால், "தாய் ஆயினேன்" எனவும், தாயின் பொருள் கொள்ளுதற்குத் தகுதியுடையதாதலின் "பெற்றுக்கொள்" எனவும் கூறினுள்.

[3] அழுதுகொண்டு கொடுத்ததலைப் பெற்றுக்கொள்ளலாகாது என்பது கருத்து.

கலன்களால் மண்வண்டியை நிறைவித்து குழந்தாய்! பொன்மயமான வண்டியைச் செய்துகொள்.

(இங்ஙனம் குழந்தையை எடுத்துக்கொண்டு
இரதனிகை போய்விடுகின்றாள்.)

(வண்டியில் ஏறிக்கொண்டு [1]சேடன் வருகின்றான்.)

சேடன்—இரதனிகே! இரதனிகே! நம் பெருமாட்டி வசந்தசேனைக்கு 'வீட்டின் பக்கத்து வாயிலில் வண்டி திறக்கப்பட்டுச் சித்தமாக இருக்கின்றது'' என்று தெரிவி.

(வந்து)

இரதனிகை—பெருமாட்டி! இவ்வருத்தமானகன் "வீட்டின் பக்க வாயிலில் வண்டி சித்தமாக இருக்கின்றது'' என்று தெரிவிக்கின்றான்.

வசந்தசேனை—சேடீ! யான் என்னை அலங்கரித்துக் கொள்ளும் வரையில் சிறிதுநேரம் நிற்கட்டும்.

இரதனிகை—(வெளிப்பட்டு) வருத்தயானக! நம் பெருமாட்டி அலங்கரித்துக்கொள்ளும் வரை சிறிது நேரம் நில்.

சேடன்—ஓ! ஓ! யானும் வண்டி விரிப்பை மறந்து விட்டேன். ஆதலின் அதனை எடுத்துக்கொண்டு வந்து விடுவேன். இவ்வெருதுகள் மூக்குக் கயிறு கோக்கப் பட்டமையால் ஓரிடத்திற் பொறுமையோடு நிற்க மாட்டா. ஆதலின் வண்டியோடு போக்கு வரவு செய் வேன். (என்று சேடன் போய்விடுகின்றான்.)

---

[1] சேடன்-வருத்தமானகன் என்னும் பெயரினன்; சாரு தத்தருடைய பணியாள்.

வசந்தசேனை—ஏடி! என்னுடைய அலங்காரப் பொருள்களைக் கொண்டுவா. யான் அலங்கரித்துக் கொள்ளல் வேண்டும். (என்று அலங்கரித்துக்கொண் டிருக்கின்றுள்.)

[1]தாவர்கன் என்னும் சேடன்—அரசனுடைய மைத் துனராகிய சகாரர் என்னை நோக்கித் "தாவரக! வண் டியை ஓட்டிக்கொண்டு [2]புட்பகரண்டகம் என்னும் பழமையான பூந்தோட்டத்திற்கு விரைவில் வா" என்று ஆணையிட்டுள்ளார். ஆதலின் அங்கே போகின் றேன். [3]எருதுகளே! சுமந்துசெல்லுங்கள் சுமந்து செல்லுங்கள். (சிறிது தூரம் சென்று பார்த்து) ஓ! கிராமத்து வண்டிகளால் வழி தடைப்படுத்தப்பட்டுள் ளதே! இப்பொழுது இவ்விடத்தில் என்ன செய்வேன்! (செருக்கோடு) அடே! விலகிச் செல்லுங்கள். விலகிச் செல்லுங்கள். (கேட்டு) "இது யாரு டைய வண்டி" என்று கேட்கின்றீர்கள்? இஃது அரசன் மைத்துனராகிய சமத்தானகருடைய வண்டியாகும். ஆதலின் விரைந்து விலகிச் செல்லுங்கள். ([4]பார்த்து) சூதிற் பொருள் இழந்து ஓடும் சூதன், தன்னைப் பிடிக்க வரும் சூதாடுகளத் தலைவனைக் கண்டு மறைந்து

---

[1] இவன் சகாரனுடைய ஏவலாளன்.

[2] புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட்டம் நகரத்து மக்கள் இன்பம் நுகர்தற்கு எல்லோர்க்கும் பொது வாக அமைந்தது.

[3] விலங்கினங்களோடு இவ்வாறு உரையாடுதல் இழி சனர்க்கு உரிய இயல்பாம்.

[4] சிறையினின்றும் வெளிப்பட்ட ஆரியகன் என்னும் பெயரினையுடைய இடைச் சிறுவனைப் பார்த்து என்பது கருத்து.

கொண்டு செல்லுதல் போல, யாரோ இம்மனிதன் என்னைக் கண்டு விரைந்து தன்னை மறைத்துக் கொண்டு வேறு வழியிற் போய்விட்டான். ஆதலின் இவன் யார்? [1]இதனால் எனக்கு வருவதென்ன? விரைவாகச் செல்லுவேன். அடே! அடே! அறிவில்லாதவர்களே! விலகிச் செல்லுங்கள். விலகிச் செல்லுங்கள். "சிறிதுநேரம்வரை பொறு. இவ்வண்டிச் சக்கரத்தை உடன்நின்று தள்ளு'' என்று சொல்லுகின்றீர்கள்? அடே! அடே! அரசனுடைய மைத்துனரைச் சார்ந்த வீரனாகிய யானோ வண்டிச் சக்கரத்தைத் தள்ளுபவன்! ஓ! இவ் வெளியவன் [2]தன்னந்தனியனாய் இருக்கின்றான். ஆதலின் இவ்வாறு துணை செய்கின்றேன். இவ்வண்டியை மாட்சி மிக்க சாருதத்தருடைய சிறுமரச் சோலைக்கணுள்ள வீட்டின் பக்க வாயிலில் நிறுத்துகின்றேன். (என்று வண்டியை நிறுத்திவிட்டு) இதோ வந்துவிட்டேன். (என்று போய்விடுகின்றான்.)

சேடி—பெருமாட்டி! வண்டியின் உருளொலி கேட்கப்படுகின்றது. [3]ஆதலின் வண்டி வந்துவிட்டது.

வசந்தசேனை—ஏடி! போ. என்னுள்ளம் விரைகின்றது. ஆதலின் பக்கத்து வாயில் வழியைக் காட்டு.

---

[1] இவ்விசாரணையால்.

[2] தாவரகன் தன் வண்டிக்கு நேர்ந்த தடையைப் பொறுமல் அத்தடை செய்தான் ஒருவனையே பலரென மயங்கி முன்னர்ப் பன்மையாற் கூறினன்.

[3] வருத்தமானகன் வண்டியே வந்துவிட்டதாக நினைந்து கூறுகின்றாள்

சேடி—பெருமாட்டி! வருக. வருக.

வசந்தசேனை—(சிறிது நடந்து) ஏடி! நீ இங்கே நில்.

சேடி—பெருமாட்டியின் கட்டளைப்படியே. (என்று போய்விடுகின்றாள்.)

வசந்தசேனை—(வலக்கண் துடித்தலை அவிநயத்தால் அறிவித்து வண்டியில் ஏறி) வலக்கண் துடிக்கின்றதே. ஈதென்னை! ஆயினும் என்? இத் தீநிமித்தத்தைச் சாருதத்தருடைய [1]காட்சியே போக்குவதாகும்.

(வந்து)

தாவரகன்-வண்டிகளை விலக்கிவிட்டேன். ஆதலிற் போகின்றேன். (என்று நாட்டியத்தால் வண்டியிலேறி இயக்கி) வண்டி பாரமாக உள்ளதே! அன்றி, வண்டியுருள்களைத் தள்ளிவிட்டமையால் இளைப்புற்ற எனக்கு வண்டி பாரமுடையதாகத் தோன்றுகின்றது போலும். நிற்க. போகின்றேன். எருதுகளே! செல்லுங்கள்; செல்லுங்கள்.

(வேடசாலையுள்)

ஏ! ஏ! காவலாளர்களே! நீங்கள் காத்தற்குரிய அவ்வவ்விடங்களில் விழிப்புடையவர்களாக இருத்தல் வேண்டும். இப்பொழுது இந்த இடைச் சிறுவன் சிறைக்கூடத்தைத் தகர்த்து அங்குள்ள சிறைக்கோட்டத்துக் காவலனையும் கொன்றுவிட்டு விலங்கை முறித்துக்

---

[1]சாருதத்தருடைய முன்னிலையில் யாதும் தீங்கு நேராது என்பது கருத்து.

கொண்டு வெளிப்பட்டு ஓடுகின்றான். அவனைப் பிடியுங்கள்; பிடியுங்கள்.

(ஒருகாலிற் பொருந்திய விலங்கினையும் முக்காட்டியுனையுமுடைய ஆரியகன் அச்சமுடையவனாய்த் திரை எடாதிருக்கப் படக்கத்து வழியாக வந்து சுற்றித் திரிகின்றான்.)

சேடன்—(தனக்குள்) இந்நகரத்திற் பெரிய பரபரப்பு ஒன்று உண்டாயிற்று ஆதலின் அதிவிரைவிற் போவேன். (என்று போய்விடுகின்றான்.)

ஆரியகன—

18 [1]சிறையிடுதல் எனககாட்டிக் கொலைபுரிவான்
துணிந்தரசன் செய்யுந் துன்ப
நிறைதருமக் கரையில்பெருங் கடல்கடந்தோர்
கணைக்காலின் நெருங்க யாத்த
கறைநிகளத் தொருமுகமீர்த தெப்பாலும்
அலைந்துதிரி கைமேற் கொண்டேன்
உறையுமொரு தறியினைச் செற்றேடுமத
மிகுகளிற்றை யொக்குன றேனால்.

ஆ! சித்தபுருடன் கட்டளையால் நடுக்கமுற்ற பாலகன எனனும் அரசன என்னை இடைசசேரியினின

[1] கணைக்காலின் யாத்த நிகளத்தின் ஒரு முகம் ஈர்த்து என்றதனால், இரண்டுகால்களிலும் தளைந்து இடையுடன் இயைத்துப் பிணிக்கப்பட்ட சங்கிலியின் ஒருகாற்பிணிப்பைச் சருவிலகன் முறித்துவிட்டமையால் மற்றொருகாற்பிணிப்புடன் இழுத்துக்கொண்டு ஓடுகின்றான் என்பது போதரும். நிகளம்-விலங்கு. திரிகை-திரிதலாகிய ஒழுக்கம். களிற்று உவமையான் மீண்டும் பிடித்தல் அரிது என்பது போதரும்.

றும் கொணர்ந்து கொலைக்களமாம் நிலையிலுள்ளதும் எவராலும் பார்த்தற்கு இயலாததுமாகிய இருட்டறையில் வைத்து [1]விலங்கிட்டுச் சிறைப்படுத்தினன். என் அன்புரிமை நண்பனாகிய சருவிலகன் அருளொடு புரிந்த உதவியால் யான அக்கொடுஞ்சிறையினின்றும் வெளிப்பட்டுள்ளேன். ([2]கண்ணீரொழுக்கி)

190. காடுறையுங் களிற்றினையாத் தெனத்தளையிட்
டெனையரசன் காவல் செய்தான்
பீடுறும்பே றெனக்குவரின் அதனல்யான்
இவற்கிழைத்த பிழைதான் என்னே
மாடுறுமோர் நல்லூழான வருபயனை
விலக்குதற்கு வலியார் யாரே
[3]நாடுமியல் பினனரசன் வலியவனோடு
உறுபகைமை நமக்கென் னம்மா. (2)

ஆதலாற் பேறிலனாகிய யான் யாண்டுச் செல்வேன்! (பார்த்து) இது யாரோ ஒரு நல்லோனது இல்லம். [4]கதவு

---

[1] அவ்விருட்டறையுள் புகுதலே கொலைப்படும் நிலையின் அமைவதாகவும் விலங்கிடல் மிகையென்பதாம்.

[2] ஒரு காரணமுமின்றித் தண்டித்தலான் உண்டாகிய துன்பத்தாற் கண்ணீர் தோன்றியது.

[3] அரசன் நாடும் இயல்பினன் - அரசன் எல்லோரானும் நாடி அடையத் தகுந்தவன். அத்தகைய வலியவனோடு சிறியேனாகிய எனக்குப் பகைமை யாதுளது? ஆதலின் என்னைச் சிறைப்படுத்தியதற்குக் காரணம் யாதும் இன்று என்பது கருத்து.

[4] கதவு அடைக்கப்படாதது, பரோபகார குணத்தில் ஈடுபட்ட ஒரு பெரியோன் தன்மையைப் புலப்படுத்துகின்றதென்று கருதியவாறும்.

சாத்தப்படாத பக்க வாயிலை யுடையதாக இருக்கின்றது.

191. சிதைவுறும் இல்ல மீது
செற்றிவிடை வெளிவிட் டுள்ள
கதவமோ பெரிது தாழக்
கோலினைக் கதுவிற் றில்லை
துதைதரு செல்வ ஞய்ப்பின்
வறுமையாம் துன்ப வாழ்க்கை
விதிதர என்போல் உற்ருன்
இவனெனல் விளங்கு மன்றே.

ஆதலின் இந்த [2]இல்லத்தினுட் புகுந்து இருக்கின்றேன்.

[வேட சாலையினுள்]

[3]எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள்.

ஆரியகன் —(கேட்டு) ஓ!வண்டி இங்கேயே எதிராக வருகின்றது.

---

[1] கதவு பெரிது என்றதனுல் முன்னைச் செல்வமும், சிதைவுற்றிருத்தலாற் பின்னை வறுமையும் புலப்படும். கதுவல்—பற்றுதல்

[2] கதவு திறந்திருத்தலால் உட்புகுதற்கு எளிதென்பதும் பெரிய மனிதன் வீடாதலால் அரசன் காவலர் முதலியோர் விரைந்து உட்புகுதற்கு உரியதாகாது என்பதும் நினைந்து தான் புகுந்து இருக்கலானுன்.

[3]விரிப்பெடுத்துத் திரும்பி வரும் வருத்தமானகன் கூற்று.

192. [1]ஒத்தகுண மிலராயோர் ஒருங்கேறிச்
செல்லாத ஊர்தி யாங்கொல்
தத்தைமொழி யாரிவர்ந்து செல்லவிவண்
தனிநிறுத்த பாண்டில் தானே
மெத்தியசெல் வர்க்குரித்தாய் ஊழ்வலியால்
வெளிப்படுத்த வேண்டிற் றேயோ
இத்தனிமை வண்டியெனக் கினிதாய
தெய்வத்தான் இயைந்த தாமே.

[அதன்பின வண்டியோடு வந்து]

வருத்தமானகன்—வண்டியின் விரிப்பு என்னுற் கொண்டு வரப்பட்டது. இரதனிகே! பெருமாட்டி வசந்தசேனையின்பால் "சித்தஞ்செய்து கொண்டு வந்து நிறுத்தப்பட்ட வண்டியில் ஏறிப் பெருமாட்டி புட்பகரண்டகம்என்னும் பழைய பூந்தோட்டத்துக்குச் செல்லுங்கள்" என்று தெரிவிப்பாயாக.

ஆரியகன்—(கேட்டு) இவ்வண்டி [2]கணிகைக்குஉரிய தாகும். நகர்ப்புறத்தே செல்லத்தக்கதும் ஆம். நல்லது.

---

[1] குணநலம் வேறுபட்ட ஆடவர் சிலர் ஒருங்கேறிச் செல்வராயின் அவர் ஒருவர்க்கொருவர் பேசும் வம்புரைகள் வெளிப்படும். அங்ஙனம் இல்லாமையின் மகளிர் ஏறிச் செல்லுதற்கு நிறுத்தப்பட்டிருக்கலாம். அணிகலன்களின் ஒலி முதலியன இல்லாமையின் மகளிரும் இல்லையென்பது புலப்படும். ஆதலின் இவ்வழகிய வண்டி, நிறைந்த செல்வர்க்குரியதாகிக் கடன் கொடுத்தவர் முதலியோரால் வெளிப்படுத்தப்பட்டிருக்கலாம் போலும். எனக்கு நேர்ந்த இந்நிலையில் ஒருவரும் இல்லாத இத் தனி வண்டி கிடைக்கப்பெற்றது என் நல்லூழ்ப்பயனே யாகும் என்பது கருத்து

[2] இதனுல் அவன் தான் ஏறுதற்குத் தக்கதென்று கருதினுன் என்பது போதரும்.

ஏறுகின்றேன். (என்று மெல்ல அருகிற் செல்லு கின்ருன்.)

சேடன்—[1] (கேட்டு) சிலம்பொலி கேட்கப்படுகின் றதே! ஆதலின் பெருமாட்டி வந்துவிட்டாள்போலும். அம்மா! இவ் வெருதுகள் மூக்குக்கயிறு கோக்கப்பட் டமையால் ஓரிடத்தில் நிலைத்துநிற்பனவல்ல. ஆதலின் பெருமாட்டி பின்புறத்தே ஏறுதல் வேண்டும்.

[ஆரியகன் அங்ஙனமே ஏறுகின்ருன்.]

சேடன்— கால்களைத் தூக்கிவைத்தலால் அசைந்த சிலம்புகளின் ஒலி ஒழிவுற்றது. வண்டியும் பாரம் நிறைந்துளது. ஆதலின் இப்பொழுது பெருமாட்டி வசந்தசேனை வணடியில் ஏறிவிட்டாள் என்று எண்ணு கின்றேன். ஆதலாற் போகின்றேன். எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள். (என்று வண்டியைச் செலுத்திக்கொண்டு போகின்ருன்.)

[வந்து]

[2]வீரகன்—அடே! அடே! [3]சயன், சயமானன், சந்தனகன், மங்கலன், புட்பபத்திரன் முதலியோர் களே!

193. சிறையுறும் இடையர்தஞ் சிறுவன் ஓர்கணத்து
இறைவன துளத்தையும் யாத்த வான்தொடர்
முறையுறு தளையையும்முறித்துப் போயினுன்
உறைதரு நீவிரிங் குறங்கு கின்றிரால்.

---

[1] கேட்டது ஆரியகனது விலங்குச் சங்கிலியின் ஒலியை.

[2] இவன் அரசனுடைய படைத்தலைவன்.

[3] சயன் முதலியோர் படைவீரர்கள்.

அடே! [1]நீ கிழக்குக்கோட்டை வாயிலிலும், நீ மேற்குக் கோட்டைவாயிலிலும், நீ தெற்குக்கோட்டை வாயிலிலும், நீ வடக்குக்கோட்டை வாயிலிலும் நிற்க வேண்டும். யான் இம் மதிற்சுவரின் ஒரு பாகத்தில் சந்தனகனோடு ஏறிச்சென்று தேடிப் பார்க்கின்றேன். சந்தனக! வா, இங்கே வா.

[பரபரப்புடன் வந்து]

சந்தனகன்—அடே! அடே! [2]வீரகன், விசல்லியன், விமாங்கதன், தண்டகாலன், தண்டசூரன் முதலியோர்களே!

194. வம்மின்! கடுக முயன்மின்! மனத்தின்கண்
தம்மி னுறுதியினைத் தாழாது – செய்ம்மின்கள்
[3]உற்ற திருவரசன் ஓங்கு குலமொழிந்து
மற்றோர் குலம்புகுதா வாறு.

195. இங்கர் மன்றம் பூங்கா
இடையர்தஞ் சேரி தோறும்
பன்னுமா வணங்கள்தோறும்
பலர்செலும் வழிகள் தோறும்
முன்னுபல் லிடங்கள்தோறு
முயன்று[4]வல்வினைஞர் தம்மைத்
துன்னினின் றேவித் தேடுந்
தொழிலினை விரைந்து கொண்மின்!

---

[1] இங்ஙனம் தனித்தனியே படைவீரர்களை அழைத்துக் கட்டளையிடுகின்றான்,

[2] இவர்களும் படைவீரர்களே யாவர்.

[3] உற்றதிரு-அரசனுக்குப் பொருந்திய அரசியல்திரு.

[4] வல்வினைஞரை யேவித் தேடுந்தொழிலை மேற்கொண்மின் என்பதாம்.

196. ஏ! ஏ! வீரக! என்னென்ன வோவெளிக்
காட்டுகின்றனே கலக்கமின் ருகக்
கூறுதி யீண்டுக் கூசாது புகுந்து
தளைவிடுத் திடைப்பயல்தனைக்கொடுபோயவன்
யாரவன் தெரிதியோ நேர்[1]மதிக் கெட்டிற்
கதிரவன் நான்கின் மதியும் நிற்ப
ஆறில் வெள்ளியும் ஐந்திற் குசனும்
ஒன்றில் ஆறில் ஒன்றிய வியாழனும்
துனிசெயும் ஒன்பதிற் சனியுந் தங்கப்
பெற்றவ னுவன் உற்றசந் தனகன்
உயிருடன் இருக்கச் செயிர்மிகு மிடைக்குலச்
சிறுவனைக் கொடுசெலுந் திறலினன் எவனே?

வீரகன்--அடே! சந்தனக!

197. [2]கதிரவ னுருவரை காணுங் காலையில்
விதிர்தரும் இடைமகன் விலங்கை வீட்டியே
குதுகலித் தியாவனோ கொண்டு சென்றனன்.
உதுநின துள்ளம்நன் குணரும் உண்மையே.

---

[1] மதிக்கு—சந்திரனுக்கு. ஈண்டு இது சந்திரன் நின்ற இராசியை உணர்த்தும். அதற்கு எட்டில் சூரியனும், நான்கில் சந்திரனும், ஆறில் சுக்கிரனும், ஐந்தில் செவ்வாயும், ஒன்றிலும் ஆறிலும் வியாழனும், ஒன்பதில் சனியும் தற்காலம் தங்கப் பெற்றவனுவன் என்பதாம். போயவன் தங்கப் பெற்றவனுவன் என முடிக்க. இவ்விடங்களில் இக்கோள்கள் வருங்கால் தீய பலன்கள் உண்டாகும் என்று சோதிட நூல்கள் கூறும்

[2] கதிரவன் உரு அரை காணுங்காலை-சூரியன் உருவம் பாதி வெளிப்படுங்காலம்; அதிகாலையில். யாவனோ ஒருவன் கொண்டு சென்றனன் என்றதனுல் என்பால் ஐயுறவேண்டா என்பது புலப்படுத்தியவாறு.

சேடன்—எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள்.

சந்தனகன்—(பார்த்து) அடே! அடே! பார், பார்.

198. [1]மன்னவர் நெறியிடை மறைவு மேற்கொடு
துன்னுமிவ் வண்டியைத் தொடர்ந்து மற்றிது
என்னுழிச் செல்வது யாரைச் சார்ந்ததென்று
இன்னன வினவிநன் கினிது தேர்கவே.

வீரகன்—(பார்த்து) அடே! வண்டிக்கார! இவ் வண்டியை ஓட்டாதே. இவ்வண்டி யாருடையது? இதன்கண் ஏறி யிருப்பவர் யாவர்? எங்கே போகிறது?

சேடன்—இவ்வண்டி பெருமான் சாருதத்தருடையது. இதன்கட் பெருமாட்டி வசந்தசேனை ஏறியிருக்கின்றாள். புட்பகரண்டகம் என்னும் முதிர்பூஞ் சோலைக்குச் சாருதத்தர் விளையாடுதற் பொருட்டுக் கொண்டு போகின்றேன்.

வீரகன்—[சந்தனகன்பக்கல் அணுகி] இவ்வண்டிக்காரன் "பெருமான் சாருதத்தருடைய வண்டி; வசந்தசேனை ஏறியிருக்கின்றாள்; புட்பகரண்டகமென்னும் முதிர்பூஞ்சோலைக்குக் கொண்டுபோகின்றேன்" என்று கூறுகின்றான்.

சந்தனகன்—அங்ஙனமாயின், போகட்டும்.

வீரகன்—பார்க்கப்படாமலேயா?

சந்தனகன்—ஆம்.

[1] மன்னவர் நெறி-இராசவீதி.

வீரகன்—[1]எவர்பாலுள்ள நம்பிக்கையால்?

சந்தனகன்—பெருமான் [2]சாருதத்தர்பாலுள்ள நம்பிக்கையால்.

வீரகன்—பெருமான் சாருதத்தர் என்பவர் யாவர்? வசந்தசேனை என்பாள் யாவள்? [3]எதற்காகப் பார்க்கப் படாமலே போகவேண்டும்?

சந்தனகன்—அடே! பெருமான் சாருதத்தரை அறியாயோ? வசந்தசேனையையும் அறியாயோ? நீ பெருமான் சாருதத்தரையும், வசந்தசேனையையும் அறியாயாயின் ஆகாயத்தில் [4]நிலவொளியோடுங் கூடிய திங்களஞ்செல்வனையும் அறியாதவனுன் ஆவாய்.

199. நற்குணத்தேன் மிக்க நளினமலர் சீலவொளி
மிக்க மதியிடுக்கண் மேவினுர்—ஒற்கமெலாம்
வீட்டுமிடம் வேலையுட்சீர் மிக்கமணி யாமவரை
நாட்டிலறி யாரெவரோ நன்று.

---

[1] எல்லோரும் தம்மைக் காத்துக்கொள்ள ஏதோ வொன்றைக் கூறுவர். இந்நிகழ்ச்சியில் நம்புவது எப்படி? என்பது கருத்து.

[2] சாருதத்தர் நீதி தவருதவர். அவர் வண்டியாதலின் அவர் அதனைத் தவருன செயற்கு உபயோகப்படுத்தார் என்பது கருத்து.

[3] இத்தகைய அரசியற் காரியத்தில் ஆராய்ச்சி வேண்டா என்பது எக்காரணம் பற்றி என்பதாம்.

[4] நிலவு வசந்தசேனையையும், சந்திரன் சாருதத்தரையும் குறிக்கும்.

200. தருமநிதி யாஞ்சாரு தத்தரெனும் வள்ளல்
திருவசந்த சேனையெனுஞ் செல்வி—இருவருமே
மன்னு திலகமென மாசிலொளி யால்திகழ்வர்
இந்நகரிற் போற்றவுரி யார்.

வீரகன்—அடே! சந்தனக!

201. சார்பு மிகுஞ்சாரு தத்தரையும் யானறிவேன்
சீர்கொள்குணவசந்தசேனையெனும்—நாரியையும்
நன்றறிவேன் நம்[1] அரசன் நல்கும்செயற்பணியில்
என்தந்தை யேனும் [2]அறி யேன்.

ஆரியகன்—[தனக்குள்] இவ் வீரகன் எனக்கு [3]முன்னைப் பகைவன் ஆவான். இச்சந்தனகன் எனக்கு முன்னை நண்பன் ஆவான்.

202. [4]மன்றல் வினைத்தீக்கும் மாணிலீ மத்தெரிக்கும்
துன்று குணமொவ்வாத் தோற்றம்போல்—நின்ற இவர்க்கு
எண்புகும் ஓர்செயலில் ஈடுறினும் நெஞ்சத்துப்
பண்புரிமை யொன்று படா.

---

[1] அரசன் நல்கும் செயற்பணி-அரசனிட்ட அரசியற் காரியமாகிய கட்டளை.

[2] அறியேன் என்பது ஈண்டு நம்பமாட்டேன் என்னும் பொருட்டு.

[3] முன்னை என்பது பழம்பிறப்பை யுணர்த்தும்.

[4] மன்றல் வினைத் தீ-திருமணச் செயற்குஉரிய தீ. மாண் இல் ஈமத்து எரி-பெருமையில்லாத சுடலைத் தீ. குணம் ஒவ்வாமை-சுபமும் அசுபமும் ஆதல்.

சந்தனகன்—நீ [1]அரசியல் நலத்திற் கருத்துடைய வன்; படைத்தலைவன்; அரசர்க்கு நம்பிக்கை மிக்கவன். இவ்வெருதுகளை ஓட்டாமல் நிறுத்தி வைக்கின்றேன். பார்.

வீரகன்—நீயும் அரசர்க்கு நம்பிக்கை மிக்க படைத் தலைவன் ஆவாய். ஆதலின் நீயே பார்க்கக் கடவை.

சந்தனகன்—என்னாற் பார்க்கப்பட்டது உன்னாற் பார்க்கப்பட்டதாகுமா?

வீரகன்—எது நின்னாற் பார்க்கப்பட்டதோ அது வேந்தன் பாலகனாற் பார்க்கப்பட்டதாகும்.

சந்தனகன்—அடே! [2]நுகத்தடியைத் தூக்கு.

[சேடன் அங்ஙனமே செய்கின்றான்.]

ஆரியகன்—[தனக்குள்] காவலர் என்னைக் காண்பார்கொல்? பேறிலனாகிய யானோ ஆயுதமில்லாதவனாக இருக்கின்றேன். அதனால் என்ன?

203. வீமன் அருஞ்செயலை
மேற்கொள்வேன் தோட்டுணையே
தாமப் படைக்கலங்கள்
தாமாகும்—[3]மேன்மை

---

[1] இம் மூன்று காரணங்களாலும் நீயே பார்த்தற்கு உரியவன் என்பதாம்.

[2] நுகத்தடியைத் தூக்கினால் வண்டியின் பின்புறம் தாழும்; ஏறுதற்கு எளிதாம் என்பதாம்.

[3] பகைவரோடு மோதுண்டு சாதல் மேன்மை, சிறை புக்கு உயிர் நீங்கல் தீது என்பதாம். பகையொடு பொருதலால் இழிவும் இறப்பும் ஒருதலையாக வரும் என்பதில்லை.

முறையிற் பகைவரொடு
மோதுண்டு சாதல்
சிறைபுக் குயிர்நீங்கல் தீது.

ஆயினும், ஆண்மை நிலையை வெளிப்படுத்தற்கு இஃது அமயமன்று.

[சந்தனகன் வண்டியிலேறிப் பார்த்தலை அவிநயிக்கின்ருன்.]

ஆரியகன்—அடைக்கலம் புகுகின்றேன்.

சந்தனகன்—அடைக்கலம் புகுந்தவர்க்கு அச்சம் இன்ருக.

ஆரியகன்—

204. வெற்றித் திருவகலும் விட்டொழிவர் நட்டோரும்
சுற்றக் குழூவுந் தொடர்நீங்கும்—மற்ருேரும்
மேவார் பரிகசிப்பர் வேண்டிப் புகலடைந்தாற்
காவா தொழிந்தானைக் கண்டு.

சந்தனகன்—இடைச் சிறுவனுகிய இவ் ஆரியகன் பருந்தினுல் துரத்தப்பட்டு வேடன் கையில் வீழ்ந்த பறவைபோல் எம் கைவயப்பட்டான். [நினைவுகூர்ந்து] இவன் குற்றமில்லாதவன்; அடைக்கலமாக வந்தவன்; பெருமான் சாருதத்தருடைய வண்டியில் ஏறியிருக்கின்ருன்; என் உயிரைக் காப்பாற்றிய பெருமான் சருவிலகருக்கு நண்பன். அரசனது ஆணையோ மற்ரெருபுறம் உள்ளது. ஆதலின் இந்நிகழ்ச்சியில் இப்பொழுது

---

ஓரோவமயம் வெற்றியும் பெருமையும் எய்தவுங்கூடும். சிறைபுகின் இழிவும் இறப்பும் எய்தல் ஒருதலையாகும் என்பது கருத்து.

மேற்கொள்ளத்தக்கது யாது? யாதாயினும் என்? வருவது வருக. முதலிலேயே அபயம் அளித்து விட்டேன்.

205. [1]அஞ்சி யடைந்தார்க் கபயப் பொருளளித்தே
எஞ்சு பிறர்க்குதவி யின்புறுநன்—னெஞ்சற்கு
இறப்பு வரினும் இனிதுறுக பார்மேல்
அறப்புகழே யாகும் அது.

[[2]அச்சத்தோடு இறங்கி] காணப்பட்டான் ஆரியகன் [என்று [3]பாதி கூறிய அளவில்] இல்லை; ஆரியை வசந்தசேனை காணப்பட்டாள். அவள், "பெருமான் சாருதத்தரை அடைதற்குச் செல்லுகின்ற என்னை இராச வீதியில் வைத்து இங்ஙனம் அவமானப்படுத்துவது உங்களுக்குத் தக்கதா? இது பொருத்தமா?" என்று கூறுகின்ருள்.

வீரகன்—சந்தனக! நின் சொல்லில் எனக்கு ஐயப்பாடு உண்டாகின்றது.

சந்தனகன்—உனக்கு ஐயப்பாடு என்ன?

---

[1] அபயமளித்துப் பிறர்க்கு உதவி புரிநது இன்புறும் நெஞ்சனாகிய எனக்கு என்க. எஞ்சுதல்—குறைதல்.

[2] ஆரியகனை விடுத்தலால் உண்டாம் அச்சம்.

[3] ஆரியகனைக் கண்ட நிலையில் மனங்கலங்கி ஆரியகன் என்று என்று பாதி கூறிய அளவில் நிறுத்திக்கொண்டு, பின் ஆரியையாகிய வசந்தசேனை என்ருன் என்க.

வீரகன்—

206. ஆரியனென் ளுற்காணப்பட்டான் எனச்
சொலிப்பின்
சீரிய நல்வசந்த சேனையெனும்—ஆரியையென்று
ஓதிளுய் அச்சத்தின் ஓங்கு குரல் தடைப்பட்டு
ஓதிளுய் திண்ணியனீ யும்.

இக்காரணங்களால் எனக்கு ஐயமுண்டாயிற்று.

சந்தனகன்—அடே! உனக்கு என்ன ஐயப்பாடு? தென் தேயத்திற் பிறந்த யாங்கள் விளக்கமில்லாத பேச்சுக்களையுடையேம். கசம், கத்தி, கடம், கடட்டோவிலம், கருநாடகம், கன்னம், பிராவரணம், திரவிடம், சோழம், சீனம், பருப்பரம், கேரம், கானமுகம், மதுகாதம் முதலிய தேயத்து [1]மிலேச்ச சாதிகளுடைய பலவகைப்பட்ட தேயமொழிகளையும் அறிந்துளேம். ஆதலின் "காணப்பட்டான்" என்ருதல் "காணப்பட்டாள்" என்ருதல், "ஆரியன்" என்ருதல் "ஆரியை" என்ருதல், விரும்பிய வண்ணம் பேசும் இயல்புடையேம்.

வீரகன்—ஓ! யானும் பார்க்கிறேன். இது மன்னவன் ஆணையாகும். [2]யான் அரசனது நம்பிக்கைக்கு மிகவும் உரிமை யுடையவன்.

சந்தனகன்—அங்ஙனமாயின் யான் நம்பிக்கையில்லாதவன் ஆயினேனே?

---

[1] மிலேச்சர்கள் விளக்கம் இல்லாமல் பேசும் இயல்பினர் என்பதாம்.

[2] ஒன்றை யான் நேரிற் பாராமற் செய்யவோ தவிர்க்கவோ மனம் ஒருப்படேன் என்பது கருத்து.

வீரகன்—ஓ! அ.. தலைவன் கட்டளை.

சந்தனகன்—[தன்னுள்] ஆரியகன் என்னும் இடைச் சிறுவன், பெருமான் சாருதத்தரது வண்டியில் ஏறிச் செல்லுகின்றானென்று அரசற்கு வீரகன் தெரிவிப்பானாயின், பெருமான் சாருதத்தரை அரசன் தண்டிப்பான். ஆதலின் இந்நிகழ்ச்சியில் மேற்கொள்ளத் தக்க உபாயம் யாது? [நினைவு கூர்ந்து] பயன் இல்லாத ஒரு கலகத்தை விளைவிப்பேன். [வெளிப்படையில்] அடே! வீரக! சந்தனகனாகிய என்னாற் பார்க்கப் பட்டதொன்றை மீண்டும் பார்ப்பதற்கு நீ யாவன்?

வீரகன்—அடே! நீதான் யாவன்?

சந்தனகன்—அரசனாற் சிறப்பளித்துப் பாராட்டப் படும் நீ உன் சாதியை மறந்து விட்டாய் போலும்!

வீரகன்—[சினத்தோடு] அடே! [2]என்னுடைய சாதி யாது?

சந்தனகன்—யார் சொல்வது?

வீரகன்—நீ சொல்.

சந்தனகன்—[3]நான் சொல்லமாட்டேன்.

---

[1] எல்லோரும் ஒன்றை நேரிற் கண்டுசெய்தல் வேண்டும்: பிறர் கூறுவதில் நம்பிக்கை வைத்தலாகாது என்பது அரசன் கட்டளை என்றவாறு.

[2] என்னுடைய சாதியில் யாது குறை என்பதாம்.

[3] சொல்ல என்னால் இயலும். ஆயினும் சொல்ல விரும்பவில்லை என்பது கருத்து.

207. நின்னுடைச் சாதியின் நிலைமை யோர்ந்துளேன்
என்னினும் ஒழுக்கத்தின் ஏற்றத் தாற்சொலேன்
மன்னுக என்னுடை மனத்தி லாங்கஃது
உன்னுநல் [1]விளங்கனி உடைப்பி னென்பயன்?

வீரகன்—ஓ! சொல். சொல்.

[சந்தனகன் [2]சமிஜ்ஞை செய்கின்றான்.]

வீரகன்!—அடே! ஈதென்ன?

சந்தனகன்—

208. [3]தீட்டுதற் குரியதாய்ச் சிதைந்த ஓர்கலும்
காட்டிய கத்தரிக் கோலுங் கைக்கொடு
மாட்டுறு முகமயிர் வனப்பு மக்களுக்கு
ஊட்டுநீ படைகளின் றலைமை யுற்றனை.

வீரகன்—அடே! சந்தனக! நீயும் அரசனாற் சிறப்பிக்கப்பட்டவன். நின் சாதியை மறந்துவிட்டாய் போலும்.

சந்தனகன்—அடே! சந்திரனைப்போல் தூய்மை மிக்க சந்தனகனாகிய என்னுடைய சாதி என்ன?

---

[1] விளங்கனியை உடைப்பதற்கு முன் அஃது உருட்சி முதலிய வடிவழகும் நறுமணமும் உடையதாகக் காணப்படும், உடைக்கப்படின் உலர்ச்சி உள்ளீடின்மை என்னும் இவற்றுள் ஒன்றுடையதாகும் என்பது ஈண்டு உவமேயத்துக்கு இயைபுடைத்து.

[2] கையினால் மயிர் களைதலை அவிநயித்துக்காட்டுகின்றான்.

[3] கல், மயிர் களையுங் கத்தரிக்கோல் இவைகளைக் கொண்டு மக்களுக்கு முகமயிர் வனப்புச் செய்பவன் என்னும் இதனால் அம்பட்டன் என்பதைப் புலப்படுத்தினான்.

வீரகன்—யார் சொல்வது?

சந்தனகன்—சொல். சொல்.

[வீரகன் அவிநயத்தால் [1]சமிஜ்ஞை செய்கின்றான்]

சந்தனகன்—அடே! ஈதென்ன?

வீரகன்—அடே! கேள்.

209. [2]தாய்தந்தை பேரி படகங் கரடகமே
ஆய துடன்பிறப்பிங் காதலினால்—தூய்மைத்
திடமுடைய துன்சாதி தீவாயோய் நீயும்
படை முதல்வன் ஆயினையே பார்.

சந்தனகன்—[சினத்தோடு] சந்தனகனாகிய யான் சக்கிலியனா? அங்ஙனமாயின் வண்டியைப் பார்.

வீரகன்—அடே! வண்டியோட்டுகிறவனே! வண்டியைத் திருப்பு. யான் பார்க்க வேண்டும்.

[சேடன் அவ்வாறே செய்கின்றான். வீரகன் வண்டியில் ஏற முயல்கின்றான். சந்தனகன் விரைந்து தலைமயிரைப் பற்றி இழுத்து நிலத்தில் வீழ்த்திக் காலினால் உதைக்கின்றான்.]

வீரகன்—[சினமுற்றெழுந்து] அடே! நம்பிக்கையுடையனாய் அரசனது கட்டளையை மேற்கொண்டு ஒழுகும் என்னை நீ விரைந்து தலைமயிரைப் பற்றி இழுத்து வீழ்த்திக் காலால் உதைத்தனை. ஆதலிற்

---

[1] தோற்பறையடித்தலைக் காட்டுகின்றான்.

[2] பேரி, படகம், கரடகம் இவை வாச்சியத் தோற்கருவிகளாகும். உனக்குத் தாய் பேரி, தந்தை படகம், உடன்பிறந்தார் கரடகங்கள் என்னும் இதனால் சக்கிலியன் என்பதைப் புலப்படுத்தினான்.

கேள். அடே! நீதிமன்றத்தின் நடுவில் வைத்து நின் வலிய உடலை வெட்டி வீழ்த்துவேன். அங்ஙனம் செய்யாதொழியின் யான் வீரகன் அல்லன்.

சந்தனகன்—அடே! அரண்மனை அல்லது நீதிமன்றத்துக்கு வேண்டுமானாலும் போ. நாயைப் போன்ற உன்னால் என்ன செய்ய முடியும்?

வீரகன்—அப்படியா? [என்று போகின்றான்.]

சந்தனகன்—[நாற்புறமும் பார்த்து] போ. அடே! வண்டியோட்டுகின்றவனே! போ. யாரேனும் உன்னைக் கேட்பாராயின் "இவ்வண்டி சந்தனகனாலும் வீரகனாலும் பார்க்கப்பட்டுப் போகின்றது" என்று சொல். [1]பெருமாட்டீ! வசந்தசேனே! இவ் [2]அடையாளப் பொருளை உனக்குத் தருகின்றேன். [என்று வாட் படையைக் கொடுக்கின்றான்.]

ஆரியகன்—[வாட்படையைப் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சியோடு தனக்குள்]

210. வாட்படையும் பெற்றேன்
 வலத்தோள் துடிக்கின்றது
ஆட்படுத்துக் காத்த
 தருந்தெய்வஞ்—சேட்படுத்தேன்

---

[1] வண்டியினுள்இருப்பவன் ஆரியகன் என்பது தெரிந்தும் "பெருமாட்டீ! வசந்தசேனே!" என்றது வண்டி யோட்டுபவனை ஏமாற்றுதற்காம்.

[2] வண்டி சோதிக்கப்பட்டது என்பதற்குரிய அடையாளமாகும்.

துன்பமெலாம் ஆவா
தொடக்க முதல்[1] அனைத்தும்
இன்பநலம் ஆயினவால் எற்கு.

சந்தனகன்—[2]பெருமாட்டீ!

211. ஈண்டெனை யறிவித் துள்ளேன்
இயைந்தசந் தனகன் என்று
நீண்டவன் புடையை யாகி
நினைத்தியால் என்னை யென்றும்
பூண்டதோர் பொருளினுசை
யாலிது புகன்றேன் அல்லேன்
தூண்டிய இனிய நட்பின்
தொடர்பினுற் சொல்லி னேனல்.

ஆரியகன்—

2. [3]சந்திரன்போல் இன்பந்
தருங்குணமாஞ் செல்வநிறை
சந்தனனைத் தெய்வந்
தரநட்டேன்—இந்தநாள்
அச்சமறச் சித்தன்
அருண்மொழிதான் பொய்த்திலதேல்
இச்சந்தனனை நினைப்பேன்.

---

[1] அனைத்தும்-வண்டியில் ஏறப்பெற்றது முதலிய எல்லாம்.

[2] பெருமாட்டீ! என வசந்தசேனையை நோக்கிக் கூறுவதாக வெளிப்படுத்திக்கொண்டு இனி வரும் அரசியல் திருவுக்கு உரிய ஆரியகனை நோக்கித் தெரிவிக்கின்றுன்.

[3] வண்டியோட்டுபவன் செவியிற் படாவாறு பின்புறத்தே நிற்கும் சந்தனகனை நோக்கிக் கூறியது.

சந்தனகன்—

213. பன்னு சிவன் திருமால் பங்கயத்தோன் பானுமதி
என்னுமிவர் நிற்கபயம் ஈந்தருள்க—முன்னேநாள்
சும்பநிசும்பர்த்தொலேத்தருளுந் [1]தேவியைப்போல்
வெம்புபகை வென்று வளர்க.

[சேடன் வண்டியோடு போய்விடுகின்ருன்.]

சந்தனகன்—[வேடசாலேயை எதிர் நோக்கி] ஓ! யான் வீட்டிலிருந்து வெளிப்பட்டது தொடங்கி என்னேப் பின் தொடர்ந்து வந்த என் அன்புரிமை நண்பஞகிய சருவிலகன் எங்கேயோ போய்விட்டான். நிற்க. படைத்தலேவருள் தலேவனும் அரசனது நம்பிக்கைக்கு உரியவனும் ஆகிய வீரகன் எனக்குப் பகைவனுயிஞன். ஆதலின், யானும் புதல்வர் உடன்பிறந்தார் முதலியவர்களோடு இவ் ஆரியகஃனப் பின்தொடர்ந்து செல்கின்றேன். [என்று போகின்ருன்.]

"வண்டிமாற்றம்" என்னும்

## ஆரும் அங்கம் முற்றிற்று

[1] தேவி-கௌரி, தேவியைப்போல் என்று கூறியது வசந்தசேனே என்று சேடன் நம்புதற்காம்.

# [1]ஏழாம் அங்கம்

## ஆரியகனைக் கோடல்

(சாருதத்தனும் விதூடகனும் வருகின்றனர்.)

விதூடகன்—ஓ! புட்பகரண்டகம் என்னும் முதிர் பூஞ்சோலையின் எழில் நலங்களைப் பாருங்கள். பாருங்கள்.

சாருதத்தன்—நண்ப! இப்பூஞ்சோலையின் இயல்பு இவ்வாறுள்ளது:

214. [2]வணிகர்தமைப்போல்விளங்கு மன்மரங்களப்பூத்
தணிவில் விலைப்பொருள்போற் சாரும்—துணியும்
இறைப்பொருள்கோடற் கெழும்வினைஞர் போலச்
சிறைச்சுரும்பர் சென்றுலவு மால்.

விதூடகன்—ஐய! தூய்மை செய்யப்படாமலே இயற்கையில் அழகு வாய்ந்த இக்கல்லில் தாங்கள் இருத்தல் வேண்டும்.

---

[1] இவ்வங்கத்தில் ஆரியகன் சிறைவிடுதி பெற்றுச் சாருதத்தனைச் சார்தல் கூறப்படும்.

[2] இறைப்பொருள்—வாணிக நிமித்தம் கடைத்தெருவிற் பரப்பப்படும் பொருட்கு வாங்கப்படும் அரசிறை. விலைப் பொருளாம் நிலையிலுள்ள மலர்களில் தேன்துளிகளை மாத்திரம் வண்டுகள் முதலிற் கோடலின் அஃது இறைப்பொருளாகக் கூறப்பட்டது.

சாருதத்தன்—(இருந்து) நண்ப! வருத்தமானகன் காலந் தாழ்க்கின்றனனே!

விதூடகன்—"வசந்தசேனையை அழைத்துக் கொண்டு மிக விரைவில் வரவேண்டும்" என்று வருத்தமானகனிடம் நான் சொல்லியிருக்கின்றேன்.

சாருதத்தன் அப்படியானல் ஏன் காலந் தாழ்க்கின்றனன்?

215. [1]மற்றொரு பாண்டில் உற்றவன் முன்னர்
மெல்ல மெல்லச் செல்லுகின் றதுகொல்!
ஆங்கதன் இடைவெளி காண்கின் றனன்கொல்!
அச்சிடை முறிய வைச்சுமற் றொன்று
சேர்க்கின் றனன்கொல்! மூக்குக் கயிறு
சிதைந்தறுந் ததுகொல்! செம்மைசெய் வினைஞர்
வழியிடை யிட்ட கழிமரத் திரள்கள்
செறிதரத் தடையுறீஇப் பிறிதொரு வழியைத்
தேடுகின் றனன்கொல்! ஓடுத லின்றி

---

[1] வருத்தமானகன் காலந் தாழ்த்தற்குக் காரணம் இவ்வாறிருக்குமோ வென்று இச்செய்யுளிற் கூறப்பட்டபடி ஐயுறுகின்றான். இடைவெளி காணல்-முன்னே செல்லும் வண்டியை விலக்கிச் சேறற்கு உரிய இடைவெளியை ஆராய்தல். செம்மைசெய் வினைஞர்-அரசன் ஆணைமேற்கொண்டு வழியைச் செப்பனிடும் பணியாளர். கழிமரம்-புதிதாகச் செப்பனிடப்படும் வழிகளில் வண்டிகள் போதலைத் தடுத்தற்குக் குறுக்காகச் சேர்க்கப்படும் மரம். எருதுகளை மெல்லச் செலுத்தித் தன் விருப்பின்படி சார்தலாவது நம் நிலைமைத் தாழ்வால் நம்மைப் பொருட்படுத்தாமல் எருதுகளை மெல்ல நடத்திக்கொண்டு வருதல்.

எருதுகள் மெல்ல ஏகச் செலுத்தித்
தன்விருப் பின்படி சார்கின் றனன்கொல்!

(மறைந்திருக்கும் ஆரியகனையுடைய வண்டியை நடத்திக்கொண்டு வந்து)

சேடன்—எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள்

ஆரியகன்—(தனக்குள்)

216. மன்னவன்தன் ஏவலராங் காவலரைக்
கண்டஞ்சி மருண்டு காலில்
துன்னுவிலங் குடைமையினல் விரைந்துசெலற்
கியலாத துணையி லேன்யான்
தன்னிகரில் ஒருபெரியோன் வண்டியின்மற்
றவனறியா வகையிற் சார்ந்து
பொன்னியலுந் தன்குடம்பை தனிற்காக்கை
போற்றவளர் குயில்போல் போவேன்.

ஆ! ஆ! நகரத்தினின்றும் [1]நெடுந்தூரம் கடந்து வந்துளேன் ஆதலின், இனி இவ்வண்டியினின்றும் இறங்கி இச் சிறுமரச் சோலையுள் மறைந்து செல்லலாமா? அன்றி இவ் வண்டிக்குரிய தலைவரைப் பார்க்கலாமா? இச் சிறுமரச் சோலைக்கட் புகுதலாற் பயனென்? மாட்சி மிக்க சாருதத்தர், தம்மையடைந்தவர்பால் அன்பு மிக உடையவர் என்று கேட்டிருக்கின்றேன். ஆதலின் அவரை [2]நேரிற் கண்டு செல்வேன்.

---

[1] நெடுந்தூரம் வந்ததால் அரசனுடைய காவலர் இனி என்னை அறியமாட்டார் என்பது கருத்து.

[2] நேரிற் கண்ட அளவினுனே நலமுண்டாம் என்பது கருத்து. செவி வாயிலாக அறியப்பட்ட பெருமானைக் கண்களாலும் காண்டல் நலம் என்பது கருத்து.

217. [1]இத்துன்ப் சாகரத்தி னின்றின் றெழுந்தவெனை
அத்தன்கண் டானந்தம் ஆங்கெய்தும்-மெத்தியசீர்
அண்ணல் அவன்குணங்க ளாலேயித் துன்பநிலை
நண்ணுமுடல் தாங்கினனிந் நாள்.

சேடன்—இ∴து அப்பூஞ்சோலை. இதன்கட் புகுகின்றேன். (அருகிற்சென்று) ஐய! மைத்திரேயரே!

விதூடகன்—ஓ! தங்களுக்கு [2]உவப்பானதொன்றைத் தெரிவிக்கின்றேன். வருத்தமானகன் பேசுகின்றான் ஆதலின், வசந்தசேனை வந்திருக்க வேண்டும்.

சாருதத்தன்—மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன்.

விதூடகன்—இழிதகவ! ஏன் இவ்வளவு காலம் தாழ்த்தனை?

சேடன்—ஐய! மைத்திரேயரே! சினங் கொள்ள வேண்டா. வண்டியின் விரிப்பை எடுத்துவர மறந்துவிட்டதின் நிமித்தம் போக்கு வரவு செய்ததிற் காலந் தாழ்த்துவிட்டேன்.

---

[1] ஆனந்தம் எய்தும் (பிறர் துன்பங் கண்டு பொறுத அருளாளராதலின் என் துன்ப ஒழிவு கண்டு) இன்பம் உறுவர். சாருதத்தருடைய வண்டி என்ற அளவில் சந்தனகன் என்னைப் பிடியாமல் விட்டான், இன்றேல் இறப்பே முடிவான பயனாகும். ஆதலின், அவர் உயர்குணங்களாலேயே உடல் தாங்கினேன் என்றவாறு.

[2] உவப்பானது-வசந்தசேனையின் நல்வரவு பற்றியது.

சாருதத்தன்—வருத்தமானக! வண்டியைத் திருப்பு. நண்ப! மைத்திரேய! வசந்தசேனையை இறக்கு வாயாக.

விதூடகன்—இவள் தானே இறங்கமாட்டாளா? இவள் கால்கள் விலங்கிடப்பட்டுள்ளனவா? (எழுந்து வண்டியைத் திறந்து) ஓ! வசந்தசேனையில்லை. [1]வசந்த சேனன் இவன்.

சாருதத்தன்—நண்ப! பரிகாசம் வேண்டா. காதல் காலந் தாழ்த்துதலைப் பொருது. [2]ஆனுல் யானே இறக்குகின்றேன். (என்று எழுகின்ருன்.)

ஆரியகன்—(பார்த்து) ஆ! இவரே இவ்வண்டி யின் தலைவர். இவர் செவிக்கு மாத்திரம் இன்பஞ் செய்பவரல்லர். கண்களுக்கும் இன்பஞ் செய்கின் றவர். ஆ! [3]காப்பாற்றப்பட்டுள்ளேன்.

சாருதத்தன்—(வண்டியிலேறிப் பார்த்து) ஓ! இவன் ஆண் மகனு?

218. [4]துதிக்கைபோல் நீண்ட கைகளும் மடங்கற்
றேளெனப் பருத்துயர் புயமும்
விதிப்படி யகன்ற சமனிலை மார்பும்
வெருளுறீஇச் சிவங்கநீள் விழியும்

---

[1] இவன் ஓர் ஆடவன் என்பதாம்.

[2] பேசிக்கொண்டிருத்தலிற் பயனென்? என்பதுகருத்து.

[3] இவரது காட்சியே துன்பத்தைப் போக்குவதென்பது கருத்து.

[4] இவன் உருவத்தை நோக்கஅஃது அரசிலக்கணமுடைய தாகக் காணப்படுகின்றது. அவ்விலக்கணத்துக்கு மாருகக் காலில் தளை பூண்டிருத்தற்குக்காரணம் யாதோ? என்பதாம்.

மதிப்புற இங்ஙன் அமைதரு பெரியோன்
வடிவினுக் கியைதரா வாறு
விதிர்ப்புறு விலங்கோர் காலினிற் ருங்கும்
விதிக்குறு காரணம் என்னே?

தாங்கள் யார்?

ஆரியகன்—அடைக்கலம் புகுகின்றேன். யான் இடைக் குலச் சிறுவனாகிய ஆரியகனுவேன்.

சாருதத்தன்—பாலகன் என்னும் அரசனல் இடைச்சேரியினின்றுங் கொணர்ந்து சிறையிடப்பட்டவரோ தாங்கள்?

ஆரியகன்—ஆம்.

சாருதத்தன்—

219. [1]நல்லூழே நின்னையிவண் நல்கியது நின்னுருவைப்
புல்லியென் கண்ணுவகை பூத்தனவால்—நல்ல
உயிரை விடினும் அடைக்கலத்தை யோம்பும்
பயனெழிய நின்னைவிடேன் பார்.

(ஆரியகன் மகிழ்ச்சிக் குறிப்பை அவிநயிக்கின்றான்.)

சாருதத்தன்—வருத்தமானக! காலினின்றும் விலங்கைக் கழற்று

சேடன்—தேவரீர் கட்டளைப்படியே. (அங்ஙனமே செய்து) ஐய! விலங்கைக் கழற்றிவிட்டேன்.

---

[1] மிக முயன்று தரிசித்தற்குரிய பெரியோராகிய நீவிர் வலியக் காட்சியளித்தது என் நல்லூழ்ப் பயனாகும் என்றவாறு.

ஆரியகன்—அன்புமயமான வன்மை மிக்க வேறு [1]விலங்குகளை அளித்து விட்டீர்கள்.

விதூடகன்—[2]விலங்குகளை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள். இவ்வாரியகர் விடுதலை பெற்றார். இப்பொழுது நாம் (சிறைக்கோட்டம்) செல்வோம்.

சாருதத்தன்—ஓ! தீமை நீங்குக.

ஆரியகன்—நண்பராகிய சாருதத்தரே! யான் தங்கள் குணங்களாலுண்டாகிய நம்பிக்கையால் இவ்வண்டியில் ஏறினேன்: ஆதலிற் பொறுத்தருள வேண்டும்.

சாருதத்தன்—[3]வலிய மேற்கொண்ட நம்பிக்கையுடைய தங்களால் யான் அலங்கரிக்கப்பட்டுளேன்.

ஆரியகன்—தங்கள்பால் விடைபெற்றுச் [4]செல்லுதற்கு விரும்புகின்றேன்.

சாருதத்தன்—செல்லுங்கள்.

ஆரியகன்—நல்லது. இறங்குகின்றேன்.

சாருதத்தன்—அன்பரீர்! இறங்க வேண்டா. இப்பொழுது கழற்றப்பட்ட விலங்கினையுடைய தாங்கள்

---

[1] அன்பு விலங்கு கழற்றவியலாது என்பது கருத்து.

[2] அரச தண்டனைக்கு மாறுபடச் செய்தமையால் நாமே தீமையைத் தேடிக்கொண்டோம் என்பது கருத்து

[3] முன் அறிமுகமில்லாத என்பால் முதலில் வைத்த நம்பிக்கையால் யான் அலங்கரிக்கப்பட்டுளேன் என்பதாம்.

[4] இங்கே தாழ்த்தால் இருவர்க்கும் துன்பமுண்டாம் என்பது கருத்து.

எளிதில் நடத்தற்கு இயலாது. மக்கள் இயல்பாகவே போக்கு வரத்துச் செய்யும் இவ்விடத்தில் என் [1]வண்டி நம்பிக்கையை உண்டு பண்ணும். ஆதலின் இவ்வண்டியில் ஏறியே தாங்கள் செல்லல் வேண்டும்.

ஆரியகன்—தாங்கள் சொல்லிய வண்ணமே செல்கின்றேன்.

சாருதத்தன்—(ஆசிரியவிருத்தம்.)

220. [2]சுற்றத்தார் தமையினிது சேர்க—

ஆரியகன்—

[3]எனக்கு உறுசுற்றம் தூயோய் நீயே

சாருதத்தன்—

மற்றைக்காரியநிகழ்வில் எனைநினைத்தி—

ஆரியகன்—

[4]தனைமறக்கும் வகைதான் உண்டோ?

---

[1] நடந்து செல்லின் விரைவாகப் போக நேரும்; அது பிறர்க்கு ஐயத்தை விளைவிக்கும். விரைந்து செல்லவில்லையாயின், காவலர் பிடிப்பர் என்னும் அச்சம் விளையும். ஆதலின், எவ்வாற்றானும் நடந்து போதல் நலமின்று என்றவாறும்.

[2] இச்செய்யுள் சாருதத்தனும் ஆரியகனும் ஒருவர்க்கொருவர் உரையாடலாகக் கூறுபடுத்தப்பட்டு முடிந்தது.

[3] எனக்கு நேர்ந்த இடையூற்றை ஒழித்தமையால் நீயே உறுசுற்றமாவாய்; நின்னினும் மேலான நெருங்கிய சுற்றம் வேறில்லை என்பதாம்.

[4] ஒருவன் தன்னை மறக்கும் வகையுண்டா? இல்லை என்பதாம். உடலுள்ள வரையும் உயிர் தந்த உபகாரியை எங்ஙனம் மறக்க முடியும்? என்பது கருத்து.

சாருதத்தன்—

உற்றுப்போம் நினைநெறியில்
தேவர்[1]புறந் தருக—

ஆரியகன்—

எனை [2]ஓம்பி ஞய்நீ.

சாருதத்தன்—

முற்றியநின் நல்லூழே நினைக்காத்தது—

ஆரியகன்—

எனினும் அதன் [3]முதல்நீ யன்றோ!

சாருதத்தன்—பாலகன் என்னும் அரசன் முயன்று கொண்டிருக்குங்கால் அதற்கெதிராய பெருகாப்புச் செய்தற்கு இயலாததாகும். ஆதலின், தாங்கள் விரைந்து செல்லல் வேண்டும்.

ஆரியகன்—செல்கின்றேன். மீண்டுங் காண்பேன்.
[என்று போகின்ருன்.]

சாருதத்தன்—

221. [4]மன்னவன் நெஞ்சிற் கொவ்வா
மாபெருந் தீங்கு செய்திங்கு

---

[1] புறந்தரல்–காத்தல்.

[2] நின் வண்டியினுல் இடையூற்றைக் கடந்தேன். ஆதலின் நீயே எனக்குத் தெய்வம் ஆவாய் என்பது கருத்து.

[3] முதல்-காரணம். நின்வண்டியிலன்றி வேறு வண்டியில் ஏறியிருப்பேனுயின் எனக்கு நல்லூழ் எவ்வாறுண்டாம்? ஆதலின் என் நல்லூழும் நின்னை முன்னிட்டே எனக்குப் பயன் அளித்தது என்பது கருத்து.

[4] தீங்கு செய்து-குற்றம் செய்தமையால். தொடர்-விலங்குடன் பிணைத்த சங்கிலி. நண்ப என்றது மைத்திரேயனைக் குறிப்பதாம் பாழ்ங்கிணறு,கல்லும் ஓடும் செடியும் நிறைந்து

இன்னுமோர் கணப்போழ் தேனும்
இருத்தலோ தகுதி யன்று.
துன்னுபாழ்ங் கிணற்றில் இந்தத்
தொடரினை யெறிதி நண்ப
உன்னுமிச் செயலை வேந்தர்
ஒற்றராங் கண்ணிற் காண்பர்.

(இடக்கண் துடித்தலை அவிநயித்து) நண்ப! மைத்திரேய! வசந்தசேனையைக் காண்பதில் யான் மிகவும் அவாவுடையன் ஆகின்றேன். பார்க்க.

222. [1]காதலியை யிப்பொழுது
காணேன் எனதிடக்கண்
ஏத முறத்துடித்த
தென்கொலோ—ஓதப்
பொருந்துநிப மின்றிப்
புழுங்கி நடுங்கி
வருந்துகின்ற தென்தன் மனம்.

ஆதலின் வருக! போவோம். (சுற்றிவந்து) தீங்கை விளைவிக்கும் பௌத்த சந்நியாசியின் தரிசனம் எதிர் முகமாகின்றதே. (ஆராய்ந்து) அவன் வருக. நாம் இவ்வழியே செல்வோம். (என்று போகின்ருன்.)

"ஆரியகனைக்கோடல்" என்னும்

## ஏழாம் அங்கம் முற்றிற்று.

---

உபயோகமின்றியிருத்தலான் யாரும் காணமாட்டார் என்பது கருத்து.

[1] நிபம்-காரணம். தீ நிமித்தம் காண்டலும் காரணமின்றி மனம் துன்புறுதலும் வரக்கடவ தீங்குகளைப் புலப்படுத்துவனவாம். ஆடவர்க்கு இடக்கண் துடித்தல் தீ நிமித்தமாகும்.

## [1] எட்டாம் அங்கம்

## வசந்தசேனை துன்பநிலை

(நனைந்த சீவரமென்னும் துவராடையைக் கையிற் றுங்கிப் பௌத்தசமயத் துறவி வருகின்றான்.)

துறவி—அறிவில்லாதவர்களே! அறத்தைக் கடைப் பிடித்துச் செய்ம்மின்கள்.

223. [2]பற்று வயிற்றுப்
பசியை யடக்குமின்சீர்
வற்றுத் தியானமெனும்
மாபடகத் தெற்றொலியால்
என்றும் விழிமின்
இயைபில் புலக்கள்வர்
துன்றுமறங் கொள்வர் துணிந்து.

---

[1] இவ்வெட்டாம் அங்கத்தில், வண்டிமாற்றத்தாற் சகாரன் வண்டியில் ஏறிச்சென்ற வசந்தசேனைக்குத்தீங்குநிகழ்ந்த செய்தி கூறப்படும். முன் அங்கத்தில் வேற்றுவழியாகச் சாருதத்தன் வெளிப்படுங்காற் குறிப்பிடப்பட்ட பௌத்தசந்நியாசியும் சகாரனும் ஒன்றுகூடுதலும் அதன்முகமாக அறிவிலார்செய்யும் தீங்கு வெளிப்படுதலும் இவ்வங்கத்தில் நிகழ்வனவாம்,.

[2] பசிபொறுதார்க்குப் பொறியடக்கம் கைகூடாது என்பதாம். தியானம் மயக்க உறக்கத்தை யொழிக்குங் கருவியாம். படகம்-ஒரு வாத்தியம்.

இன்னும். உலகத்துள்ள எல்லாம் அழியும் இயல்பின என்பதைக் கண்டு யான் தனியனுகவே அறங்களுக்கு இருப்பிடம் ஆகின்றேன்.

224. [1]ஐவர் தமைக்கொன்
றணங்கினையும் கொன்றுங்கே
உய்யக் கிராமத்தை
யோம்பியே—செய்யவலி
யற்றவொரு சண்டாளன்
தன்னையுங்கொன் ருன்யாவன்
மற்றவன்பே ரின்பநுகர் வான்.

---

[1] இச் செய்யுளின்உட்பொருள் வருமாறு: ஐவர்தமைக் கொன்று—ஐம்பொறிகளையும் தத்தம் புலனுகர்ச்சிகளிற் பற்ற விடாது அடக்கி. அணங்கு-அவிச்சை; அவித்யா. இது பஞ்சக் கிலேசங்களுள் தலையாயது. இதனை "மயக்கம்" என்பர் திருவள்ளுவர் (திருக்குறள்-360). அவித்யா என்பது வட மொழியில் பெண்பாலாகும். ஆதலின் அணங்கென்று கூறப் பட்டது. கிராமம்—குழு; அஃது ஈண்டுத் தத்துவ தாத்துவி கங்களின் குழுவானமைந்த உடலையுணர்த்தும். உடலை யோம்புதலாவது தீயசெயல்களிற் புகாமற் பாதுகாத்தல். வலியற்ற சண்டாளன் என்பது, அவிச்சையும் அதன் காரியமும் ஆகிய துணைவலியிழந்த அகங்காரத்தை யுணர்த்தும். ஐம்பொறி யடக்கம், அவிச்சை அகங்காரம் ஒழிதல், உடலைத் தீய செயல்களிற் புகாமற் காத்தல் என்னும் இவற்றையுடையான் அழிவிலின்பமாகிய வீட்டுநிலையை எய்துவன் என்பதாம்.

225 [1]உள்ளம் மழியார்
உவந்து தலைமழித்தும்
எள்ளும் முகமழித்தும்
என்பயனே—உள்ளம்
மழித்தோனே நன்கு
வனப்பிற் றலையை
மழித்தோன் எனப்படுவான்.

இச் சீவர ஆடை துவர்நீர்தோய்ந்துள்ளது. அரசன் மைத்துனனாகிய சகாரனது [2]பூஞ்சோலைக்குட் புகுந்து அங்குள்ள புட்கரிணியில் இவ் வாடையைக் கழுவித் தூய்மை செய்துகொண்டு [3]மிகு விரைவில் திரும்பிச் செல்வேன். [சுற்றிவந்து அங்ஙனமே செய்கின்றான்]

[வேடசாலையில்]

நில். அடே! கொடியவனாகிய துறவியே! நில்.

துறவி—(அச்சத்தோடு பார்த்து) ஓ! ஓ! இதோ அரசன் மைத்துனராகிய அச்சமத்தானகன் வந்து விட்

---

[1] மழித்தல்-மொட்டையாக்குதல். உள்ளம் மழியார்-உள்ளத்தைக் காம முதலிய அழுக்கறத் தூய்மைசெயயார். தலை மழித்தும் முகம் மழித்தும் அழகுசெய்தலாற் பயனென்? உள்ளம் தூய்தாகப் பெற்றவனே அவ் வகவொழுக்கத்திற் கேற்ற தலைமழித்தலாகிய தவவேடப்பயனை எய்தினோன் ஆவன் என்பதாம். ''தவமறைந் தொழுகுந் தன்மையிலாளர்'' (சிலப்பதிகாரம். இந்திரவிழவூ ரெடுத்தகாதை அடி-12 :) என்பது ஈண்டு நினைவுறத்தக்கது.

[2] இப் பூஞ்சோலை புட்பகரண்டகம் என்னும் உய்யானத்தின் ஒருபாலுள்ளது.

[3] காவலர் காண்பாரரயின் பிடித்துக்கொள்வர் என்பது கருதி ''மிகு விரைவில்'' என்றான்.

டான். ஒரு துறவி குற்றஞ் செய்வானுயின் மற்றைத் துறவிகளையும் எங்கெங்குக் காண்கின்ருனே அங் கங்கே எருத்தின் மூக்கைத் துளையிட்டாற்போல் அவர் கள் மூக்கைத் துளைத்துப் போக்குவான். ஆதலின், புகலில்லாத யான் யாரைப் புகலடைவேன்? தலைவ ராகிய புத்ததேவரே எனக்கு இவ்வமயம் புகலிட மாவர்.

[வாட்படையேந்திய விடனேடு சகாரன் வருகின்ருன்.]

சகாரன்—நில். அடே! கொடியவனுகிய துறவியே! நில். கட்குடிப்போர் கூட்டத்திற் கறியின் நிலைமையிற் கிடைத்த செந்நிற முள்ளங்கிக் கிழங்கின் தலைப் பாகத்தை முறித்தலபோல் உன் தலையை முறித்து விடு வேன். (என்று சொல்லி அடிக்கின்ருன்.)

விடன்—காணின! உலகப்பற்றையொழித்துத் துவ ராடை மேற்கொண்ட இத்துறவியை அடித்தல் தகுதி யன்று. இதனுற் பயனென் இன்பநுகர்தற் பொருட்டு அடையப்பட்ட [1]இப்பூஞ்சோலையையே தாங்கள் பார்த் தல் வேண்டும். இஃது,

226 [2]உறையுளை யில்லார்க் கில்லம்
உறுமகிழ் வுறுத்தத் தோன்றிச்
செறிவன மரங்கள் செய்யும்
சீரெழிற் செயல்மேற் கொண்டே

---

[1] இப்பூஞ்சோலையைப் பாருங்கள் என்று பிறிதொரு நிகழ்ச்சியில் தலைப்படுத்துத் துறவிபால் எழுந்த சினத்தைத் தணிக்கின்ருன்.

[2] உறையுள்-தங்குமிடம். இல்லார்-வழிச்செல்வோர். இல்லம்உறுமகிழ்வு-வீட்டை எய்துதலான்உண்டாம் உவகை. தோன்றிச் செறிந்த வனத்து மரங்கள். சீர் எழிற்செயல்-

அறிவிலாக் கொடியார் தங்கள்
அகமெனக் காவலின்றி
உறைபுதி தியனு டென்ன
உரிமையின் நுகர்ச்சிக் காமால்.

துறவி—[1]உபாசகரே! தங்கள்வரவு நல்வரவாக. அருள் செய்க.

சகாரன்—ஐய! பாருங்கள். பாருங்கள். என்னைப் பழித்துரைக்கின்றான்.

விடன்—என்ன சொல்லுகின்றான்?

---

சிறந்த அழகிய செயல்; அஃதாவது தம்மை அடைந்தோரை வெப்பம் ஒழித்துக் குளிர்விக்கும் செயல். கொடியவர் அகம் தீயோருள்ளம். காவலின்றி என்றமையான் எல்லோரும் அனுபவித்தற்பொருட்டுத் தடையின்றி உட்புகுதற்குரியது என்பது போதரும். ஓர் அரசற்குப் புதிதாக வாய்க்கப் பெற்ற நாடுபோல உரிமையில்லாத நுகர்ச்சிக்கு உரியதுமாம் என்க. புதியநாட்டில் உரிமையின்றியும் பயனுகர்தல் பொருந்தும். அதுபோல இப்பூஞ்சோலை உரிமையின்றியும் பயன் நுகர்தற்குரியது என்பதாம். நுகர்ச்சிக்கு ஆம்-அனுபவித்தற் குரியதாகும். 'ஆம்' என்பது முற்போந்த இஃது என்னுஞ் சுட்டாற் கூறப்பட்ட பூஞ்சோலைக்குப் பயனிலையாகும். செயன்மேற்கொண்டு காவலின்றி உரிமையில் நுகர்ச்சிக்கு ஆம் என முடிக்க. ஈண்டுத் துறவியை உட்புகுத்தவோவிலக் கவோ உனக்கு அதிகாரமில்லை என்பது உட்கோள்.

[1] பௌத்தசமயத்தவர் இல்லறத்தாரை உபாசகர் எனவும், துறவறத்தாரைப் பிட்சுகர் எனவும் வழங்குவர்.

சகாரன்—உபாசகன் என்று என்னைக் கூறுகின்ருன். யான் [1]நாவிதனு?

விடன்—புத்ததேவரை உபாசிப்பவர் என்று தங்களைப் புகழ்ந்து கூறுகின்ருன்.

சகாரன்—புகழ்ந்து சொல். பிட்சுக! புகழ்ந்து சொல்.

துறவி—நீங்கள் பொருளுடையீர். புண்ணியமுடையீர்.

சகாரன்—ஐய! [2]பொருளுடையவன், புண்ணியமுடையவன் என்று என்னைக் கூறுகின்ருன். யான் சாருவாகனு? தண்ணீர்த் தொட்டி வைப்பவனு? குயவனு?

---

[1] உபாசகன் என்னுஞ் சொல் வினைசெய்வானையும் உணர்த்தும் ஆதலின் மயிர்வினைஞன் எனத் தன் அறிவின்மையாற் பொருள்கொண்டு சகாரன் 'யான் நாவிதனு?' என்று கூறினுன்.

[2] பொருளுடையவன் என்பதற்குப் பொருளினுற் பெறக்கடவது காமம் எனக்கொண்டு, காமமே சிறந்த உறுதிப் பொருளெனக் கொள்ளும் சாருவாகன் எனப் பொருள் கொண்டான். புண்ணியம் உடையவன் என்பதற்கு, பசு முதலியன உண்ணத் தண்ணீர்த் தொட்டி வைத்தலும், வேள்வி முதலியவற்றிற்குரிய மண்பாண்டங்களை ஆக்கிக் கொடுத்தலும் புண்ணியம் ஆதலின் தண்ணீர்த்தொட்டி வைப்பவன் என்றும், குயவன் என்றும் பொருள்கொண்டான். புண்ணியச் செயல்கள் சகாரனுக்கு இழிவரயின என்பது கருத்து.

விடன்—கானீன! "[1]நீங்கள் பொருளுடையீர். புண்ணியமுடையீர்" என்று உங்களைப் புகழ்ந்து பாராட்டுகின்றான்.

சகாரன்—ஐய! அங்ஙனமாயின் எதற்காக இவன் இங்கு வந்தான்?

துறவி—இத்துவராடையைக் க ழு வு வ த ற் கு வந்தேன்.

சகாரன்—அடே! கொடுந்துறவி! எல்லாப் பூஞ்சோலைகளிலுஞ் சிறந்த புட்பகரண்டகம் என்னும் இப்பூங்கா என் உடன்பிறந்தாள் கணவனால் எனக்குத் தரப்பட்டது. இதன்கண் உள்ள இப் புட்கரிணியில் நாய்களும் நரிகளும் நீர் உண்ணும். மிகச்சிறந்த[2] புருடனும் மனிதனுமாகிய யானும் இதன்கண் நீராடுவதில்லை. அத்தகைய இப்புட்கரிணியில் [3]பழைய கொள்ளுக் கஞ்சியை ஒத்த நிறத்தினையும் தீநாற்றத்தினையுமுடைய துவராடைகளைக் கழுவுகின்றாய். ஆதலின் உன்னை ஒரே அடியிற் கொன்றுவிடுகின்றேன்.

விடன்—கானீன! இவன் சமீப காலத்தில் துறவி ஆயினான் என்று எண்ணுகின்றேன்.

சகாரன்—ஐய! எப்படி அறிந்தீர்கள்?

வி ட ன்—இதன்கண் அறியவேண்டுவதென்ன? பார்க்க.

---

[1] அரசன் மைத்துனராதலின் பொருளுடையீர் என்றும், நல்லொழுக்கமுடையீர் ஆதலின் புண்ணியமுடையீர் என்றும் பாராட்டுகின்றான் என்பது கருத்து.

[2] புருடனும் மனிதனும் என்பது பொருளின்மை.

[3] கொள்ளுத்தானியத்தால் ஆகிய பழைய கஞ்சி மிக்க செந்நிறம் உடையதாகும் ஆதலின் கண்டு ஒப்பாயிற்று.

227. [1]இன்னுமிவன் நெற்றியொளி மயிர்களைந்த
வுடன்றிகழ்ந்தாங் கியையும் வெண்மை
துன்னுதுவ ராடையினால் இயல் தழும்பு
நாள்சிலவால் தோளின் இன்றும்
அன்னதுவ ராடையினை யமைக்குமுறை
பயின்றிலனவ் வகற்சியாலே
பன்னலுறு முன்றானை சுருங்கிநெகிழ்ந்
தணிபுயத்திற் படாது வீழும்.

துறவி—உபாசகரே! அப்படியே. யான் சமீப காலத்தில் துறவியாயினவன்.

சகாரன்—அப்படியானால் நீ [2]பிறந்தவுடனேயே ஏன் துறவியாகவில்லை? [என்று அடிக்கின்றான்.]

துறவி—புத்த தேவர்க்கு வணக்கம். ("நமோபுத் தாய")

விடன்—இவனை அடித்தலாற் பயனென்? விடுங்கள். போகட்டும்.

---

[1] நெற்றியொளி மழித்தவுடனே எங்ஙனம் வெண்ணிறமாகத் தோன்றுமோ அங்ஙனமே தோன்றுகின்றது. இவன் துறவியாகிச் சிலநாளாதலின் துவராடைபோர்த்ததனாலாந் வடு, தோளிற் காணப்பட்டிலது. அமைக்கும்முறை-செய்யும் முறை. அவ்வகற்சியாலே அவ்வாடை தன் அளவுக்குமேற் பட்டு அகன்றிருத்தலாற் சுருக்கப்பட்டு அடிக்கடி சரிந்து தோளிற் தங்காது வீழ்வதாம். இன்ன குறிப்புக்கள் இவன் சமீபகாலத்தில் துறவியாயினான்என்பதைப் புலப்படுத்துவன.

[2] பிறந்தவுடனேயே ஏன் துறவியாகவில்லை என்பது நியாயவிருத்தம்.

சகாரன்—அடே! யான் ஆலோசித்துத் துணியும் அளவு நில்.

விடன்—[1]எவனேடு கூடி ஆலோசிப்பது?

சகாரன்—என் நெஞ்சோடு ஆலோசிக்கின்றேன்.

விடன்—ஆ! அப்படியானுற் [2]போகவேண்டாவோ?

சகாரன்—மகனே! நெஞ்சமே! தலைவ! [3] மகனே! இத்துறவி போகலாமா? அன்றி நிற்கலாமா? [[4]தனக்குள்] போகவும் வேண்டாம். நிற்கவும் வேண்டாம் [வெளிப்படையில்] ஐய! என் நெஞ்சோடு ஆலோசித்துத் துணிந்துள்ளேன். என் உள்ளம் இவ்வாறு கூறுகின்றது.

விடன்—என்ன சொல்லுகின்றது?

சகாரன்—போகவுங்கூடாது; நிற்கவுங்கூடாது மூச்சுக்காற்றை உள்ளே இழுத்தலுமாகாது; வெளியே விடுதலுமாகாது. இவ்விடத்திலேயே விரைவில் வீழ்ந்து இறத்தல் வேண்டும்.

துறவி—புத்ததேவர்க்கு வணக்கம். ("நமோபுத்தாய") அடைக்கலம் புகுகின்றேன்.

விடன்—செல்க.

சகாரன்—உறுதி செய்து போகவேண்டும்.

---

[1] யான் முன்னரே விடும்படி கூறியுள்ளேன். என்னைத் தவிர வேறு யாரோடு ஆலோசிப்பாய் என்பது கருத்து.

[2] துறவி போக வேண்டாவோ என்பதாம்.

[3] கூறியது கூறல். இவ்வெல்லா விளிகளும் நெஞ்சத்தைப் பற்றியன.

[4] நெஞ்சொடு கிளத்தலை அவிநயஞ் செய்கின்றான்.

விடன்—என்ன உறுதி?

சகாரன்—சேற்றினுல் தண்ணீர் கலக்கமுரு வண்ணம் இப்புட்கரிணியிலுள்ள சேற்றை வெளிப்படுத்தல் வேண்டும். இன்றேல் தண்ணீரைத் திரட்டிப் பிரித்து வைத்துச் சேற்றை வெளிப்படுத்தல் வேண்டும்.

விடன்—ஆ! இவன் அறிவின்மை என்னே!

228. [1]மாருய உள்ளமும் மாண்பிலாத் தீச்செயலும்
கூருய கல்லிற் குலவுடலும்—வீருக்கொண்டு
ஏற்ற விறைச்சியுரு வேய்மர மாவார்தம்
தோற்றம் நிலக்குச் சுமை.

[துறவி [2]அவிநயத்தாற் பழிக்கின்ருன்.]

சகாரன்—என்ன சொல்லுகின்ருன்?

விடன்—தங்களைப் புகழ்கின்ருன்.

சகாரன்—புகழ்ந்து சொல். புகழ்ந்து சொல். மீண்டும் புகழ்ந்து சொல்.

[அங்ஙனஞ் செயது துறவி போகின்ருன்.]

விடன்—கானீனரே! இப்பூஞ்சோலையின் அழகைப் பாருங்கள்.

---

[1] கல்மரம்முதலியன சித்தவிருத்தியின்மையால் வேண்டுமென்று பிறர்க்குத் தீமைவிளைக்கா. அறிவிலாத மாக்கள் மாறுபட்ட எண்ணத்தையும் செயலையும் உடையராய்த் தீங்குவிளைப்பர் என்னும் இக்கருத்தைப் புலப்படுத்தற்கே "மாருயவுள்ளமும் மாண்பிலாத் தீச்செயலும்" என்று கூறப்பட்டது. "ஏவவுஞ்செய்கலான் தான்தேருன் அவ்வுயிர் போஒ மளவுமோர் நோய்" (திருக்குறள் 848.) என்பதும் அதன் உரையும் ஈண்டுக் கருதற்பாலன.

[2] பேச்சினுற் பழிப்பின் அடிப்பன் என அஞ்சி அவிநயத்தாற் பழித்தான்.

229. [1]மலர்பழ மலியப் பெற்று
மன்னவன் ஆணையாலே
உலவுசீர்க் காவ லாளர்
ஓம்பலும் உடையவாகி
அலைவற வலிய வல்லி
அணையுமிம் மரங்கள் பெண்டிர்
குலவுமா டவர்கள் போலக்
குறைவிலா இன்பந் துய்க்கும்.

சகாரன்—தாங்கள் நன்கு கூறுகின்றீர்கள்.

230. [2]நிலத்தில் ஓவியம் பொறித்தெனப்
பூப்பல நிரம்பும்
மலர்த்த னிப்பொறை மரங்களின்
தலையினை வணக்கும்
நலத்த அம்மர நுனியிளங்
கொம்பரி னூலும்
பலத்த வானரம் பலவுடைப்
பழமெனத் திகழும்.

விடன்—கானீனரே! இக்கல்லில் இருங்கள்.

சகாரன்—இதோ இருக்கின்றேன். [என்று விடனோடுகூட இருக்கின்றான்.) ஐய! இப்பொழுதும் அவ

---

[1] அலைவு அற—அசைவு இல்லாமல். வலிய வல்லி-வன்மைமிக்க கொடி. வல்லி வலிய அணையும் இம்மரங்கள் எனினும் ஆம். உலகத்து மக்கள் அரசர்பாதுகாப்பிலிருந்தே வாழ்க்கையின்பம் எய்துவர் என்பதும் புலப்படுத்தவாறு.

[2] மலர்ப்பொறை மரத்தலையை வளைக்கும். நாலுதல்—தொங்குதல். பலவுடைப்பழம்-பலாப்பழம்.

வசந்தசேனையை நினைக்கின்றேன். [1]தீயவர் கூறுஞ் சொற்களைப்போல் என் உள்ளத்தினின்றும் அவள் விலகவில்லை.

விடன்—(தனக்குள்) அங்ஙனம் அவளால் விலக் கப்பட்டும் அவளையே நினைக்கின்ருன்.

231. [2]மகளி ரவமதிப்பு வாய்ந்த சிறியார்
மிகவளருங் காமத்தால் வேவர்—தகவுடைய
நல்லோர்க் கவமானம் நண்ணில் அவாக்குறைப்பர்
வெல்வர் அறவே வெறுத்து.

சகாரன்—ஐய! "வண்டியை ஓட்டிக்கொண்டு மிக விரைவில் வா" என்று தாவரகன் என்னும் சேடனுக்குச் சொல்லி நெடுநேரம் ஆயிற்று. இன்னும் வந்திலன். நெடு நேரமாக வயிற்றுப் பசியுடையனுய் இருக்கின் றேன். பகற்பொழுதிற் கால்களால் நடத்தற்கு இயல வில்லை. பாருங்கள். பாருங்கள்.

232. [3]சினமூனடக் குரங்கெனச் சிவந்து விண்ணடு
இனனடை வுற்றனன் காணடற் கேய்ந்திலன்
வினையுறு நூற்றுவர் மக்கள் வீடல்கண்டு
அனைமன மெனக்கொதித் தழலு மிந்நிலம்.

---

[1] இழிந்தோர்க்கு இழிந்த உவமை கூறுதல் இயல்பு.

[2] நல்லோர்க்குப் பெண்பாலரால் அவமதிப்பு நண்ணில் காமவேட்கையைத் தணித்துக்கொள்வர்; அல்லது வெறுப் புற்று அக்காமத்தை அறவே வெல்வர் என்பதாம்.

[3] இனன்-சூரியன். நூற்றுவராகிய மக்கள் துரியோதனன் முதலியோர். வீடல்-இறத்தல். அனை-அன்னை; காந்தாரி.

விடன்—இஃது அங்ஙனமே.

233. [1]ஆவினங்கள் உண்டவிளம் புல்லையசை
மீட்டிநிழல் அயர்ந்து தூங்கும்;
மேவியநீர் வேட்கையினால் வெதும்புமுழை
குளச்சுடுநீர் விரும்பியுண்ணும்;
தாவமுறு வெயிற்பயத்தால் நகர்த்தெருவின்
மனிதர்நடை தவிர்ந்தார் வண்டி
யோவல்லிலாச் சுடுநிலத்தை யொருவியொரு
புறத்திருக்கு முதுவெனெண்ணம்.

சகாரன்—ஐய!

234. [2]என்றலையில் கதிரவன்கால் வெயில்மிகவும்
படிந்துறைந்த தென்னே யைய
புன்றலைய புட்பறவை குருகினங்கள்
மரக்கிளையிற் புகுந்து தங்கும்;
மன்றவெதுப் புற்றுநெடு மூச்செறியும்
நரர் புருடர் மனிதரெல்லாம்
ஒன்றியதம் உறையுள்ளாம் இல்லத்தில்
இருந்து வெயி லுருப்பந் தீர்வர்.

---

[1] அசைமீட்டல்- தா்ம் உண்ட உணவை மீட்டு மென்று இரைப்பையினுட் செலுத்தல். உழை-மான்.

[2] வண்டியின் வரவைப் பார்த்தற்பொருட்டு அடிக்கடி வெளிப்படுதலின் தலையில் கதிரவன் வெயில் படிந்தது என்பதாம். கால் வெயில்-உக்கிய வெயில். வெயில் உருப்பம்-வெயிலின் கொடுமை. புள், பறவை, குருகு என்பனவும் நரர், புருடர், மனிதர் என்பனவும் உறையுள் இல்லம் என்பனவும் கூறியது கூறலாம்.

ஐய! இன்னும் அச்சேடன் வந்திலன். எனக்கு [1]உவகையுண்டாதற்பொருட்டு ஏதாவது ஒன்றைப் பாடுகின்றேன், (என்று பாடுகின்ருன்.) ஐய! ஐய! யான் பாடியதைத் தாங்கள் கேட்டீர்களா?

விடன்—என்ன சொல்லுவேன்! தாங்கள் கந்தருவர் ஆயினீர்கள்!

சகாரன்—ஏன் கந்தருவனுக மாட்டேன்?

235. [2]காயமண மிகுமுத்தக்
காசொடுசீரகம்வசம்பும்
மேயகருப் பஞ்சாற்று
வெல்லம்விர வியசுக்கும்
ஆயமணப் பொருள்கூட்டி
யானுகர்ந்தேன் ஆதலினுல்
தூயநல மிகுமினிய
சுரமுடையே னுயினனுல்.

ஐய! மீண்டும் பாடுகின்றேன். (அங்ஙனமே செய்கின்ருன்.) ஐய! ஐய! யான் பாடியதைத் தாங்கள் கேட்டீர்களா?

விடன்—என்ன சொல்லுவேன்! தாங்கள் கந்தருவர் ஆயினீர்கள்!

சகாரன்—ஏன் கந்தருவனுக மாட்டேன்?

---

[1] பசித்துன்பம் தெரியாமைப்பொருட்டெனபதாம்.

[2] காயம்-பெருங்காயம். முத்தக்காசு-கோரைக்கிழங்கு. குரலினிமைக்கு உரிய மருந்துகளை உண்ட எனக்குக் காந்தருவர் இசை ஏன் உண்டாகாது? என்பது கருத்து.

236. [1]காய மேவிய கறித்துகள்
கலந்துநெய் கூட்டி
மேய வெண்ணெயுங் கிருதமும்
விராய்ப்பதப் படுத்த
ஒய்வி லின்னிசைக் குயிலின
திறைச்சியை யுண்டேன்
ஆய தன்மையால் இன்னிசைப்
பாடகன் ஆனேன்!

ஐய! இன்னும் சேடன் வந்திலன்.

விடன்—தாங்கள் கவலைப்படாமல் இருங்கள். இப்பொழுதே வந்துவிடுவான்.

(அதன்பின் வசந்தசேனையும் சேடனும் வண்டியிலேறி வருகின்றனர்.)

சேட்ன்—யான் மிகவும் அஞ்சுகின்றேன். சூரியன் நண்பகலை அடைந்துவிட்டான். இப்பொழுது அரசன் மைத்துனராகிய சமத்தானகர் சினங்கொள்ளாமல் இருப்பாரா? ஆதலின் விரைந்து செலுத்துகின்றேன். எருதுகளே! செல்லுங்கள். செல்லுங்கள்.

வசந்தசேனை—ஆ! ஆ!! இது வருத்தமானகனுடைய பேச்சுக் குரலாக இல்லையே. ஈதென்ன! மாட்சி மிக்க சாருதத்தரால் தம் ஊர்திகளின் களைப்பைப் போக்க எண்ணி வேற்ருளும் வேற்று வண்டியும் அனுப்பப்பட்டனவோ! வலக்கண் துடிக்கின்றது. என் நெஞ்சம் நடுக்கமுறுகின்றது! திசைகள் பாழாய்த்

[1] கறித்துகள்-மிளகுப் பொடி. நெய்கூட்டி, எண்ணெயும் கிருதமும் விராய் என்பது கூறியது கூறல். குயிலிறைச்சி உண்டமையாற் குயிலை யொத்த இன்னிசை வல்லன் ஆனேன் என்பதாம்.

தோன்றுகின்றன! எல்லாம் மாருகக் காணப்படுகின்றனவே!

சகாரன்—(உருளொலியைக் கேட்டு) ஐய! ஐய! வண்டி வந்துவிட்டது.

விடன்—எப்படி அறிந்தீர்கள்?

சகாரன்—ஐய! தாங்கள் பார்க்கவில்லையா? கிழப் பன்றி போலக் குரகுர என்னும் ஒலியோடு காணப் படுகின்றது.

விடன்—(பார்த்து) நன்ருகக் கண்டீர். இவன் வந்து விட்டான்.

சகாரன்—மகனே! தாவரக! சேட! வந்தனையா?

சேடன்—ஆம்.

சகாரன்—வண்டியும் வந்ததா?

சேடன்—ஆம்.

சகாரன்—எருதுகளும் வந்தனவா?

சேடன்—ஆம்.

சகாரன்—நீயும் வந்தனையா?

சேடன்—([1]சிரித்துக்கொண்டு) பெருமானே! யானும் வந்தேன.

சகாரன்—அப்படியானுல் வண்டியை உள்ளே விடு.

---

[1] வாராத ஒருவன் எங்ஙனம் மறுமொழி கூறுவன்? என்பதை அறியாமல் "நீயும் வந்தனையா" என்று கேட்டது சேடன் சிரிப்புக்குக் காரணமாகும்.

சேடன்—எந்த வழியாக?

சகாரன்—இடிந்த இம் மதிற்சுவரின் வழியாக.

சேடன்—பெருமானே! எருதுகள் இறந்துபோம். வண்டியும் ஒடிந்துவிடும். சேடனுகிய யானும் இறந்து போவேன்.

சகாரன்—அடே! யானே அரசன் மைத்துனன். எருதுகள் இறக்குமாயின் வேறு எருதுகளை விலைக்கு வாங்குவேன்; வண்டி ஒடியுமாயின் வேறு ஒரு வண்டி செய்விப்பேன்; நீ இறந்துவிடின் மற்றொருவன் வண்டி யோட்டுபவன் ஆவன்.[1]

சேடன்—எல்லாம் தங்களுக்கு உண்டாகும். யானே எனக்குப் பயன் செய்தவனுகமாட்டேன்.

சகாரன்—அடே! எல்லாம் அழிந்து போகட்டும். இடிந்த மதிற்சுவர் வழியாகவே வண்டியை உள்ளே விடு.

சேடன்—ஏ! வண்டியே! ஒடிந்துபோ. உன் தலைவனோடு தொலைந்துபோ. மற்றொரு வண்டி வரட்டும். பெருமான்பாற் சென்று தெரிவிப்பேன். (உள்ளே சென்று) வண்டி ஏன் ஒடியவில்லை? பெருமானே! இவ் வண்டி உள்ளே வந்து விட்டது.

சகாரன்—[2]எருதுகள் அறுந்துபோகவில்லையா? கயிறுகள் இறந்துபோகவில்லையா? நீயும் இறக்கவில்லையா?

---

[1] எனக்குக் கிடைத்தற்கு அரியது ஒன்றுமில்லை என்பது கருத்து.

[2] எருதுகள் இறக்கவில்லையா ? கயிறுகள் அறவில்லையா? என்று கூறவேண்டியவைகளை மாறுபடக் கூறினன்,கூறுபவன் சகாரனுதலின்.

சேடன்—ஆம்.

சகாரன்—ஐய! வாருங்கள்; வண்டியைப் பார்ப்போம். ஐய! தாங்களே எனக்கு ஆசிரியர்; பேராசிரியரும் ஆவீர். அரசர்க்கு நெருங்கிய துணைவன் என்றும், போற்றத்தக்கவன் என்றும் என்னைத் தாங்கள் அன்போடு [1]மதிக்கின்றீர்கள். தாங்களே முதலில் வண்டியில் ஏற வேண்டும்.

விடன்—அங்ஙனமேயாக. (என்று ஏறுகின்றான்.)

சகாரன்—நீங்கள் நில்லுங்கள். உங்கள் அப்பனுடையதா இவ்வண்டி? நீங்கள் முன்னால் ஏறுகின்றீர்களே? யானன்றே இவ்வண்டிக்குரிய தலைவன்? முதலில் வண்டியில் ஏறுவேன்.

விடன்—தாங்கள் தானே அங்ஙனம் கூறினீர்கள்?

சகாரன்—யான் அப்படிக் கூறினாலும் "பெருமான் ஏறுங்கள்" என்று சொல்லுவதன்றோ உங்களுக்கு முறை?

விடன்—தாங்கள் ஏற வேண்டும்.

சகாரன்—யான் இப்பொழுது ஏறுகின்றேன். மகனே! தாவரக! சேட! வண்டியைத் திருப்பு.

சேடன்—(திருப்பி) பெருமானே ஏறுங்கள்.

சகாரன்—(ஏறிப் பார்த்து அச்சக் குறிப்பை அவிநயித்து விரைந்து இறங்கி விடனது கழுத்தைப்

---

[1] தன்னை விடன் நன்கு மதிப்பதே தான் அவனைமதிப்பதற்குக் காரணம் என்பது கருத்து.

பற்றிக்கொண்டு) ஐய! ஐய! [1]செத்தாய். செத்தாய். அரக்கியோ கள்வனே வண்டியில் ஏறியிருக்கின்றனர். அரக்கியாயின் நம் இருவரையும் திருடுவாள். அன்றிக் கள்வனாயின் நம் இருவரையும் தின்றுவிடுவான்.

விடன்—அஞ்சவேண்டா. [3]அரக்கி இந்த மாட்டு வண்டியில் ஏறி எங்ஙனம் போக்கு வரவு செய்வாள்? இஃது அங்ஙனமன்று. நண்பகல் கதிரவனது மிகு வெயிலால் தடைப்பட்ட கண்களையுடைய தங்களுக்குத் தாவரகனுடைய சட்டையிட்ட உருவத்தின் நிழலைக் கண்டவுடன் [4]மயக்கமுண்டாயிற்று.

சகாரன்—மகனே! தாவரக! சேட! [5]பிழைத்திருக்கின்றாயா?

சேடன்—ஆம்.

---

[1] "செத்தேன் செத்தேன்" என்று சொல்ல முற்பட்டுத் தடுமாறிச் "செத்தாய் செத்தாய்" என்றான்.

[2] பெண் ஆண் என்று பகுத்தறியும் ஆற்றலில்லாதவனுக்குச் சிறப்புமுறையான் வசந்தசேனை என்னும் அறிவு எவ்வாறு உண்டாம்? என்பதாம். தின்றுவிடுவாள் திருடுவான் என்பன மாறுபடக் கூறப்பட்டன.

[3] ஒரு கணப்பொழுதில் நெடுந்தூரம் செல்லும் ஆற்றல் வாய்ந்த அரக்கி மெல்லச் செல்லும் மாட்டு வண்டியில் எங்ஙனம் ஏறுவாள்? என்பது கருத்து.

[4] சட்டையணிந்தமையால் தாவரகனுடல்நிழல் பருத்திருக்கும். அது கண்டு மாறுபட எண்ணியது மயக்கத்துக்குக் காரணமாகும் என்பதாம்.

[5] அரக்கி உன்னைத் தின்னாமல் இருக்கின்றாளா? என்பதாம்.

சகாரன்—ஐய! ஒரு பெண் வண்டியில் ஏறியிருக்கின்ருள். ஆதலிற் பாருங்கள்.

விடன்—பெண்ணு!

237. [1]வழியிடை மழைநீர் தாக்குறக் கண்கள்
வாட்டமுற் றெருதுறல் போல
வழுவில தாகத் தலையினை வணக்கி
மண்ணிடை விரைந்துசெல் லுதுமால்;
குழுவிய பெரியோ ரவைக்களத் தென்றுங்
குறைவிலாச் சிறப்பினை விரும்பும்
பழுதிலென் விழிகள் நற்குல மகளைப்
பார்த்தலிற் பயமுறும் அம்மா.

வசந்தசேனை—(வியப்போடு தனக்குள்) என் கண்களுக்குத் [2]துன்பத்தையே விளைவிக்கின்ற அரசன் மைத்துனனு? அங்ஙனமாயின், பேறிலளாகிய யான் உயிர்பிழைத்தல் சந்தேகமே. இப்பொழுது இவ்விடத்திற் பேறிலளாகிய என்னுடைய இவ்வரவு, களர் நிலத்தில் விதைத்த வித்துக்கூட்டம் போலப் பயனிலதாயிற்று. இனி இந் நிகழ்ச்சியில் யான் என் செய்வேன்?

---

[1] நிலத்தில் தலைவணக்கி விரைந்து செல்லுதற்குக் கண் அஞ்சுதல் காரணமாகும். பிறர்மனை நயத்தல் பெருமையைக் கெடுக்கும் என்பது கருத்து.

[2] காதலனைக் காண வந்த எனக்கு அக்காட்சி இல்லாமையோடு வெறுக்கத்தக்கவனைக் காண்டலும் நேர்ந்ததென்பது கருத்து.

சகாரன்—கிழவனுகிய இச்சேடன் அச்சமுற்று வண்டியைப் பார்க்கின்ருனில்லை. ஐய! நீங்கள் வண்டியைப் பாருங்கள்.

விடன்—அதனுற் குற்றமென்ன? நிற்க, அங்ஙனமே பார்க்கின்றேன்.

சகாரன்—ஈதென்ன? [1]நரிகள் பறக்கின்றன. காக்கைகள் நடக்கின்றன. இவ்வையன் அரக்கியின் கண்களால் உண்ணப்பட்டுப் பற்களாற் பார்க்கப்படுமுன்னரே யான் ஓடிவிடுகின்றேன்.

விடன்—(வசந்தசேனையைப் பார்த்துத் துன்பத்தோடு தனக்குள்) ஓ! ஈதென்ன? மான்பேடு புலியைத் தொடர்கின்றதே! ஆ! துன்பம்.

283. [2]மன்னுசரற் கால மதிபோற் புளினமுறுந்
தன்னினிய காந்தற் றழாதொரீஇ—யன்னப்
பெடைமுயன்று காக்கையினைப் பேணி வலிய
அடைகின்ற தென்னோ அது.

(மறைவாக) வசந்தசேனே! இது தக்கதன்று இஃது ஒத்ததுமன்று.

---

[1] நரி காக்கைகளைப்பற்றிக் கூறியது தீ நிமித்தம் என்றற்காம். வினைச்சொற்களெல்லாம் மாறுபடக் கூறப்பட்டனவாம்.

[2] ஓர் அன்னப்பேடு எல்லா நலனும் நிரம்பிய தன் அரசவன்னத்தைச் சாராது இழிந்த காக்கையை அடைகின்றது என்? என்னும் இதனுல்,வசந்தசேனை குணம் உருவம் நிலைமை முதலியவற்ருன் மேம்பட்ட சாருதத்தனைவிட்டு அவ்வெல்லாவற்ருனும்இழிந்த சகாரனையடைய எவ்வாறு ஒருப்பட்டாள்? என்பது போதரும். இது பிறிதுமொழிதல் என்னும் அணி

கலிவிருத்தம்

239. [1]மானம் நோக்கி மதித்திலை முன்னர்நீ
யான பொன்விழைந் தன்னை வயப்படுஉ

வசந்தசேனை—இல்லை. (என்று [2]தலையை அசைக்கின்றாள்.)

விடன்—

[3]தான சீலந் தவிர்ந்த விலைமகள்
ஆன தாலிவன் தன்னை யடுத்தனை.

யான் நின்னை நோக்கி, "நல்லாய்! விருப்பொடு வெறுப்பு நாடி நீ சமமெனக் கோடி" (அங்கம் 1 செய்யுள் 29.) என்று [4]முன்னரே சொல்லினேன் அன்றோ?

வசந்தசேனை—வண்டியின் மாற்றத்தால் வந்தேன். அடைக்கலம் புகுகின்றேன்.

விடன்—அஞ்ச வேண்டா நிற்க. இவனை வஞ்சிப்பேன். (சகாரன் பக்கல் சார்ந்து) காணீன! இவ் வண்டியில் உண்மையாக அரக்கியே இருக்கின்றாள்.

---

[1] முன்னர் மானம் நோக்கி மதித்திலை-முன்னாளில் நின் பெருமை கருதித் தகுதியில்லாதவனாகிய சகாரனை மதித்தாயல்லை.

[2]தன் குரலைச் சகாரன் அறியலாகாதென்பது கருதி.

[3] விடன் வசந்தசேனையின் கருத்துணர்ந்தும் வேறு விதமாகப் பேச இயலாதவனாய் முன் கூறியதையே முடித்துரைக்கின்றான். தானசீலம் தவிர்ந்த-கொடைக்குணம் இல்லாத உலோபகுணம் மிக்க.

[4] சாருதத்தரை நோக்கி நீ செல்லும்பொழுதில்.

சகாரன்—ஐய! ஐய! [1]அரக்கி இருப்பாளாயின் ஏன் நின்னைத் திருடவில்லை? அன்றிக் கள்வன் இருப்பானாயின் ஏன் நின்னை உண்ணவில்லை?

விடன்—இவ்வாராய்ச்சியால் வரக்கடவதென்? இப்பூஞ்சோலையின் நிழல் வழியாகக் கால்களால் நடந்து உச்சயினி நகரத்தையடைவோமாயின் அதனால் என்ன குற்றம் நேரும்?

சகாரன்—அப்படி நடந்து செல்வதால் வரும் பயன் என்ன?

விடன்—இங்ஙனம் நடந்து செல்வோமாயின் உடற் பயிற்சி செய்ததுமாம். எருதுகளுக்கும் இளைப் பாற்றியதாகும்.

சகாரன்—அப்படியே ஆக. தாவரக! சேட்! வண்டியைக் கொண்டுவா. வேண்டாம். நில். நில். திருக் கோயில்களிலுள்ள தெய்வங்கள் முன்னிலையிலும் நகரத்துள்ள அந்தணர்களின் முன்னிலையிலும் கால்களாலே நடந்து செல்வேன். இல்லை. இல்லை. நகரத்து மக்கள் தூரத்தில் வரும்பொழுதே என்னைப் பார்த்து "இதோ அரசன் மைத்துனராகிய அப்பெருமான் வருகின்றார்" என்று சொல்லுவார்கள். ஆதலின் வண்டியில் ஏறியே போவேன்.

விடன்—(தனக்குள்) [2]நஞ்சை மருந்தாகச் செய்தல் இயலாதது ஒன்று. நிற்க. இங்ஙனங் கூறுவேன்.

---

[1] இத்தொடர்மொழிகளிலும் முன்போல விளைச்சொற்கள் மாறுபட்டன.

[2] கொடியவனை எவ்வுபாயத்தானும் திருத்த இயலாதென்பது கருத்து.

(வெளிப்படையில்) கானீனரே! இவள் வசந்தசேனை. தங்களைக் கூடுதற்கு வந்திருக்கின்றாள்.

வசந்தசேனை—[1]தீவினை ஒழிக. தீவினை ஒழிக.

சகாரன்—(மகிழ்ச்சியோடு) ஐய! ஐய! யான் சிறந்த புருடன்; மனிதன்; [2]வாசுதேவனை ஒப்பவனன்றோ!

விடன்—ஆம்.

சகாரன்—அப்படியானால் இதற்குமுன் பெறாத திரு என்னால் அடையப்பட்டதாகும். அக்காலத்தில் யான் இவளைக்கோபமூட்டினேன். இப்பொழுது இவள் திருவடிகளில் வீழ்ந்து அருள் பெறுவேன்.

விடன்—நன்றாகச் சொன்னீர்கள்.

சகாரன்—இதோ கால்களில் வீழ்கின்றேன். (என்று வசந்த சேனையின் பக்கல் எய்தி) [3]அம்மா! தாயே! என் விஞ்ஞாபனத்தைக் கேட்டல் வேண்டும்.

240. அகல்விழித் தூநகை யாளேநின்
கால்களில் யான் விழுவேன்

---

[1] "கூடுதற்கு வந்திருக்கின்றாள்" என்னும் இச்சொற் கேட்க நேர்ந்ததே தீவினை என்பது கருத்து.

[2] என் உயர்குணங்களுக்கு ஈடுபட்டுக் கூடுதற்கு வந்தாள் என்பது கருத்து.

[3] காம நுகர்ச்சிக்கு உரியவளை "அம்மா! தாயே!" என்பது அறிவின்மையாகும்.

[1]தொகுமுகிர் பத்தினுங் கைதலை
மேற்குவித்துத் தொழுவேன்
புகுமத நோய்வயப் பட்டுமுன்
யான்செய் பிழை பொறுப்பாய்
தகவுடைச் சீருட லாய்நின்
தொழும்பென் தலைக்கண்ணதே.

வசந்தசேனை—(சினத்தோடு) போ. தகுதியில்லாத சொற்களைப் பேசுகின்றாய். (என்று காலால் உதைக்கின்றாள்.)

சகாரன் (சினத்தோடு)

241. [2]அன்னை தாயர் அகமுற மோந்தது;
என்ன தேவரை யும்மிறைஞ் சாத்தலை
தன்னைக் காட்டிற் சவத்தை நரிமிதித்
தென்னக் காலினால் எற்றி யுதைத்தனை.

அடே! தாவரக! சேட! இவளை நீ எங்கிருந்து ஏற்றிக்கொண்டாய்?

சேடன்—பெருமானே! கிராமத்து வண்டிகளால் இராச வீதி தடைப்பட்டது. அப்பொழுது சாருதத்தரது உபவனத்தில் வண்டியை நிறுத்தி விட்டு அங்கே இறங்கி வண்டிச் சக்கரத்தைச் சுற்றித் தள்ளினேன். தள்ளித் திரும்புதற்குள் வண்டி மாறியதால் இவள் இதன்கண் ஏறினாள் என்று எண்ணுகின்றேன்.

---

[1] உகிர்-நகம். பத்து நகங்களையுமுடைய நின் கால்களில் என்பது கருத்து.

[2] அன்னை தாயர் கூறியது கூறல். சவத்தை நரி மிதித்தாற் போல என் தலையை நீ உதைத்தனை என்பதாம்.

சகாரன்—வண்டிமாற்றத்தால்தான் இவள் இங்கு வந்தாளோ? என்னைச் சேர்தறகில்லையா? அப்படியானால் என் வண்டியினின்றும் இறங்கு. இறங்கு. நீ வறுமை மிக்க வாணிகத் தொழிலாளனாகிய அச் சாருதத்தனைக் கூடுதற்குச் செல்லுகின்றாய். என் எருதுகளுக்குச் சுமையாயினை. ஆதலின் இறங்கு. இறங்கு. கருப்பதாசீ! இறங்கு. இறங்கு.

வசந்தசேனை—"அப்பெருமான் சாருதத்தரைக் கூடுதற்குச் செல்கின்றாய்" என்னும் இ∴து உண்மையே. இச் சொல்லால் யான் அலங்கரிக்கப்பட்டுள்ளேன். இப்பொழுது யாது வரினும் வருக.

சகாரன்—

242. [1]பலவிதமாம் இன்பவிளை யாடலிற்று
டனம்புரியும் பான்மை மிக்குக்
குலவுமொரு பதுமகமாங் குவளை மலர்க்
குழுவுடையிக் கரங்க ளாலே
வலமிகுவா லியின் மனைவி தன்னை முனஞ்
சடாயுபற்று மாறென் வண்டி
யிலகுறவீற் றிருக்குமெழி லுடன்மயிலே
நினைமயிர்தொட் டிழுப்பேன் இன்னே.

---

[1] தாடனம்புரிதல்-சுரதவிளையாட்டில் இன்ப மிகுதற் பொருட்டுக் கையால் தட்டுதல். நகங்களுக்குக் குவளை மலரை உவமித்தது பொருத்தமின்று. வாலியின் மனைவியைச் சடாயு இழுத்ததுபோல் என்பது இதிகாச விருத்தமான உவம வழு.

விடன்—

243. நற்குணங்கள் மிக்கவிந் நல்லார் கருங்குழலை
இக்கரங்க ளாலீர்க்க எண்ணுதல்—தக்கதன்றால்.
பூங்காவின் வல்லி பொதுளுந் தளிர்பறித்தல்
பாங்காமோ? கூடாது பார்.

ஆதலால் நீங்கள் எழுந்திருங்கள். யான் இவளை இறக்குகின்றேன். வசந்தசேனே! இறங்கு.

[வசந்தசேனை இறங்கி ஒரு தனியிடத்தில் நிற்கின்றாள்.]

சகாரன்—[தனக்குள்] என் சொற்களை அவமதித்தமையால் அப்பொழுது என்பால் மூட்டப்பட்ட சினத்தீ இப்பொழுது இவளுடைய இக் காலுதையால் மிகவும் கிளர்ந்து எரிகின்றது. ஆதலின் இப்பொழுது இவளைக் கொன்று விடுகின்றேன். நிற்க. விடனை நோக்கி இங்ஙனங் கூறுவேன். [வெளிப்படையில்] ஐய! ஐய!

245. [1]நீண்டகன்று தூங்கு நுனியும் நெருங்கிய சீர்
மாண்டவிழைபலவும்வாய்ந்ததுகில்வேண்டுதியேல்
நல்ல இறைச்சியுண்ண நாடுதியேல் சூசூவென்று
ஒல்லை மகிழ்ச்சி யுற.

---

[1] தூங்குதல்-நாலல், சீர்மாண்ட-அழகுமாட்சிமைப்பட்ட. சூ சூ என்று உண்ண என்க. சூ சூ என்பது உண்ணுங்கால் உண்டாம் சுவைநுகர்ச்சியின் அநுகரணவொலியாகும்.

கிழவி—என் குழந்தாய்! நீடு வாழ்க. (தனக்குள்) இவன்தான் அச் சாருதத்தன். என் மகள் தன் யௌவனத்தை [1]நல்லிடத்தில் வைத்துப் பயன்படுத்தினுள்.

நீதிபதி—ஐய! விலைமகள் தங்களுக்கு நட்புரிமையுடையளா?

(சாருதத்தன் நாணமுறுதலை அவிநயிக்கின்ருன்.)

சகாரன்—

286. [1]அச்சமே நாணமே யாதல் மேற்கொடு
பொச்சமா ரொழுக்கினை மறைப்பர் புல்லியோர்;
நச்சுபு பொருட்கொலை புரிந்த நம்பியின்று
அச்செயல் மறைத்திடத் துணிகின் ருனரோ.

செட்டியும் எழுத்தாளனும்—ஐய! சாருதத்தரே சொல்லுங்கள். நாணமுறல் வேண்டா. இது வழக்கைப் பற்றியதன்ருே?

சாருதத்தன்—(நாணத்தோடு) நீதிபதிகளே! விலைமகள் எனக்கு நட்புரிமையுடையாள் என்று யான் எங்

---

[1] எவ்வாற்ருனுஞ் சிறந்த இளைஞனுடைய சேர்க்கையால் பயன்படுத்தினுள் என்பது கருத்து.

[1] அச்சம் வரக்கடவ அரசதண்டத்தால் உண்டாவது; நாணம் தகாத செயலைச் செய்வதால் விளைவது. இவற்றுள், ஒன்றை மேற்கொண்டு அதனுலே புல்லியோர் தம் பொய்யொழுக்கத்தை மறைக்க முயல்வர். பொச்சம்-பொய். பொருள் நச்சுபு கொலை புரிந்த நம்பி என்க. வறியனுயிருந்தும் செல்வமுடையவனைப் போல் நடிக்கின்ருன் என்னும் இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற ''நம்பி'' என்ருன். அச் செயல் அக் கொலைச் செயல்.

ஙனம் இவ்வாறு கூறுவேன்? இந்நிகழ்ச்சியில் யௌவ னப் பருவமே குற்றமுடையதாகின்றது. [1]ஒழுக்கம் அங்ஙனமன்று.

நீதிபதி—

287. [2]இடையூறுடையதாம் இவ்வழக்கு நெஞ்சத்து
அடைநாணுரீ இக்கலக்கமற்றுத்-திடமேற்கொண்
டுண்மை யுரைத்திர் உயர்நீதிமன்றத்தில்
எண்மையுறு பொய்யேற்ப தின்று.

நாணமுறல் வேண்டா. வழக்கு நிமித்தம் கேட்கப் படுகின்றீர்கள்.

சாருதத்தன்—நீதிபதிகளே! [3]யாரோடு எனக்கு வழக்குளது?

சகாரன்—(செருக்கோடு) அடே! என்னோடு வழக் குண்டு.

சாருதத்தன்—[4]உன்னோடு எனக்கு வழக்கு நிகழ்தல் பொருத்தமின்றே!

---

[1] தூய ஒழுக்கமுடையவனையும் இளம்பருவம் காம வயப்படுத்தும் என்பது கருத்து.

[2] இடையூறுடையது என்றதால், இயைபுடைய வேறு பல காரியங்களையும் ஆராய்ந்து இவ்வழக்குத் தீர்க்கத் தக்க தென்பது கருத்து. பொய் ஏற்பதின்று-நாண முதலியவை களை வெளிக்காட்டி உண்மை மறைத்தலை இந் நீதிமன்றம் ஏற்றுக்கொள்ளமாட்டாது. சகாரன் பேச்சிற் காணப்பட்ட தைக்கொண்டு நீதிபதி இவ்வாறு கூறினன்.

[3] விலைமகளோடு நட்புக்கொண்ட விடயத்தில் வழக்கு எவ்வாறு உண்டாகும்? என்பதாம்.

[4] சிறிதும் தொடர்பில்லாத மிகவும் தீயொழுக்க முடைய உன்னோடு என்க.

சகாரன்—அடே! பெண்கொலையாள! பலவகை [1]இரத்தினுபரணங்களையுடைய சிறப்புமிக்கஅவ்வசந்த சேனையைக் கொன்றுவிட்டு இப்பொழுது மிக்க வஞ்சக முடையவனாய் அதனை மறைக்கின்றாய்.

சாருதத்தன்—பொருத்தமற்ற சொற்களைப் பேசுகின்றாய்.

நீதிபதி—ஐய! சாருதத்தரே! இவனோடு பேசல் வேண்டா. உண்மையைச் சொல்லுங்கள். விலைமகள் தங்களுக்கு நட்புரிமையுடையளா?

சாருதத்தன்—ஆம்.

நீதிபதி—ஐய! வசந்தசேனை எங்கே?

சாருதத்தன்—இல்லத்திற்குப் போயினாள்.

செட்டியும் எழுத்தாளனும்—[2]எவ்வாறு போயினாள்? [3]எப்பொழுது போயினாள்? எவனாற் பின்தொடரப் பட்டுச் சென்றாள்?

சாருதத்தன்—(தனக்குள்) என்னாற் காணப்படாமலே சென்றாள் என்று சொல்லுவேனா?

செட்டியும் எழுத்தாளனும்—ஐய! சொல்லுங்கள்.

---

[1] "இரத்தினுபரணங்களையுடைய" என்றது கொலைசெய்தற்கு நிமித்தத்தைப் புலப்படுத்தும்.

[2] ஊர்தியில் ஏறிச் சென்றாளா? அன்றி நடந்து சென்றாளா? என்பதாம்

[3] இரவிலா? பகலிலா? என்பதாம்.

சாருதத்தன் — இல்லத்திற்குச் சென்றாள். [1]வேறென்ன சொல்லுவேன்?

சகாரன் — எனது புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட்டத்தை அடைவித்துப் பொருள் காரணமாகக் கையால் நெரித்துக் கொன்றுவிட்டாய். அடே! இப்பொழுது இல்லத்திற்குச் சென்றாள் என்று கூறுகின்றாய்.

சாருதத்தன்—ஆ! ஆ! பொருத்தமின்றிப் புலம்புகின்றவனே.

288. [2]முகில்பொழி நீரால் நனைந்திலை காடை
முன்னிய சிறைநுனி யென்னத்
தகவில தாகி நடுவிடைக் கருமை
சான்றநின் முகமது பனிநாள்
அகமலர் முளரி யலரென வொளியை
யகன்றுசோர் வுற்றிடலானே

---

[1] தன்வீட்டிற்குச் சென்றவளைப்பற்றிச் சொல்லவேண்டியது யாதுளது என்பதாம்.

[2] "மழைநீரால் நனைந்திலை" என்றதனால் அகாலத்தில் புதிதாக நீராடி இருக்கின்றாய் என்பதும், அஃது ஐயுறத்தக்கதென்பதும் போதரும். புதிதாகக் கழுவப்பட்டிருத்தலால் முகத்தின் கருமை நன்கு விளங்குகின்றது என்பான், "காடைப் புள்ளின் நுனி இறகு போலக் கருமைசான்ற" தென்றான். அகம் மலர் முளரி அலர்-உள்ளிடம் மலர்ந்த தாமரைமலர். பனிக்காலத்து அலர்ந்த தாமரை மலர் வாட்டமுற்றிருக்கும். அதுபோல முகம், "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டும் முகம்" (திருக்குறள் 706) என்னும் பொருளுரைப்படி ஒளியகன்று சோர்வுற்றிருத்தலான் நீ கொண்டு வந்த வழக்கைப் பொய்யெனக் கூறும்படி புலப்படுத்தாநிற்கும் என்பதாம்.

புகருற என்பால் தொடர்ந்தநின் வழக்குப்
பொய்யெனப் புகல்தரப் படுமால்.

நீதிபதி—(முகத்தை ஒருபுறத்தே மறைத்துக் கொண்டு)

289. [1]வள்ளலாஞ் சாருதத்தர் மாட்டுக் குறையேறிட்டு
எள்ளல் மலையரசையீர்த்தசைத்தல்—கொள்ளவரு
காலைக்கை யாற்பிடித்தல் காலாற் கடல்கடத்தல்
போலுமால் என்னே பொருள்.

(வெளிப்படையில்) இவர் மாட்சி மிக்க சாருதத்த ரன்றோ! இத் தகாத காரியத்தை எங்ஙனஞ் செய்வார்? ("உயர்ந்த மூக்கொடு" (285-ஆம் செய்யுள்.) என்பதனைக் கூறுகின்றான.)

சகாரன்—ஈதென்ன! [2]ஒருதலைச் சார்பாக வழக்கை ஆராய்கின்றீர்கள்?

நீதிபதி—அறிவிலாய்! செல்.

290. [3]இழிவுடையாய் மறைப்பொருளை யிகழ்கின்றாய்
நின்னாவோ இற்று வீழாது

---

[1] வரு காலைக் கொள்ள-வருகின்ற காற்றைக் கொள்ள. சாருதத்தன்பாற் குறையேறிடல் இயலாது என்பதாம்.

[2] மனிதனைக் கருதிப் பேசுகின்றீர்களே யன்றி வழக்கின் இயல்பை ஆராய்கின்றீர்கள் இல்லை.

[3] மறைகளைப் பழித்தல் முதலியன செய்துழி நாஇற்று வீழ்தல் முதலியவை நேர்தல்போலச் சாருதத்தரைப் பழித்த வுடனே நீ தீங்கு எய்த வேண்டும். அங்ஙனம் எய்தாதிருத்தலே வியப்பிற்கு இடனாம் என்பதாம்.

ஒழிவில்லாக் கதிரவனை நண்பகலிற்
காண்கின்றாய் ஒளிபோ யொல்லை
விழியிழவாய் எரிநெருப்பிற் கையிடுதி
அதுகரிந்து வேவா தென்றும்
பழிபடையாச் சாருதத்தற் பழிக்கின்றாய்
நினதுடல்மண் பற்றா தென்னே!

மாட்சி மிக்க சாருதத்தர் இத்தகாத செயலை எங்ஙனஞ் செய்வார்?

291. [1]நீர்நிறை யளவில் எஞ்சிய தாக
நெடுங்கடல் தனைப்புரிந் திரப்போர்
யாரும்நன் குவப்பத் தனக்கென வின்றி
யாவையும் வழங்குவோன் எதிரில்
சீருடைப் பெரியோன் நல்லறம் எவைக்குஞ்
சிறந்ததோர் நிலயமே யன்னான்
பாரினிற் பொருளாற் கயவரிற் கொடிய
பாவத்தை யெங்ஙனம் புரிவான்?

கிழவி—[2]தீயோய்! முன்னர் அடைக்கலமாக வைக்கப்பட்ட பொற்பணியை இரவிற் கள்வர் கவர்ந்து செல்ல, அது குறித்துக் கடல் சூழ்ந்த் நிலவுலகத்திற் சிறந்த இரத்தினாவளியை அளித்த பெருந்தகையாளராகிய சாருதத்தனார், இப்பொழுது மிகவும் இழிந்த

---

[1] கடலை நீரளவில் எஞ்சியதாகப் புரிந்து என்றதனால் வாணிகத்தால் மிக்க இரத்தினம் முதலியவைகளைச் சாருதத்தன் ஈட்டினான் என்பதும், அதனாற் கடலில் நீரன்றி வேறு மணி முதலிய பொருள்கள் இல்லை என்பதும் போதரும். கயவரின்-கீழ்மக்களைப்போல. கொடியபாவம்-பெண்கொலை.

[2] "தீயோய்" என்று கூறியது சகாரனைக் குறித்து.

பொருள் காரணமாக இத் தகாத செயலை எங்ஙனஞ் செய்வார்? [1]ஆ! குழந்தாய்! என் மகளே! வருக-(என்று அழுகின்ருள்.)

நீதிபதி—ஐய! சாருதத்தரே! வசந்தசேனை கால்களால் நடந்து சென்ருளா? அன்றி வண்டியிலேறிச் சென்ருளா?

சாருதத்தன்—ஐய! யான் பார்க்கச் சென்றிலள். ஆதலின் கால்களால் நடந்து சென்ருள் என்ருவது வண்டியில் ஏறிச் சென்ருள் என்ருவது யான் அறிந்திலேன்.

(சினத்தோடு புகுந்து)

வீரகன்—

292. [2]காலுதையால் தாக்கக் கனமழிந்தேன் மற்றதனுல்
ஏலும் பெரும்பகைக்கு யானுடைந்து—சாலத்
தருதுயர மாகுஞ் சலதி படிந்தேற்கு
அரிதின் இரவகன்றதால்.

ஆதலின் [3]நீதிமன்றத்தை அடைகின்றேன்-(அடைந்து) பெரியோர்களுக்கு நலமுண்டாக.

நீதிபதி—ஓ! நகர்க்காவலாளர் தலைவனுகிய வீரகனு? வீரக! நீ எக்காரியத்தை முன்னிட்டு வந்தனை?

---

[1] வேறுவிதமாக மகள் கொலைப்பட்டிருக்கலாம்என்று உணர்ந்து "ஆ! குழந்தாய்" என்று அழுதாள்.

[2] இரவு துன்ப நுகர்ச்சியிலே நீங்கிற்று என்பதாம். பகையொழியும்வரை உறக்கம் வாராதென்பது கருத்து.

[3] பகைவனுகிய சந்தனகன் குற்றத்தை வெளிப்படுத்தற்கு.

வீரகன்—ஆ! விலங்கு முறிந்ததனுல் உண்டாகிய குழப்பத்தில் ஆரியகனைத் தேடுங்கால் மறைக்கப்பட்ட வண்டி போதலை அறிந்து ஐயமுற்று அதனை ஆராயும் பொழுது "அடே! உன்னுலும் பார்க்கப்பட்டது. என்னுலும் பார்க்கப்பட வேண்டும்" என்று யான் சொல்லிய அளவில் சந்தனகன் என்னும் படைத்தலைவன் தன் காலால் என்னை உதைத்து விட்டான். இதனைக் கேட்டுத் தாங்கள் நீதி செலுத்துதல் வேண்டும்.

நீதிபதி—நல்லோய்! அவ்வண்டி யாருடையது என்று அறிந்திருக்கின்ருயா?

வீரகன்—இச்சாருதத்தருடையது. "புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட்டத்தில் விளையாடி இன்புறுதற்கு வசந்தசேனை ஏற்றிக்கொண்டு போகப் படுகின்ருள்"[1] என்று வண்டியோட்டுபவன் கூறினன்.

சகாரன்—மீண்டும் பெரியோர்களே! கேட்டீர்களா?

நீதிபதி—

293. [2]மாசறு நிலவினுல் வயங்கு மிம்மதி
கூசலில் கோளின்வாய்க் கொள்ளப்பட்டதால்;

---

[1] இதனுல், சாருதத்தருடைய வண்டியிலேயே வசந்தசேனை புட்பகரண்டகத்தை அடைந்தனள் என்பது வெளிப்பட்டது.

[2] நிலவினுல் வயங்கும் இம்மதி என்பதும், தெளிவினுற் சிறக்கும் இப்புனல் என்பதும் கொடை முதலிய உயர்குணங்களால் விளங்கும் சாருதத்தனையும், கோளின்வாய்க் கொள்ளப்படுதலும் கரைவிழக் கலங்குதலும் தீயூழ் காரணமாகச் சகாரனுல் நேர்ந்த தீவினைப்பயனுற் பற்றப்படுதலையும் குறிப்பனவாம். இது பிறிது மொழிதல் என்னும் அலங்காரம்.

தேசுறு தெளிவிஞற் சிறக்கு மிப்புனல்
காசுறு கரைவிழக் கலங்கிற் றம்மவோ!

வீரக! பின்னர் இந்நீதிமன்றத்தில் நின் வழக்கை ஆராய்வோம். நீதிமன்றத்தின் வாயில் வெளியில் இதோ குதிரை நிற்கின்றது. அதன்கண் [1] ஏறிப் புட்ப கரண்டகம்என்னும் பழைய பூந்தோட்டத்தை யடைந்து அவ்விடத்தில் இறந்த ஒரு பெண்ணின் உடல் இருக்கின்றதா இல்லையா என்று பார்த்து வரல் வேண்டும்.

வீரகன்—பெருமான் கட்டளைப்படியே. (என்று போய்த் திரும்பி வந்து) அங்கே போயினேன். [2]நரி முதலிய கொடிய விலங்குகளாற் சிதைக்கப்படும் ஒரு பெண்ணின் உடலை யான் கண்டேன்.

செட்டியும் எழுத்தாளனும்—பெண்ணின் உடலென்று நீ எவ்வாறு அறிந்தனை?

---

[1] வெளிப்பட்டுவிடும் என்னும் அச்சத்தால் இறந்த பெண்ணுடலை யாரேனும் மறைத்துவிடக்கூடும் என்று நினைந்து விரைவிற் சென்று கண்டு வருமாறு குதிரையிலேறிச் செல்லும்படி கட்டளையிட்டான்.

[2] இதனுல் வசந்தசேனை கொலைப்பட்டிறந்தாள் என்பது ஐயமின்றிக் கூறப்பட்டதாயிற்று. இங்கு வீரகன் கண்டதாகக் கூறப்பட்ட பெண்ணுடல், எட்டாம் அங்கத்தில் புட்பகரண்டகத்திற் சகாரனைக் காண விடன் செல்லுங்கால் வழியிடை ஒரு மரத்தின் வீழ்ச்சியால் இறந்து கிடந்த பெண்ணின் உடலாகும். அவ்வுடலை விடன் கண்டு வருந்தியதும் தீ நிமித்தம் என்று எண்ணியதும் ஆங்குக் காண்க.

வீரகன்—(விலங்குகள் உண்டு) எஞ்சிய கூந்தலாலும் [1]கை கால்களாலும் யான் பெண்ணுடல் என்று கண்டேன்.

நீதிபதி—ஆ! உலக நிகழ்ச்சியின் மாறுபாட்டுத் தன்மை என்னே!

294 [2]ஈங்கிதனை யுய்த்துணர்ந்து
யான்தெளிய எண்ணுதொறும்
ஓங்குமிடை யூறே
யுளதாகும்—ஏங்கி
யுழக்குமதி சேற்றில்
உறும்ஆவைப் போல
வழக்கு நெறியரிய வாம்.

சாருதத்தன்—(தனக்குள்)

295. [3]அலர்தரத் தொடங்கும்போதே
யம்மலர் மதுவையுண்பான்

---

[1] கையில் வளையலும், காலிற் சிலம்பும் காணப்படுதல் ஈண்டுப் பெண்ணுடல் என்பதற்குரிய அடையாளங்களாகும்.

[2] இதனை-சாருதத்தனைப் பற்றிய இவ் வழக்கை. சேற்றில் உறும் ஆவைப்போல மதி ஏங்கி உழக்கும் என்க. ஆ-பசு. மதி-என் அறிவு. வழக்கு நெறிகள் புகுதற்கு அரியவாமென்க.

[3] ஒருமலர் முற்றும் மலராது சிறிது வாய்விண்ட அளவில் அச்சிறு வழியாகப் பல வண்டுகள் திரண்டு வீழ்தல்போல, ஒருவன் தீவினைப்பயன் நுகரத் தொடங்குங் காலத்தே புரை வழி சிறிது உண்டாய அவ்வளவிற் பல துன்பங்கள் நண்ணுதல் இயல்பென்க. வசந்தசேனையின்பால் வைத்த காதல் வடிவான சிறிய காரணத்தை முன்னிட்டுப் பெண் கொலையாகிய பெரும்பிழையுண்டாயிற்றென்பது கருத்து. ஈண்டு ஆற்று

பலவளி திரண்டு வீழும்
 பான்மைபோல் ஒருவன் தீமைப்
பலனுகர் காலத் தாங்குப்
 படுநெறி சிறிதுண் டேனும்
நலிதரு துன்பம் பல்ல
 நண்ணுத லியல்பே யன்றோ.

நீதிபதி—ஐய! சாருதத்தரே! [1]உண்மையைக் கூறல் வேண்டும்.

சாருதத்தன்—

296. [2]பிறர்நலத்தில் அழுக்காறும் பிறருயிரைக்
 கவரவுறும் பெட்பும் காம
மறநிலையும் இரக்கமிலா வன்னெஞ்சும்
 மிகவுளவிம் மனித னீங்குக்

---

வெள்ளம் அதன் கரையின் உடைப்பு மிகச் சிறியதாயினும் அதன் வழியாக வெளிப்பட்டு அதனைப் பெரிதாக்கிக் கரையை அழித்துவிடுதல்போல என்னும் உவமைத்தொனி புலனாதல் அறிக.

[1] இது வீரகன் சொற்களால் ஐயுற்றுக் கூறியது.

[2] குலப்பண்பு செயல் முதலியன இன்னவென்றறியப் படாதவன் என்பான் பொதுவாக "இம்மனிதன்" என்றான். ஒருவனைப் பற்றி நல்லோன் ஒருவன் குறைகூறினும் அதனை முதலிற் சான்று முதலிய அளவைகளால் ஆராய்தல் வேண்டும். பின்னர்க் குற்றவாளி எனக் கொள்ளப்பட்டவனை வினாதலும் வேண்டும். இது வழக்காராயும் முறை. இப்பொழுது சான்று முதலியன இல்லாமலே சகாரன் கூறிய பொய்யுரையை நம்பி என்னையே வினவுகின்றீர்கள் என்பான் 'அறநெறியின் இதனியல்பை ஆராய்தல் வேண்டாவோ? அமையுங்கொல்லோ?" என்றான் என்க.

குறையுடைய தன்பிறப்பின் குற்றத்தாற்
பொய்யுரையே கூறுகின்றான்
அறநெறியின் இதனியல்பை யாராய்தல்
வேண்டாவோ அமையுங் கொல்லோ.

297. [1]மலர்நிறை கொடியினை மலர்கொ ளாசையால்
உலைவுற வளைத்தலுக் கொருப்ப டாதயான்
குலவளிச் சிறையன குழலைப் பற்றியீர்த்து
அலறவோர் பெண்கொலை யாற்று கிற்பனே.

சகாரன்—ஆ! நீதிபதிகளே! கொடியவனாகிய சாருதத்தனை இன்னும் இருக்கையில் இருக்கச் செய்தலால் நீங்கள் வழக்கின் நிலையை ஒருதலைச் சார்பாகக் காண்பவர் ஆகின்றீர்கள் அன்றோ!

நீதிபதி—நன்மை மிக்க ஏவல! [2]இங்ஙனஞ் செய்.

(ஏவலன் அங்ஙனஞ் செய்கின்றான்.)

சாருதத்தன்—வழ்க்கை யாராயுங்கள். நீதிபதிகளே! வழக்கை ஆராயுங்கள். (என்று இருக்கையினின்றும் இறங்கி நிலத்தில் இருக்கின்றான் )

சகாரன்—(தனக்குள், மகிழ்ச்சியோடு நிருத்தஞ் செய்து) ஆ! ஆ! இதோ யான் செய்த பாவத்தை

[1] அறிவில்லாத பூங்கொடியை வளைப்பினும் அதற்குத் துன்பம் உண்டாம் என்று எண்ணும் இயல்பினனாகிய யான் ஒரு பெண்ணை அஞ்சி நடுங்கும்படி எவ்வாறு கொலை செய்யத் துணிவேன் என்பதாம். ‘‘குலவளிச்சிறையன குழல்’’ என்னும் இதனாற் சாருதத்தனது காதற்குறிப்புப் புலனாம்.

[2] இருக்கையை எடுத்துவிடு என்பது கருத்து.

மற்ருருவன் தலையில் ஏற்றிவிட்டேன். ஆதலின் எவ்இருக்கையிற் சாருதத்தன் இருந்தானே அதன்கண் யான் இருக்கின்றேன். (அங்ஙனமே செய்து வெளிப் படையில்) சாருதத்த! என்னைப் பார். பார். "என்னுற் கொல்லப்பட்டாள்" என்று சொல். சொல்.

சாருதத்தன்—ஓ! நீதிபதிகளே! (மேற்கூறிய "பிறர்கலத்தி லழுக்காறும்" என்னும் 296-ஆம் செய் யுளைப் படித்துப் பெருமூச்செறிதலோடு தனக்குள்.)

298. [1]நேசமார் மைத்தி ரேய
நேர்ந்ததென் கொலைக்கா ளானேன்
மாசில்பார்ப் பனியே தூய
மறையவர் மரபில் வந்தாய்
ஏசலில் உரோக சேன
எற்குறு துயரங் காணுய்
பேசுறு துன்பத் தாலே
பிணிப்புண்டு மகிழ்கின் ருயால்.

வசந்தசேனையின் செய்தியை அறிந்து வருதற்கும், பொன்வண்டி செய்தற்பொருட்டு உரோகசேனற்கு அவள் கொடுத்த அணிகலன்களைத் திருப்பிக் கொடுத்

---

[1] தனக்கு விளைந்த கேட்டினுல் துன்பம் உறுதற்குரிய நண்பன், மனைவி, புதல்வன் என்னும் இவர்களை நினைவுக்கு அணியராக்கி விளித்துக்கூறுகின்ருன். "மாசில்பார்ப்பனியே" என்றதனுல் நினக்குக் கணவற்பிரிவாகிய இத்தகைய தீங்கு நேர்தல் தக்கதன்று என்பது கருத்து. "துன்பத்தாலே பிணிப்புண்டு மகிழ்கின்ருய்" என்பது குழந்தைப்பருவத்தின் இயல்பு நோக்கிக் கூறியது.

தற்கும் மைத்திரேயனை யான் அவள்பால் அனுப்பினேன். ஏன் காலந் தாழ்க்கின்முன்.

(அதன்பின் அணிகலன்களை எடுத்துக்கொண்டு விதூடகன் வருகின்முன்.)

விதூடகன்—மாட்சி மிக்க சாருதத்தர் வசந்தசேனையின் அணிகலன்களை என்பால் தந்து "ஐய! மைத்திரேய! குழந்தை உரோகசேனனை வசந்தசேனை தன் அணிகலன்களால் அலங்கரித்து அவன் தாயின்பக்கல் போக்கினுள். அவள் அணிகலன் அவட்குக் கொடுக்கத்தக்கதே; நாம் பெறத்தக்கதன்று. ஆதலின் கொடுத்துவிடு" என்று கூறி வசந்தசேனையின் பக்கல் என்னை விடுத்தார். ஆதலின் வசந்தசேனையினிடத்தே செல்கின்றேன். (சுற்றி வந்து பார்த்து ஆகாயத்தை நோக்கி) என்ன? ஐயர் இரேபிலரா? ஓ! ஐய! இரேபிலரே! நீங்கள் எதற்காக மிகவும் வருத்தமுற்றவர்போற் காணப்படுகின்றீர்கள்? (கேட்டு) அன்பு மிக்க நண்பராகிய சாருதத்தர் நீதிமன்றத்துக்கு அழைக்கப் பட்டார் என்று சொல்லுகின்றீர்கள்? அப்படியாஞல் அது சிறிய காரியமாக இராது. (நினைவு கூர்ந்து) ஆதலின் வசந்தசேனையின்பாற் பின்னர்ச் செல்வேன். இப்பொழுது நீதிமன்றத்திற்குப் போகின்றேன். (சுற்றி வந்து பார்த்து) இதுதான் நீதிமன்றம். இதன்கட் புகுகின்றேன். (புகுந்து) நீதிபதிகளே! நலமுடையீரா! என் அன்புமிக்க நண்பர் எங்கே?

நீதிபதி—இதோ இருக்கின்முர்.

விதூடகன்—நண்பீர்! தங்களுக்குமங்கலமுண்டா?

சாருதத்தன்—இனி உண்டாதல் வேண்டும்.

விதூடகன்—தங்களுக்கு நலமுண்டோ?

சாருதத்தன்—இதுவும் இனி உண்டாதல் வேண்டும்.

விதூடகன்—ஓ! நண்பீர்! எதற்காக வருத்தமுற்றவர்போற் காணப்படுகின்றீர்கள்? எதன்பொருட்டு இங்கு அழைக்கப்பட்டீர்கள்?

சாருதத்தன்—நண்ப!

299. [1]மறுமையை யிகிலா வஞ்சனாகிய
தறுகணன் யானிறை நைதய லாளைமற்று
உறுமெழில் இரதியைச் சிறப்பின் ஒதுங்காற்
குறையுள செய்தியைக் கூறுவானிவன்.

விதூடகன்—என்ன? என்ன?

சாருதத்தன்—(செவியில்) இங்ஙனம். இங்ஙனம்.

விதூடகன்—எவன் இப்படிச் சொல்லுகின்றான்?

---

[1] "மறுமையை......தறுகணன் யான்" என்றது ஒரு குற்றமும் இல்லாத தன்னைப் பெண்கொலையாகிய பெருங் குற்றத்துக்கு ஆளாக்கிய சகாரன் கருத்தாகக்கொண்டு கூறியது. வசந்தசேனை பொதுவாகப் பெண்ணாயினும் உருவ நலத்தால் இரதியை ஒப்பாள் என்பான் "தையலாளைச் சிறப்பின் ஒதுங்கால் உறும்எழில் இரதியை" என்றான். குறையுள செய்தியாவது - கொன்றேன் என்பதாம். அக்கொடுஞ்சொல்லைத் தான் கூற விருப்பமில்லாதவனாய் "கூறுவானிவன்" எனச் சகாரனைச் சுட்டினான் என்பதாம்.

சாருதத்தன்—(குறிப்பிளுற் சகாரனைக் காட்டுகின்ருன்.) [1]இரங்கத்தக்க இவன் காரணமாக என் தீயூழ் என்னைக் கூறுகின்றது.

விதூடகன்—(முகத்தை ஒருபுறத்தே மறைத்துக் கொண்டு) "வீட்டுக்குச் சென்ருள்" என்று இங்ஙனம் ஏன் நீங்கள் சொல்லவில்லை.

சாருதத்தன்—யான் அப்படிக் கூறியும் என் நிலையின் தாழ்வுபற்றி (நீதிபதிகள்) அங்கீகரித்திலர்.

விதூடகன்—ஓ! ஓ! ஐயன்மீர்! எவர் புதிய மேன் மாளிகைகள், பண்டசாலைகள், மடங்கள், உய்யானங்கள், திருக்கோயில்கள், ஊருணி கிணறுகள், யூபங்கள் என்னும் இவற்ருல் உச்சயினீ நகரத்தை அலங்கரித்துள்ளாரோ, அத்தகைய பெருஞ்செல்வராக விளங்கிய சாருதத்தர் மிகவும் இழிந்தபொருள் காரணமாக இத்தகைய தகாத செயலைச் செய்யத் துணிவாரா? (சினத்தோடு) அடே! அடே! கன்னிகையின் மகனே! அரசன் மைத்துனனுகிய சமத்தானக! அடக்கமில்லாதவனே! சனங்களுக்குத் தீங்குசெய்பவனே! நகைத்து இகழ்தற்

---

[1] சகாரனை "இரங்கத்தக்கவன்" என்றது, அவன் செய்யும் தீவினை அவனைத் துன்பத்துக்கு ஆளாக்குமாதலின். அங்ஙனம் துன்புறும் நிலையிலுள்ளானை நோக்கி இரங்க வேண்டுமென்றிப் பகையாகக் கோடலாகாது என்பதை யுட்கொண்டு கூறியது. "தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற், றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை, எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று, பரிவதூஉஞ் சான்ருேர் கடன்" (நாலடியார். செய்—58) என்பது ஈண்டுக் கருதி யின்புறற்பாலது.

குரியவனே! பலவகை அணிகலன்களால் அலங்கரிக்கப் பட்ட குரங்கே! என் முன்னிலையிற் சொல். சொல். மலர்ந்த மாதவிக்கொடியையும் வளைத்து மலர் பறிப் பின் அங்ஙனம் வளைத்தலால் ஓர் அமயம் அதன் தளிர் உதிர்ந்துவிடுமோ என்னும் ஐயத்தால் அக்காரியத்தைச் செய்தற்கும் மனம் ஒருப்படாத என் இனிய நண்பரா கிய அச் சாருதத்தர் இம்மை மறுமையாகிய இரண்டு உலகத்திற்கும் மாறுபட்ட இத்தகைய தகாத செயலை எங்ஙனஞ் செய்வார்? நில். அடே! குட்டினிமகனே! நில். உன் மனம் போல் வளைந்த இம்மரத் தடியால் உன் தலையை அடித்துப் பல துண்டுகளாகச் சிதறச் செய் வேன்.

சகாரன்—(சினத்தோடு) கேளுங்கள். கேளுங்கள். பெரியோர்களே! எனக்கு [1]விவாதமோ வழக்கோ சாரு தத்தனோடுதான் உண்டு. அங்ஙனம் இருக்கக் காக்கைக் கால் போன்ற தலையினையுடைய இவன் எதற்காக என் தலையை அடித்துப் பல துண்டுகளாகச் செய்யவேண் டும்? நிற்க. அடே! தேவடியாள் மகனே! துட்டப் பையலே!

(விதூடகன் மரத்தடியைக் தூக்கிக்கொண்டு முன் கூறியபடி கூறுகின்றான். சகாரன் சினத்தோடு எழுந்து அடிக்கின்றான். விதூடகன் எதிர்த்து அடிக் கின்றான். இருவரும் ஒருவரை ஒருவர் அடிக்கின்றனர். விதூடகனது கக்கத்தினின்றும் அணிகலன்கள் வீழ் கின்றன.)

---

[1] ஒன்றுக்கொன்று முரண்பட்ட உரைகளை யுடையது விவாதமாகும். வழக்கின் இயல்பு மேற்கூறப்பட்டது.

சகாரன்—(அவ்வணிகலன்களை எடுத்துப் பார்த்து [1]அச்சத்தோடு) பாருங்கள். பாருங்கள். பெரியோர்களே! இவைதாம் அந்த எளியவளுடைய ஆபரணங்கள். (சாருதத்தனைக் குறிப்பிட்டு) இச்சிறுபொருள் காரணமாகவே அவள் கொல்லப்பட்டாள்.

(அதிகாரிகள் எல்லோரும் [2]தலையைக் கவிழ்த்துக் கொண்டனர்.)

சாருதத்தன்—(முகத்தை ஒருபுறத்தே மறைத்துக் கொண்டு)

300. [3]ஊறுசா லிற்றைப் போழ்திங்கு
உள்ளவர் காண என்தன்
மாறுபா டாய வூழின்
வலியினுன் மறைவின் வீழ்ந்த

---

[1] இருவரும் கைகலந்து கலகம் விளைக்குங்கால் விழுந்த அணிகலன்கள் இன்னாரிடத்தினின்றும் வீழ்ந்தன என்பதை நீதிமன்றத்தார் அறியாமல், தான் அவற்றை எடுத்தது பற்றித் தன்பால் அக்குற்றத்தை யேறிடவுங்கூடும் என்னும் ஐயமே சகாரனுக்கு அச்சமுண்டாதற்குக் காரணமாகும்.

[2] எல்லாவகையானும் வழக்காராய்ச்சி, சாருதத்தனுக்கு மாறாகவே முடிகின்றதெனக்கண்டு சாருதத்தன்பால் நன்மதிப்புடைய அதிகாரிகள் நாணத்தால் தலையைக் கவிழ்த்தனர் என்பதாம்.

[3] இங்கு உள்ளவர் என்றது நீதிபதி முதலியோரை. மாறுபாடு ஆயவூழ்-தீயூழ். வீழ்ந்த இவ்வணிகள் எனவும் விளங்கும் இவ்வணிகள் எனவும் கூட்டுக. பீழை-மரணத் துன்பம்.

வீறுசா லொளியான் மிக்கு
விளங்குமிவ் வணிக ளெல்லாம்
பேறிலா எளியேன் தன்னைப்
பிழையுள் வீழ்தத வம்மா.

விதூடகன்—ஓ! ஏன் [1]உண்மை நிகழ்ச்சியைத் தெரிவிக்கக் கூடாது?

சாருதத்தன்—நண்ப!

301. [2]உண்மையின் இயல்பைத் தேறி
உணர்கிலா மையினால் என்றும்
வெண்மைசால் அரசர் கண்கள்
விறலில வாத மன்றே.
உண்மையை யுரைப்போர்க் கிந்நாள்
உறுவதோ எளிமை யிந்த
எண்மையால் இறத்தல் அந்தோ
இழிவிழி வெந்த ஞான்றும்.

நீதிபதி—துன்பம்! ஆ! துன்பம்!

302 [3]வாம மார்வலி சுன்றி மருங்கணை
பூம கன்பகை பற்றிய பொன்னற்குத்

---

[1] உண்மைநிகழ்ச்சியாவது, இவ்வணிகலன்கள் வசந்த சேனையால் உரோகசேனனுக்குக் கொடுக்கப்பட்டுப் பின்னர் அவளுக்கே திருப்பிக் கொடுக்கும் நிமித்தம் கொண்டுவரப் பட்டனவென்பது.

[2] வெண்மை—அறிவுமுதிராமை. விறல்-உண்மையுணரும் ஆற்றல். எண்மை-எளிமை.

[3] வாமம் ஆர் வலி-ஒளியாகிய நிறைந்தவன்மை கோள் ஒளியை ரச்மி என்று சோதிடநூலார் கூறுவர். பூமகன்-பூதேவியின் மகனாகிய செவ்வாய். பொன்னன்—வியாழன்.

தூம கேதுவோர் பக்கல் துறுத்தென
ஏம மார்கலன் ஈதொன்று வந்ததால்.

செட்டியும் எழுத்தாளனும்—(அணிகலன்களைக் கண்டு வசந்தசேனையின் தாயை நோக்கி) பெருமாட்டி! இப் பொற்பணி அதுதானா? இல்லையா? என்பதை ஊன்றிப் பார்த்தல் வேண்டும்.

கிழவி—(பார்த்து) இஃது அதனை ஒத்திருக்கின்றது. [1]அஃதன்று.

சகாரன்—ஆம். விருத்தகுட்டினி! [2]கண்களாற் சொல்லி வாக்கினால் மறைத்துவிட்டாய்.

கிழவி—தீயவனே! போ.

செட்டியும் எழுத்தாளனும்—இஃது அதுதானா? இல்லையா? என்பதைத் தெளிவாகச் சொல்.

---

வலிகுன்றிப் பற்றிய பொன்னன் என்க. தூமகேது-உபக் கோள்களிலொன்று. துறுத்தல்-நெருக்குதல். முன்னரே வலியிழந்து நிற்கும் பொன்னற்குத் தன் மருங்கு அணைந்த செவ்வாயின் பகைமையால் ஒருபாற் கேடு நேர்ந்திருக்குங் கால் மற்றொருபால் தூமகேதுவின் நெருக்கம் நேர்ந்து துன்புறுத்தல்போல, முன்னரே பொருள்வலியிழந்து வறியனாயிருக்கும் நல்லோனாகிய சாருதத்தற்குச் சகாரனது பகைமை ஒருபாற் கேடு விளைக்க மற்றொருபால் இவ்வணிகலன் வெளிப்பட்டுத் துன்புறுத்துகின்றது என்பது கருத்து.

[1] "அஃதன்று" என்றது சாருதத்தன்பாலுள்ள கருணையாற் கூறப்பட்டது.

[2] கண்டவுடன் அதுவே இஃதென்று நினைந்தது கண்களின் குறிப்பால் உணரப்பட்டது என்பதாம்.

கிழவி—ஐய! [1]சிற்பியின் திறமையாற் கண்ணைக் கவர்கின்றது. ஆனால் அஃதன்று.

நீதிபதி—அம்மா! இவ்வணிகலன்களைக் கண்டிருக்கின்றாயா?

கிழவி—இல்லை. இல்லை. கண்டதில்லை என்றே சொல்லுகின்றேன். அன்றி ஒருசமயம் சிற்பியினால் அதுபோல் அமைக்கப்பட்டதாகவும் இருக்கலாம்.

நீதிபதி—செட்டியாரே பார்க்க வேண்டும்.

503. [2]ஒருபொருள்போற் பிறபொருள்கள்
உளபலமற் றணிகலன்கள்
உருவமைதி குணஞ்செய்கை
யொத்தனமுற் கண்டியற்றும்
அரியதிறல் சிற்பிகள்பா
லமைந்துளதா தலிற்பெரிதும்
பொருவுநிலை கைவன்மை
புலப்படுத்த வெளிப்படுமால்.

செட்டியும் எழுத்தாளனும்—[3]இவ அணிகலன்கள் பெருமான் சாருதத்தர் உடையனவா?

சாருதத்தன்—இல்லை. இல்லை.

---

[1] "கண்களாற்சொல்லி" என்னும் சகாரன் கூற்றுக்கு ஏதுக் கூறியவாறு.

[2] பிறபொருள்கள் பலவுள என்க. பொருவுநிலை-ஒப்புத் தன்மை.

[3] இது கிழவியைநோக்கிக் கேட்டது.

செட்டியும் எழுத்தாளனும்—அப்படியானல் யார்க்கு உரியவை?

சாருதத்தன்—இதோ இருக்கின்ற பெருமாட்டியின் புதல்விக்கு உரியவை.

செட்டியும் எழுத்தாளனும்— அவளிடத்தினின்றும் இவ் வணிகலன்கள் எப்படிப் பிரிவெய்தின?

சாருதத்தன்—[1]இவ்விதம் பிரிவெய்தின. இதுண்மை.

செட்டியும் எழுத்தாளனும்—ஐய! சாருதத்தரே! இந் நீதிமன்றத்தில் உண்மை கூறுதல் வேண்டும். பார்க்க. பார்க்க.

304. [2]உண்மைசொல இன்பம் உளதாகுந் தீவினைகள்
உண்மைசொல எய்தா வுறுதியே—உண்மை
இரண்டக் கரத்தானும் ஈங்கிதனைப் பொய்யான்
மருண்டு மறையற்க மன்.

---

[1] இவ்விதம்-வசந்தசேனையினிடத்தினின்றும் கவர்ந்ததாக நீங்கள் எண்ணுகின்றபடியே. நிகழ்ந்தவாறு கூறின் ஏற்றுக்கொள்ளாரெனக்கருதி உண்மையைக் கூறிஞனல்லன் என்க. இவ்விதம் என்பதற்கு உரோகசேனனுக்குச் சிறுதேர் அமைத்துக்கொள்ள வசந்தசேனையாற் கொடுக்கப் பட்ட செய்தியைப்பற்றியது என்று பொருள்கொள்வாரும் உளர்.

[2] அக்கரம்-எழுத்து. பொருணிலையால் என்றும் அழிவில்லாததும் சொன்னிலையால் ஒற்ருெழித்தெண்ணுங்கால் இரண்டெழுத்தானயதும் ஆகிய உண்மையை அழிதன்மாலையதும் ஒரெழுத்தானயதுமாகிய பொய்யான் மறையற்க என்பது கருத்து. அக்கரம் என்பது ஈண்டு எழுத்து அழி

சாருதத்தன்—[1]அணிகலன்களை அணிகலன்களாகக் காண்கின்றேன் அல்லேன். [2]என் இல்லத்தினின்றும் கொண்டுவரப்பட்டவைகளாகமாத்திரம் அறிகின்றேன்.

சகாரன்-உய்யானத்துட் புகுவித்து முதலிற் கொன்ருய். இப்பொழுது மிக்க வஞ்சகத்தால் மறைக்கின்ருய்.

நீதிபதி—ஐய! சாருதத்தரே! உண்மையைக் கூறல் வேண்டும்.

305. [3]நல்லெழில் வாய்ந்தநின் மெல்லிய உடலில்
நின்னைக் காக்க உன்னுமெம் மனத்தொடு
பொல்லாக் கசையடி பொருக்கென
வீழுமீ துறுதி தாழா தைய.

சாருதத்தன்—

306. [4]பாவமோர் சிறிது மில்லாப்
பழியறு குலத்தில் வந்தேன்

---

வின்மை என்னும் பொருள்களைப் புலப்படுத்து நிற்றலுங் கருதற்பாலது. மன்-அசைநிலை.

[1] அவை அவாவப்படும் பொருள்களாக என் கண்களுக்குப் புலப்பட்டில என்பது கருத்து.

[2] புட்பகரண்டகத்தினின்றும் அடையப்பட்டில என்பது கருத்து.

[3] உண்மையை வெளிப்படுத்துதற்பொருட்டு இக்கசையடித் தண்டம் விதிக்கப்படும் என்பது கருத்து.

[4] குற்றம் குணங்களை உணர்ந்து ஒறுத்தல் விடுதல் செய்தற்குரிய பொறுப்புத் தங்கள்பாலதே. அத்தகைய தங்கள் கருத்து மாறுபடுமாயின் எளியேனுகிய யான் செயற்பாலதென்? என்பதாம்.

பாவமென் பால்வந் தெங்ஙன்
பற்றுநீ ரென்மாட் டிந்தப்
பாவமுண் டெனவுள் ளத்தாற்
பார்த்திரேற் கனவி லேனும்
பாவமொன் றில்லேன் செய்யப்
படுவதொன் றியாதே யம்ம!

(தனக்குள்) வசந்தசேனையைப் பிரிந்த யான் இனி உயிர் வாழ்தலாற் பயனென்? (வெளிப்படையில்) ஓ! [1]பலவாறு கூறுதலென்?

307. [2]மறுமையை யறிகிலா வஞ்ச னாகிய
தறுகணன் யானொரு தைய லாளைமற்று
உறுமெழில் நங்கையைச் சிறப்பின் ஓதுங்காற்
குறையுள செய்தியைக் கூறு வானிவன்.

சகாரன்—அவள் கொல்லப்பட்டாள். [3]அடே! "யான் கொன்றேன்" என்று நீயும் சொல்.

சார்ருதத்தன்—[4]நீயே சொல்லிவிட்டாயே.

---

[1] கொடியவனாகிய சகாரனது கூற்றை நம்பி ஆராயாது சமத்தப்பட்ட குற்றத்தையுடையவனாகிய யான் உண்மையை வெளிப்படுத்தற்கு முயறல் பயனில்லாதது என்பது கருத்து.

[2] 299-ஆவது செய்யுளே இது. இதன் குறிப்புக்களை ஆண்டுக் காண்க. நங்கை-என்பதொன்றே வேறாகவுள்ளது. நங்கை—பெண்ணிற் சிறந்தாள்.

[3] மேற்செய்யுளில் உள்ள "நங்கையை" என்னும் சொல்லை முடித்துக்காட்டுவான் "யான் கொன்றேன்" என்றுசொல் என்றான் என்க.

[4] இந்நிகழ்ச்சியில் யான் கூறற்பாலது யாதுமின்று. நின் சொல்லே அதனை உறுதிப்படுத்தும். "யான்கொன்றேன்"

சகாரன்—கேளுங்கள். கேளுங்கள். பெரியோர்களே. இவனே கொன்றான். இவனாலேயே ஐயம் நீங்கிற்று. வறியவனாகிய இச்சாருதத்தனுக்கு [1]உடலைப் பற்றிய தண்டம் விதித்தல் வேண்டும்.

நீதிபதி—ஏவல! சகாரன் சொல்லியபடி செய். ஓ! சேவகர்களே! இச்சாருதத்தனைப் பிடியுங்கள்.

(சேவகர்கள் பிடிக்கின்றார்கள்.)

கிழவி—அருள்செய்தல் வேண்டும் பெரியோர்களே! அருள்செய்தல் வேண்டும். ("முன்னர் அடைக்கலமாக வைக்கப்பட்ட" (399-ஆவது பக்கம்) என்பது முதலிய சொற்களை மேற்கூறியபடி கூறுகின்றாள்.) என் மகள் கொலை செல்யப்பட்டு இறந்தாளாயின் இறக்க. என் பொருட்டு இவர் நீண்ட வாணாளையுடையவராக உயிர் வாழ்க. அன்றியும் வழக்கு வாதி பிரதிவாதிகளைச் சார்ந்ததாகும். யான் வாதியாவேன். இவரை விடுதலை செய்யுங்கள்.

சகாரன்—போ. கருப்பதாசீ! போ. இவ்வழக்கினால் உனக்கு என்ன?

நீதிபதி—அம்மா! போகலாம். ஓ! சேவகர்களே! இவளை வெளிப்படுத்துங்கள்.

கிழவி—ஆ! மகனே! ஆ! குழந்தாய்! (என்று அழுதுகொண்டு வெளியே செல்கின்றாள்.)

---

என்று அநுவாதமாகக்கொண்டு நீ கூறினும் அச்சொல்லே உண்மையாக நீ கொன்றாயென்பதைக் குறிப்பிற் புலப்படுத்தும் என்பதாம்,

[1] உடலைப்பற்றிய தண்டம்-மரணதண்டனை.

சகாரன்—( தனக்குள்) என் [1]தகுதிக்கு ஏற்றதை யான் இவனுக்குச் செய்துவிட்டேன். இப்பொழுது போகின்றேன். (என்று போகின்றான்.)

நீதிபதி—ஐய! சாருதத்தரே! வழக்கைத் துணியும் விடயத்தில் எங்களுக்கு அதிகாரம் உண்டு. [2]எஞ்சிய காரியம் அரசனைச் சார்ந்தது. [3]ஆயினும் ஏவல! பாலகன் என்னும் அரசற்குப் பின் வருமாறு [4]அறிவித்தல் வேண்டும்.

308. [5]குற்றமிழைத் தானிவனே
யாயினுமென் கொல்லுதற்கு
உற்ற மறையோன்
உரியனலன்—பெற்றியினல்
என்று மனுவுரைத்தான்
ஈங்கிவனை நங்நாட்டி
னின்றுபொரு ளோடகற்றல் நேர்.

---

[1] தகுதி-அரசன் மைத்துனனும்நிலே. என்னோடு பகைத்து உயிர் வாழ்பவன் யாவன் ? என்பது கருத்து.

[2] எஞ்சியகாரியமாவது தண்டம் இன்னதென்று கட்டளையிடுதல்.

[3] தண்டித்தற்கு உரிய அதிகாரம் எங்களுக்கு இல்லையாயினும் என்றவாறு.

[4] பொருத்தமானதொன்றை அறிவிப்பது குற்றமாகாது என்பதாம்.

[5] பெற்றி-தன்மை, பிராமணத்தன்மை யுண்மையால் குற்றம் புரிந்த பார்ப்பான் கொலைக்குரியன் ஆகான் என்று மனு கூறினன். ஆதலின், இவனை நம் நாட்டினின்றும் உரிய பொருளோடு வெளிப்படுத்தலே நேரிதாம் என்க. இதுவே இவற்குச் செய்யத் தக்க தண்டமாகும் என்பது கருத்து.

ஏவலன்—பெருமான் கட்டளைப்படியே (என்று வெளியேபோய் மீண்டும் வந்து கண்ணீர் வடிய) ஐயன்மீர்! அரசர் பாற்சென்றேன். பாலகன் என்னும் அரசர், "மிகவும் இழிந்த பொருள் காரணமாக வசந்தசேனையைக் கொன்ற அச்சாருதத்தன் கழுத்தில் அவ்வணிகலன்களையேகட்டிக் குற்றம் வெளிப்படப் பறைசாற்றுவித்து அவனைத் தென்பாலுள்ள சுடலைக்குக் கொண்டுபோய்க் கழுவில் ஏற்றிக் கொன்றுவிடுங்கள்" என்று கூறுகின்றார். வேறு எவனொருவன் இத்தகாத செயலைச் செய்கின்றானோ அவன் இவ்வவமானத்தோடுங் கூடிய தண்டத்துக்கு ஆளாவான்.

சாருதத்தன்—ஆ! அரசன் பாலகன் ஆராய்ச்சியில்லாத செய்கையுடையவன் ஆகின்றான். ஆம்.

309. [1]இத்தகை வழக்கெனு மெரியில் தீச்செயல்
மெத்திய அமைச்சரால் வீழ்த்தப் பட்டுளார்
மத்தமா ரரசர்கள் வழீஇய தன்மையால்
ஒத்ததோர் கீழ்நிலை யுறுத லுண்மையே.

---

[1] இத்தகை-நுணுகியாராய்தற்குரிய. மெத்திய-மிகுந்த. மத்தம்-மயக்கம். அரசர்கள் வீழ்த்தப்பட்டுளார் எனவும், அரசர்கள் வழீஇய தன்மையால் உறுதலுண்மை யெனவும் இயைக்க. அரசியல் பிழைத்தோர் இம்மையிற் பழியையும் மறுமையில் நரகத்தையும் எய்துவர் என்பதைப் பின்வரும் மனுமொழியானும் உணர்க. "ஒறுத்தற்குரியரல்லாதாரை யொறுத்தலையும், ஒறுத்தற்குரியாரை யொறாதுவிடுதலையும் செய்யும் அரசன் இம்மையில் மிக்க பழியையும் மறுமையில் நரகத்துன்பத்தையும் எய்துவன்" (மநு அத்-8. சு-128)

310. [1]மன்னவ னுணையை மாசு றுத்தியே
பன்னுவெண் காக்கைமேற் பறப்ப தாச்சொலும்
இன்னவன் கொடியரால் இயைந்த நல்லறம்
அன்னவ ரழிந்தனர் அழிகின் றூர்பலர்.

---

[1] அரசனது செங்கோலை மாசுறச்செய்து "வெள்ளைக் காக்கை பறக்கின்றது" என்பது போன்ற பொய்யுரைகளைக் கூறும் இச் சகாரனைப்போன்ற கொடியவர்களால், அறக் கடவுள் போன்ற பெரியார் பலர் அழிந்தனர்; பலர் அழி கின்றனர் என்பதாம். அரசன் உண்மை யுணர்ச்சியிற் சிறி துந் தலைப்படாமையால் அவன் அறிவின்மை மிகப் பெரிய தென்பது கருத்து.

இனி, இத்தகைய தீயொழுக்கமுடையவன் இயல்பை யறியாமல் இவனை நாட்டு மக்களுக்குரிய நன்மை தீமைகளிற் றலைப்படும் அதிகாரபதவியில் நியமனஞ் செய்தது முதலா வது அரசனது குற்றமாகும். பின்னர், இன்னோரன்ன தீய வர் கூற்றில் நம்பிக்கை வைத்து, நல்லொழுக்கமுடையா ரியல்பை மதியாமல் அவர்பாற் குற்றந்துணிதல் நீதிபதி களின் பிழையாகும். வசந்தசேனையைக் கொலைசெய்யுங் கால் "யான் இவனைக் கண்டேன்" என்று சகாரனாலும் கூறப்பட்டிலது. "வசந்தசேனை வண்டியில் ஏறியிருக்கின்றாள்" என்று சந்தனகன்கூற, "அதனை நேரிற்காணும்விருப்பினனாய் அவ் வண்டியில் ஏறிய என்னை அச் சந்தனகன் அடித்து வீழ்த்தினான்" என்னும் வீரகன் சொல்லால் அவனுக்குச் சந்தனகன் உரையில் அவநம்பிக்கையுண்டாயிற்று என்பதை உய்த்துணர்ந்துகொள்ளாமல், வசந்தசேனை சாருதத்தன் வண்டியில் ஏறிச் சென்றாள் என்றும் துணியப்பட்டது. இறந்து கிடக்கும் ஒரு பெண்ணுடலைக் கண்டு கூறிய அளவில் வசந்தசேனையின் கொலையும் துணியப்பட்டது. "கொன்று விட்டான்; யான் இல்லை" என்று சகாரன் முதலிற் கூறிப்

நண்ப! மைத்திரேய! போ. தாய்க்கு இறுதியாகிய வணக்கத்தை யான் கூறியதாகச் சொல். என் புதல்வன் உரோகசேனனையும் காப்பாற்று.

விதூடகன்—[1]வேர் அறுக்கப்படின் மரம் எங்ஙனம் காப்பாற்றப்படும்?

சாருதத்தன்—அங்ஙனமன்று.

311\. விண்ணுல கெய்தினர் விளங்கு நல்லுடற்
புண்ணிய வுருவமே புதல்வ னுதலின்
எண்ணியென் பாற்புரி யினிய நட்பினை
நண்ணிய உரோகசே னற்கு நாட்டுதி.

விதூடகன்—ஓ! நண்பரீர்! தங்களுக்கு இனிய நண்பனாகிய யான் தங்களைப் பிரிந்தபின் உயிரைத் தாங்குவேனா?

சாருதத்தன்—[2]உரோகசேனனையும் பார்த்துக் கொள்.

---

பின் வேறு விதமாக அச்சொல்லை மாற்றியதில் ஐயப்பாடும் ஏற்பட்டிலது. இவை முதலிய எல்லாம் நீதிபதிகளால் ஆராய்ந்தறியற்பாலன. இவ்வெல்லாப் பிழைகளும் அரசனையே சார்வனவாம். இது கருதியே முதல் அங்கத்தில் "வழக்கின் மாறுந் தன்மையும்" (செய்யுள்-5) என்று கூறப்பட்டது.

[1] சாருதத்தனை வேராகவும் புதல்வனை மரமாகவும் கருதினான் என்பதாம்.

[2] யான் இல்லாதபொழுது நீயே அவனுக்குப் பற்றுக்கோடாவாய் என்பது கருத்து. முதனூலில் "தர்சய" என்றுள்ளது. இது பார் என்னும் பொருளோடு காட்டு என்னும் பொருளும் தருதலால் "உரோகசேனனையும் கொண்டு வந்து காட்டு" என்றும் கொள்ளலாம். பின்னர் 10-ஆம் அங்கத்தில் உரோகசேனனின் சந்திப்புக் கூறப்படுதலின்.

விதூடகன்—ஆம். பொருத்தமே.

நீதிபதி—நன்மை மிக்க ஏவல! இப்பையலைவெளிப் படுத்து.

[ஏவலன் அங்ஙனமே செய்கின்றான்.]

நீதிபதி—ஓ! யார் இங்கே? கொலையாளிகளுக்கு அரசனது ஆணையைத் தெரிவி.

[சாருதத்தனை விட்டு நீதிபதி முதலிய அதிகாரிகள் எல்லாரும் போய்விடுகின்றனர்.]

ஏவலன்—ஐயன் இங்கே வருக.

சாருதத்தன்—(துன்பத்தோடு "நேசமார் மைத்திரேய" என்னும் 298–ஆம் செய்யுளைக் கூறுகின்றான். [1] ஆகாயத்தை நோக்கி.)

312. [2]என்னைப் பற்றிய இவ்வழக் கியலை
முன்னித் தீர்க்க மொழிநீர் துலைநஞ்சு
எரியெனு மிவற்றை யெண்ணு தரிய
இவ்வுடல் துணிபடற் கியையும்வெவ் வாளென

---

[1] அரசன் அரங்கத்தில் வெளிப்பட்டிலனாயினும் அவனைக் குறித்துக் கூறியது.

[2] சான்று முதலிய ஆராய்ச்சிகளால் துணிதற்குஅரிய வழக்கு, நீர் துலை நஞ்சு எரி என்னும் தெய்விகங்களால் ஆராயத்தக்கதாகும். ஆராய்தல்: நீரின் முழுகல், துலையில் ஏறுதல், பாம்புப்பற்றிற் கையிடல், தீயிற்புகுதல் என்னும் இவற்றால் ஏதமுறாமை தெரிதல். அரிய இவ்வுடல்-கிடைத்தற்கரிய எனது இவ்வுடல். உடல் துணிபடற்கு வெவ்வாள் இயையுமெனத் துணிந்து பார்ப்பனனும் என்னைக்கொல்

வெளவிய நின்சிறு மதிகொடு துணிந்தோ
பகையுரை பற்றியோ பார்ப்பன ஞமெனத்
தகவறக் கொல்லுதி சாற்றுமிச் செயலால்
அடுநர கிடைநின் குடிவழி மக்களொடு
கடிதின் வீழ்ந்து படுதுய ருறுகவே.

[1] இதோ வந்துவிட்டேன்.

[எல்லோரும் போகின்றனர்.]

"வழக்காராய்ச்சி" என்னும்

## ஒன்பதாம் அங்கம் முற்றிற்று.

லுதியென இயைக்க. துணிந்தோ என்பதிலுள்ள ஓகாரத்தைக் கொடு என்பதனோடு கூட்டி, நின் சிறுமதிகொண்டோ பகையுரைபற்றியோ துணிந்தெனக் கூட்டுக. வெளவிய-தீயொழுக்கமுடைய அமைச்சர் முதலியோராற் கவரப்பட்ட. தகவு அற-நடுவுநிலை ஒழிய.

[1] ஏவலனை நோக்கிக் கூறியது.

## [1]பத்தாம் அங்கம்

## தொகுத்துரைத்தல்

([2]சண்டாளர்கள் இருவர்பின் தொடரச்
சாருதத்தன் வருகின்றான்.)

சண்டாளர்கள் (இருவரும்)—

313. [3]பலவிதக் கொலைசிறைப் படுத்தல் ஒல்லையில்
தலைதனை வெட்டுதல் கழுவி லேற்றுதல்
வலமித னேதுவை மதித்து நம்மனம்
அலைவுறல் தன்பொருட் டாகும் அம்மவோ!

[4]விலகுங்கள்; ஐயன்மீர்! விலகுங்கள். இவ்வையன் சாருதத்தன்,

---

[1] இவ்வங்கத்தில் வசந்தசேனை உயிர்பிழைத்துத் திரும்பி வருதலால் சாருதத்தன் விடுதிபெறலும், ஆரியகன் அரசனாதலும், சருவிலகனது சேர்க்கையும் ஆகிய இவை முதலியன கூறப்படும்.

[2] கொலைக்களத்துக்குக் கொண்டுபோகப்படும் சாருதத்தனது வருகை முதலிற் கூறப்படுகின்றது.

[3] கொலைபுரிதல் சிறைப்படுத்தல் வெட்டுதல் கழுவேற்றல் ஆகிய இச்செயல்களில் வல்லமையுடையேம். வலம்-தன்மைப் பன்மை. இதன் ஏதுவை-இக்கொலையின் காரணத்தை. நமக்கு ஆற்றலும் அரசன் கட்டளையும் உண்மையால் நாம் சிந்திக்கவேண்டுவதென்? என்பது கருத்து.

[4] சாருதத்தனைக் காண விரும்பிக் கூடிய மக்களை நோக்கிக் கூறியது.

314. [1]படுகொலை வினைஞர்யாம் பற்றச் செங்நிறத்
தொடுமலர் அலரியைச் சூடி நெய்யற
அடைவினின் விளக்கொளி யவிதல் போன்றிவண்
வடுவுறீஇத் தனதொளி மாண்டு நிற்பனால்.

சாருதத்தன்—[துன்பத்தோடு]

315. [2]கண்ணீரான் மிகநனைந்து கடும்புழுதி
உறுப்பெல்லாங் கறையிற் சார
எண்ணீம மலர்மாலை யியைதரச்செஞ்
சந்தனச்சே றனை இ யீங்கே
நண்ணியவென் னுடலிதனைப் பலியுணவென்
றுண்ணுதற்கு நயந்து காக்கை
கண்ணுறீஇக் கடுங்குரலாற் கரைந்துகரைந்
தருகிலுறக் கருது மாலோ.

சண்டாளர்கள்—விலகுங்கள். ஐயன்மீர்! விலகுங்கள்.

---

[1] தொடுமலர் அலரி-தொடுக்கப்பட்ட மலர்களையுடைய அலரிமாலை. அடைவினின் என்னும் உவமையடையைப் பொருளுக்கும் கூட்டுக. அடைவினின்-முறையாக. வடு-கொலைக்குற்றம். ஒளிமாண்டு நிற்றற்குக் காரணம், கொலைவினைஞராகிய யாங்கள் பிடித்த அளவினனே இறத்தல் உறுதியெனத் துணிந்துகொண்டமையாம் என்பது.

[2] நனைந்து சார இயைதர அலைந்து நண்ணிய உடல் என்க. ஈமம்-சுடலை. ஈங்கு-சுடலைக்கண். பூசித்தற்குரிய மலரோடு இயைதலும் புழுதிபடிதலும் ஆடு கோழிகளின் புண்ணீரில் தோய்தலும் பலியுணவுக்கும் உளவென்பது அறியற்பாலது.

316. [1]சில முடைப்பெரியோ ராய செழும்புட்கள்
ஏலவுறுங் தக்கோனும் இத்தருவைக்—காலமெனும்
கோடரியின் கூர்நுதிகள் கூறு படுத்துதலே
நாடியுறக் காண்டலெவன் நன்று.

வா. அடே! சாருதத்த! வா.

சாருதத்தன்—[2]யான் இத்தகைய நிலைமையை அடைந்தேன். மக்களுடைய ஊழ்வினைப்பயன்கள் நினைவுக்கு அடங்காதனவன்றோ?

317. [3]அரிசிமாப் பொடிநனி படிந்த யாக்கையேன்
விரவுசெஞ் சாந்திஞல் விளங்த மைவிரல்

---

[1] ஏல உறும்-மிகத் தங்கும். காலம் ஈண்டு எல்லாப் பொருள்களும் அழிவெய்தற்குக் காரணமாக நிற்பது. நுதிகள்—மக்களின் கன்மபரிபாக வடிவமாகவுள்ள நுனிகள். எங்களையும் அரசனையும் தலைக்கீடாகக்கொண்டு காலமே கூறுபடுத்துகின்றது என்பது கருத்து. நுங்கட்குப் பற்றுக் கோடாகவுள்ளவனை இந்நிலையிற் காண்டல் நன்றன்று என்பார் "காண்டலெவன்" என்ருரென்க.

[2] எல்லோர்க்கும் புகலாகவுள்ளவன் என்பான் "யான்" எனவும், இப்போது புகலற்றவன் ஆயினேன் என்பான் "இத்தகைய நிலைமையை அடைந்தேன்" எனவும் கூறினுன்.

[3] மாப்பொடி-மாவாகிய பொடி; அல்லது பொடியை எள்ளுப்பொடி எனவும் கொள்ளலாம். யாக்கையேனுகிய என் உறுப்புக்களில் இலச்சினை சேர்தலாற் புருடனுயிருந்தும் பசுவின் நிலையை அடைந்தேன் என்பதாம். உடம்பில் அரிசி மாப் பொடியைப் பூசிச் செஞ்சந்தனத்தாற் பஞ்சாங்குல முத்திரையிடல் கொலைப்படற்கு உரியானது அலங்காரமென்ப. இலச்சினை-அடையாளம்; முத்திரை. தேவதைகளுக்குப் பலியாக வெட்டப்படும் பசுக்களுக்கும் இவ்வலங்காரம் உண்டென்ப. பசு ஈண்டு ஆடு முதலியன.

உருவுகொள் இலச்சினை யுறுப்பிற் சேர்தலாற்
புருடனைப் பசுநிலை பொருந்தப் பெற்றனன்.

[எதிரே பார்த்து] ஆ! [1]மனிதரின் ஏற்றத்தாழ்வு என்னே! [துன்பத்தோடு]

318. [2]யானுறு நிலையை நோக்கி
இந்நகர் மக்க ளெல்லாம்
மானுடப் பிறவி தீதென்
றுரைத்துமா ழாந்து கண்ணீர்
தானுற அழுதீங் கென்னைத்
தாங்குதற் காற்ற லின்றி
வானுறீஇ யின்பந் துய்க்க
என்றுரை வழங்கு கின்றார்.

சண்டாளர்கள்—விலகுங்கள்! ஐயன்மீர்! விலகுங்கள்! ஏன் பார்க்கின்றீர்கள்?

319. [3]நாடிகந்து வேந்தன் நடத்தலயல் நாண்மீன்கள்
பாடு பெயர்தல் பசுவினல்—பீடுயரும்

---

[1] நகரத்து நன்மக்கள் தன்பால் இரக்கமேற்கொண்டு வருந்துதலைக் கண்டு இவ்வாறு கூறினன். அவர் வருத்தம் பின்வருஞ் செய்யுளிற் காண்க. மக்கட்டன்மை பொதுவெனினும் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் உள்ள ஏற்றத்தாழ்வாகிய வேறுபாடு மிக்கதென்பது கருத்து.

[2] நின் நல்வினைகளின் பயன் இவ்வுலகத்திற் காணப்படாமையான் வானுற்று இன்பம் துய்க்க என்று வாழ்த்துவார் ஆயினர் என்க.

[3] நாடு-தன் நாடு. அயல் நடத்தல் என்க. அயல்-வேற்றிடம். நாண்மீன்கள்-நக்ஷத்திரங்கள். பாடுபெயர்தல்-இடம் பெயர்தல்; வீழ்தலுமாம். எனும் உவை நான்கும் காண்டற்கு ஒல்லாவாம் என இயைக்க.

நல்லோ யிரூர்க்கேடு நண்ணல் எனும்நான்கும்
ஒல்லாவாங் காண்டற் குவை.

சண்டாளருள் ஒருவன்—அடே! [1]ஆகிந்த! பார். பார்.

320. [2]இந்நகர்க் கணியென இலங்கு வோனிவன்
முன்னையூழ் வலியினாற் கொலையின் முற்றினன்
அன்னது கண்டுவிண் ணரற்று கின்றதோ
மின்முகி லிலாதிடி வீழு கின்றதோ.

இரண்டாமவன்—அடே! கோக!

321. விண்ணும் அழவில்லை மேகமின்றி யேயசனி
நண்ணி விழவுமிலை நங்கையராங்—கொண்மூ
இனம்பொழியுங் கண்ணீர் இடையரு தீங்கு
மனம்பதற வீழுமால் மற்று.

---

[1] ஆகிந்த! கோக! என்பன சண்டாளர்கள் ஒருவரை யொருவர் அழைக்கும் குறிப்பு மொழிகளாம்.

[2] மேன்மாளிகைகளில் உள்ள பெண்கள் சாருதத்தனது நிலைகண்டு அழுதலான், அவர்கள் கண்களினின்றும் நீரொழுக, அதனைக் கண்டு இவ்வாறு கூறினன். அந் நீரொழுக்கம் பருமை வெண்மை வெம்மை என்னும் இவற்றை உடைமையால் அது விண் அழுதலாகவும் வச்சிரப் படை உருகி வீழ்தலாகவும் தற்குறிப்பேற்றத்தாற் கூறப் பட்டது. இடி-வச்சிரப்படை. வீழ்தல் ஈண்டு உருகி வடிதலின்மேற்று. இடியின் வீழ்ச்சி அரசற்கு விளையுந் தீங்குகளுக்கு நிமித்தம் என்பதும் புலப்படுத்தவாறு.

322. [1]கொலையுறும் இவனையாங் கொணர்தல் கண்டுளம்
அலைவுறு மாந்தர்கள் அனைவ ரும்சூழீஇ
மலைவுற அழுதலின் வழிகண் ணீரினால்
நிலமுறு புழுதிமேல் எழுதல் நீங்கிற்றே.

சாருதத்தன்—[துன்பத்தோடு பார்த்து]

323. [2]அரமியத் துலவுமிவ் வணங்க னாரெழில்
விரவுசா ளரத்திறை முகம்வெ ளிப்படீஇத்
தருதுயர் உறுமெனைச் சாரு தத்தவென் று
உரைகொடு தூம்பென ஒழுக்கு வார்கணீர்.

சாண்டாளர்கள்—வா. அடே! சாருதத்த! வா. இது தான் பறைசாற்றுமிடம். பறையை [3]அடியுங்கள். குற்றத்தை வெளிப்படுத்திச் சொல்லுங்கள்.

சண்டாளர்கள் — கேளுங்கள். பெரியோர்களே! கேளுங்கள். இவன் வாணிகத்தொழிலாளனாகிய வினயதத்தனுடையபெயரன்; சாகரதத்தன் மகன்; மாட்சிமிக்க சாருதத்தன் எனும் பெயருடையன் ஆவான். தகாத செயலைச் செய்பவனாகிய இவன், வசந்தசேனை என்னும் கணிகையை இழிந்த பொருள் காரணமாகச் சனவழக்கமில்லாத புட்பகரண்டகம் என்னும் பழைய

---

[1] நிலத்துப் புழுதிகளை நனைக்கும் அத்துணைக் கண்ணீர் ஒழுகின என்னும் இது உயர்வுநவிற்சியணியாகும். இதனாற் சாருதத்தன் யாவர்க்கும் இனியன் என்பது புலப்படும்.

[2] இறை-சிறிது. வெளிப்படீஇ-வெளிப்படுத்து. உரைகொடு—சொல்லிக்கொண்டு.

[3] "அடியுங்கள்; சொல்லுங்கள்" என்பன அவ்வத்தொழிலாளரை நோக்கிக் கூறப்பட்டனவாம்.

தோட்டத்தை அடைவித்து அவளைக் கையினால் நெரித்துக்கொன்றான். அதுபற்றி இவன் களவுப்பொருளோடு பிடிக்கப்பட்டான். குற்றத்தைத் தானும் உடன்பட்டான். ஆதலிற் பாலகன் என்னும் அரசர் இவனைக் கொன்றுவிடும்படி எங்களுக்கு ஆணை தந்தார். இம்மைக்கும் மறுமைக்கும் மாறுபாடான இத்தகைய தகாத செயலைச் செய்யும் மற்றையோரையும் பாலகன் என்னும் அரசர் இப்படியே தண்டித்துவிடுவார்.

சாருதத்தன்—[துன்பத்தோடு தனக்குள்]

324. வாய்மைசால் மகம்பல வழிவழி யியற்றித்
தூய்மை சான் றெளிருமென் தொழுகுலம்
முன்னைநாள்
வேள்விச் சாலையிற் கோளிறீக் கடவுளைப்
பற்றிய மறைகளின் உற்றநல் லொலிகளாற்
களக்கமற் றுயர்ந்து விளக்கமுற் றுளதால்;
இற்றைநாள் அதுவே யிறத்தலாம் நிலையினைப்
பற்றிய என்தன் பாவமே லீட்டால்
தண்டம் வெளியிடு உந் தானத் திங்ஙன்
தகுதியின் மாக்கள் சாற்றிடப்
பறையொலி யொடுவெளிப் படுவதால் அந்தோ.[1]

---

[1] தண்டம் ஈண்டு அதற்குரிய குற்றத்தையுணர்த்தும். மறையொலிகளின் நிலையிற் பறையொலியும், வேள்விச்சாலையின் நிலையிற் குற்றத்தை வெளிப்படுத்துப் பறைசாற்றும் இடமும் அமைந்தன என்னும் இதனால், முன்னை நிலைக்கும் இற்றை நிலைக்கும் உள்ள பிறழ்ச்சி வேறுபாடு பெரிதென்பது கருத்து.

[[1]நடுக்கமுற்றுச் செவிகளைப்பொத்திக்கொண்டு]
ஆ! காதலீ! வசந்தசேனே!

325. [2]மறுவில்தண் கதிரொளி மானும் வெண்ணகைச்
செறியெழிற் பவளவாய்த் தெரிவை நின்னிதழ்
உறுசுவை யமுதநன் குண்ட யானெவன்
பிறர்வய முறீஇப்பழி விடமுண் பேனரோ.

சாண்டாளரிருவரும் — விலகுங்கள். ஐயன்மீர் விலகுங்கள்.

326. [3]நல்லோர் துயர்க்கடலை நாடிக் கடக்குமணை
எல்லா வுயர்குணமும் ஏற்றநிதி— எல்லார்ந்த
பொன்னுல் இயலாப்பூண் போகின்றதின்றேகாண்
என்னே நகரின் எழில்!

---

[1] நடுக்கம் வசந்தசேனையின் கொலையைப்பற்றிய செய்தியைக் கேட்கப்பொருமல் உண்டாயது.

[2] எவன்-எப்படி. "பிறர்வயத்தனும் -நிலையினின்று எங்ஙனம் பழிவிடம் உண்பேன்?" என்றதனுல், இதழமுது உண்ணுங்கால் தன்வயத்தனும் நிலையினின்று உண்டான் என்பது போதரும். நின்னைப் பிரிந்த எனக்கு உயிர்வாழ்தலில் விருப்பம் இன்று; பழியோ மிகவும் வருத்துகின்றது; அப்பழியும் நின்னைப்பற்றி நிகழ்ந்தது மிகவும் பொறுத்தற்கரிய துன்பந் தருவதாம் என்று வருந்தினுன் என்பது கருத்து.

[3] போகின்றதென்னும் பயனிலைக்கு அணை நிதி பூண் என்பவைகளைத் தனித்தனியே எழுவாயாக்குக. சாருதத்தன் பிரிவால், நல்லோர்க்குக் கேடும் நற்குணங்களுக்கு உறையுளின்மையும் நகர்க்கு அலங்காரமின்மையும் உண்டாயின வென்பது கருத்து.

327. [1]இவ்வுலகில் எல்லோரும் இன்புற் றிருப்பார்க்குச்
செவ்வே நலம்புரியச் சிந்திப்பார்—எவ்வத்து
உழலும் மனிதர்க் குதவி புரிவோர்
மொழியின் அரியரென முன்.

சாருதத்தன்—(நாற்புறமும் பார்த்து)

328. [2]உலைநுனி யான்முக மறைத்துக் காணுறார்
விலகியென் நண்பர்கள் விரைந்து செல்வரால்
நலமுடை யவர்க்கய லாரும் நண்பரே
அலமரு மவர்க்குற வாரு மில்லையே.

சண்டாளரிருவரும்—எல்லோரும் விலகினர். இராச வீதி சனங்கள் இல்லாததாயிற்று. கொலைப்படுதற்குரிய அடையாளங்களையுடைய இவனைக் [3]கொண்டு வாருங்கள்.

[சாருதத்தன் பெருமூச்செறிந்து "நேசமார் மைத்திரேய" என்னும் 298-ஆம் செய்யுளைக் கூறுகின்றான்.]

(வேட சாலையுள்)

---

[1] சிறந்த வள்ளலாகிய சாருதத்தனது துன்ப நிலையில் அவனைக்குறித்து இரக்கமுறுவார் யாருமிலர் ஆயினர் என்பது கருத்து.

[2] ஆடையான் முகத்தை மறைத்தல் துன்பநிலை பற்றிய செயலாம். நண்பர்கள் விலகிச் சேறற்குக் காரணம், கொடுங்கோலனாகிய அரசனை எதிர்க்கும் ஆற்றலின்மையும் தற்காப்பு விருப்பமும் ஆகும். அலமரல்--துன்புறுதல்.

[3] தொட்டுப்பிடித்தற்கு உரிய அதிகாரிகளை நோக்கிக் கூறியது.

[1]ஆ! தந்தையே! [2]ஆ அன்பு மிக்க நண்பரீர்!

சாருதத்தன்—(கேட்டு வருத்தத்துடன்) ஓ! புலைஞர் சாதித் தலைவ! யான் உன்னிடத்தினின்றும் ஒன்றைப் பெற விரும்புகின்றேன்.

சண்டாளர்—என்ன? [3]எங்கள் கையினின்று ஒன்றைப் பெற விரும்புகின்றாயா?

சாருதத்தன்—(தனக்குள்)[4] தீவினை நீங்குக. [5]இச் சண்டாளன், ஆராயாமற் செய்யும் தீயொழுக்கமுடையோனாகிய அரசன் பாலகனைப் போல்வான் அல்லன்.

---

[1] இஃது உரோகசேனன் கூற்று.

[2] இது மைத்திரேயன் கூற்று.

[3] நீ ஏற்றுக்கொள்வதானால் எங்களுக்குத் தடையின்று என்பது கருத்து.

[4] சண்டாளர் கையினின்றும் தான் ஒரு பொருள்பெற விரும்புவதாக அவர் எண்ணுதற்குக் காரணமாக நின்ற தீவினை நீங்குக என்பது கருத்து.

[5] பாலகன் என்னும் அரசன் உண்மையை யுணராமற் கொலை செய்யக் கட்டளையிட்டதனால் தீயொழுக்கமுடையன் ஆவான். இச்சண்டாளனோ பிறர்க்குக் கொடுக்கும் தகுதியில்லாத தன் தன்மையை யுணர்ந்தும் இவ்வாறு வினவினன். கொலையாளியாக நியமிக்கப்பட்டும், கொலைப்படற்குரிய எனது முன்னை ஒழுக்கத்தின் நம்பிக்கையால் என் விருப்பத்துக்கு இணங்குகின்றான். இதனால் இவன் அவனைப் போல்வான் அல்லன் என்பது கருத்து.

(வெளிப்படையில்) மறுமைப்பயன் குறித்துப் புதல்வன் முகத்தைக் காண்பதற்கு [1]வேண்டுகின்றேன்.

சண்டாளர்—அப்படியே செய்.

(வேடசாலையுள்)

ஆ! தந்தையே! ஆ! ஐய!

(சாருதத்தன் கேட்டுத் துன்பத்தோடு ஓ! "புலைஞர் சாதித்தலைவ!" (434-ஆம் பக்கம்) எனபது முதலியவற்றைச் சொல்லுகின்றான்.)

சண்டாளர்—ஓ! நகரத்தவர்களே! கணப்பொழுது வழிவிடுங்கள். இப்பெருமான் சாருதத்தன் தன்மகன் முகத்தைப் பார்க்கட்டும். (வேடசாலையை நோக்கி) ஐய! இதோ இதோ வருகின்றான். வா. அடே! குழந்தாய்! வா.

(அதன்பின் குழந்தையை அழைத்துக்கொண்டு விதூடகன் வருகின்றான்.)

விதூடகன்—குழந்தாய்! விரைந்து வா. விரைந்து வா, உன் தந்தையைக் கொல்லுதற்குக் கொண்டு போகின்றனர்.

குழந்தை—ஆ! தந்தையே! ஆ! ஐய!

விதூடகன்—ஆ! அன்பு மிக்க நண்பரீர்! யான் தங்களை [2]எங்கே காண்பேன்!

---

[1] இரத்தற்கு இரக்கப்படுவானது சாதிநிலை கருதத் தக்கதன்று; குணநிலையே கருதற்பாலது. ஆதலின் ஈண்டு "வேண்டுகின்றேன்" என்றான் என்க.

[2] உயிர்களின் வினைகளுக்குத் தக்கவாறு மறுமையிலும் இடம் வேறுபடும். ஆதலின் ஒன்றுகூடல் அரிதென்பது கருத்து.

சாருதத்தன்—(புதல்வனையும் நண்பனையும் பார்த்து) ஆ! மகனே! ஆ! நண்ப! (துன்புறுதலை அவி நயித்து) ஆ! துன்பம்.

329. [1]அம்மையாம் உலகினில் அளவில் காலமா
விம்மலுற் றுண்ணுநீர் வேட்கை விஞ்சுவேற்கு
இம்மகன் தருப்பணத் தியைக்கு நீருணு
அம்மவோ சிறிய!தாய் அமையுமாலரோ.

புதல்வன் பொருட்டு எதனைக் கொடுப்பேன்! (தன் உடம்பைப் பார்த்துப் பூணூலைக்கண்டு) ஆம். எனக்கு இஃது ஒன்று இருக்கின்றது.

330. [2]பொன்புனை மணியினுற் பொருந்த லின்றியே
அன்பமை யந்தணர்க் கணியி னுயது
தென்புல வாணர்க்குந் தேவர்க் குங்கடன்
இன்புற விறுத்தல்மற் றிதனின் ஆகுமால்.

(என்று பூணூலைக் கொடுக்கின்றான்.)

சண்டாளன்—வா. அடே! சாருதத்த! வா.

---

[1] புதல்வன் ஒருவனுதலானும் அவன்மாட்டு வைத்த அவா ஒழிவெய்தாமையானும் அவன் உதவும் நீர் தன் பேரவாவைப் போக்குதற்குப் போதியதாகாது என்பான் "நீருணு...சிறியதாய்மையும்" என்றான் என்க.

[2] இதனின்-இப் பூணூலினுல். தேவர் கடன் இறுக்குங் கால் இடத்தோளினும் தென்புலத்தார் கடன் இறுக்குங்கால் வலத்தோளினும் பூணூல் அணிதல் விதியாம். ஈரிடத்தும் அணிதலை முறையே உபவீதமெனவும் பிராசீனுவீதமெனவும் கூறுப.

இரண்டாமவன்—அடே! பெருமான் சாருதத்தனை பெருமை குறிக்கும் அடைமொழியின்றிப் பெயர் மாத்திரம் சொல்லி அழைக்கின்ருய். அடே! பார்.

331. [1]அல்லின் நண் பகலின் மற்றை
யாக்கத்தி னழிவி னென்றும்
வல்லவெத் தடையி ணுலு
மறிபடா வழிமேற் கொண்டு
பல்லவாங் குழுவிற் புக்குத்
தாயினைப் பற்றுங் கன்றிற்
புல்லுமால் விரைந்து தற்செய்
புருடனை நாடி யூழே!

332. [2]குன்றெனுங் குணத்தான் சீர்த்தி
குன்றிய தெனினு முன்னர்
நின்றுநாந் தலைவ ணங்க
னேரிதாங் கரிய பாம்பு

---

[1] ஊழைக் கடத்தற்கு ஒருவனுலும் இயலாதென்பது கருத்து. "பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று, வல்ல தாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தே தற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு." (நாலடியார் 11-ஆம் அதிகாரம். செய்யு–1.) என்பது ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

[2] கரிய பாம்பு-இராகு. இராகுவினுற் பற்றப்பட்ட சந்திரனை மக்கள் நீராடித் தருப்பணஞ் செய்தல் முதலிய வற்ருல் சிறப்புமுறையிற் போற்றுதல்போலக் கேடுற்றிருக்கும் ஒரு பெருந்தகையாளனை எல்லோரும் அவமதியாமற் பாராட்ட வேண்டும் என்பதாம்.

சென்றுற விழுங்கிற் றேனுந்
திங்களஞ் செல்வ னன்னை
நன்றுற வணங்கி வாழ்வர்
நானிலத் துள்ளா ரன்றே.

குழந்தை—அடே! அடே! சண்டாளர்களே! என் தந்தையை எங்கே கொண்டு போகின்றீர்கள்?

சாருதத்தன்—குழந்தாய்!

333. [1] அருந்துயரம் உளந்தாங்க அலரிமலர்
மாலைகள மணியிற் றூங்கப்
பொருந்துதிருத் தோள்சூலப் பொற்றைதாங்க
உயிர்தாங்கிப் பொலியுந் தேவர்
அருந்தவருள் வேள்வியிலே மறைமொழியிற்
கொலைப்படச்செல் லாடு போலப்
பெருந்துயரத் தொடுகொலைஞர் பின்தொடரக்
கொலைக்களத்தே பெயர்கின்றேனுல்.

சண்டாளன்—குழந்தாய்!

334. [2] சண்டாளர் தங்குலத்தில்
தாம்பிறந்தே மாயினுமுன்

---

[1] துயரம்–புகழ்கெட வரும் பழி பற்றியது. தோளிற் சூலந்தாங்குதல் கொலைக்குரிய தான்இவர்தற்பொருட்டாம். சூலம் ஈண்டுக் கழுவையுணர்த்தும்.

[2] முன் பிறந்தேம் ஆயினும் என இயைக்க. எங்களுக்குப் பிறப்புப்பற்றி நேர்ந்த சண்டாளத்தன்மை இப்பிறப்பளவினும்; மேற்றொடர்வதின்று. கன்மம்பற்றி நேரும் சண்டாளத்தன்மை பல பிறப்பினுந் தொடர்வதாகும். ஆதலின் கன்மசண்டாளரை நோக்க, யாங்கள் சண்டாளரல்லேம் என்றார் என்பதாம். பெருமையுடையாரைப் பேதுறுக்குந்

சண்டாளர் அல்லேம்
தகவுநனி—கொண்ட
பெருமையுடையாரைப்
பேதுறுக்குந் தீயர்
கருமமுறு சண்டாளர் காண்.

குழந்தை—அப்படியானால் என் தந்தையை ஏன் கொல்லுகின்றீர்கள்?

சண்டாளன்—நிறைநாட்செல்வ! இந்நிகழ்ச்சியில் அரசனுடைய ஆணையே குற்றம் உடையதாகும். [1]யாங்கள் பிழையுடையேம் அல்லேம்.

குழந்தை—என்னைக் கொல்லுங்கள். என் தந்தையை விடுங்கள்.

சண்டாளன்—சிரஞ்சீவி! குழந்தாய்! இப்படிச் சொல்லுகின்ற நீ என்னிடத்தினின்றும் நீங்கி [2]நீடு வாழ்க.

சாருதத்தன்—[கண்ணீரோடு மகன் கழுத்தைத் தழுவிக்கொண்டு]

---

தீயர் கன்மசண்டாளராவர் என்றதனால், சகாரன் பாலகன் முதலியோர் அன்னர் ஆவர் என்பது குறிப்பிற் புலப்படுத்தவாறு.

[1] அரசன் கட்டளையைக் கடவாது செய்தல் எங்கள் கடமையாதலின் "பிழையுடையேம் அல்லேம்" என்றான்.

[2] உனக்கு இத்தகைய கெடுநிலை ஒருபொழுதும் நிகழ வேண்டா என்பது கருத்து.

335. [1]அருமருந் தன்ன திருமகன் உடலம்
குழைதர உவந்து தழுவுமிப் பேறே
சந்தனம் உசீரஞ் சார்தரா தியைந்து
நெஞ்சிற் பூச நிலவுங் கலவையாம்;
[2]செல்வர் வறியவ ரென்றிரு வோர்க்கும்
அல்கா தொத்த அன்பின் சாரமாம்.

["அருந்துயர முளந்தாங்க" என்னும் 333 – ஆம் செய்யுளை மீண்டுங் கூறிப் பின்னர், பார்த்துத் தனக்குள் "கலைநுனியான் முக மறைத்து" என்னும் 328-ஆம் செய்யுளையும் மீண்டும் கூறுகின்றான்.]

**விதூடகன்**—ஓ! இனியமுகமுடையீர்! அன்புமிக்க நண்பராகிய சாருதத்தரை விட்டுவிடுங்கள். என்னைக் கொல்லுங்கள்.

சாருதத்தன்—தீவினை ஒழிக [பார்த்துத் தனக்குள்] இப்பொழுது அறிகின்றேன். ["நலமுடையவர்க் கயலாரும்" என்னும் 328-ஆம் செய்யுளின் பிற்பகுதியைக் கூறுகின்றான். (வெளிப்படையில்) "அரமியத்

---

[1] தழுவும் இப்பேறே கலவையாமெனவும் சாரமாமெனவும் முடிக்க. நெஞ்சு ஈண்டு மார்பையும் உள்ளத்தையும் உணர்த்தும். உசீரம்-விலாமிச்சைவேர். சந்தனம் உசீரம் இவற்றாலாகிய பூச்சுப் பொருளளவிற்கேற்ப உடலின்புறத்திற்கு இன்பஞ் செய்வதாம். புதல்வனைத் தழுவுதல் உள்ளத்தைக் குளிர்வித்து நல்லின்பஞ் செய்வதாம்.

[2] செல்வர் வறியவர் என்னும் இரு திறத்தினர்க்கும் ஏற்றத் தாழ்வின்றி ஒத்து நிலவும் அன்பினது சாரமும் ஆம் என்க.

துலவும்'' என்னும் 323-ஆம் செய்யுளை மீண்டுங் கூறுகின்ருன்.]

சண்டாளன்—விலகுங்கள். ஐயன்மீர்! விலகுங்கள்.

336. [1]பழிவயப் பட்டுயிர் வாழ்க்கைப் பற்றிலான்
மொழிதரு கயிறறக் கிணற்றின் மூழ்கிய
வழுவில்பொற் குடநிகர் வள்ளல் தன்னையிவ்
விழிதரு நிலையினிற் காண்டல் என்னையோ.

[சாருதத்தன் துன்பத்தோடு ''மறுவில்தண் கதிரொளி'' என்னும் 325-ஆம் செய்யுளை மீண்டுங் கூறுகின்ருன்.]

மற்ருெருவன்—அடே! மீண்டும் பறைசாற்று.

(சண்டாளன் அங்ஙனமே செய்கின்ருன்.)

சாருதத்தன்—

337. [2]பொருளற மெலிந்தே யிழிதரு நிலையைப்
பொருந்தினேன் இதன்பய ஞக
மருளுறி இ யுயிர்க்கும் இறுதியாம் நிலைமை
வாய்க்கவும் பெற்றனன் அன்றித்

---

[1] கிணற்றில் மூழ்கிய பொற்குடம் உடையாமல் உரு மறைந்து கிடத்தல்போலச் சாருதத்தன் தன் உயர்குணங் களினின்றும் பிறழாமற் கேடெய்தியுள்ளான் என்பதாம். பொற்குடம் என்றதனுல் மட்குடம் வீழின் உடைந்துவிடும் என்பதும் அதுபோற் கயவர் கேடெய்திற் குணப்பிறழ்ச்சி எய்துவர் என்பதும் போதரும்.

[2] பொருளறமெலிதல், இழிதருநிலையைப் பொருந்துதல், உயிர்க்கு இறுதிநிலை வாய்க்கப்பெறுதல் என்னும் இவற்

திருமிகு வசந்த சேனையை யானே
செகுத்தனன் என்னுமித் தீய
உரைசெவிப் படவீங் கொலிபறை முழக்கம்
உளத்தினைக் கவற்றுமா லந்தோ.

[அதன்பின் சகாரனது இல்லத்து மேனிலத்தில் இருந்த வண்ணமாக விலங்கிடப்பட்ட தாவரகன் என்னும் சேடன் வருகின்றான்.]

தாவரகன்—[பறையொலித்துக் கூறும் சொற்களைக் கேட்டு மிக்க வருத்தத்தோடு] ஒரு தீங்குமில்லாத சாருதத்தர் கொலை செய்யப்படுகின்றாரோ? என்னை என் தலைவனாகிய சகாரன் விலங்கிட்டுச் [1]சிறைப்படுத்தினான். நிற்க. உரக்கக் கத்துகின்றேன். 'கேளுங்கள். ஐயன்மீர்! கேளுங்கள். இப்பொழுது இஃது உண்மை. பாவியாகிய யான் வண்டிமாற்றத்தால் புட்பகரண்டகம் என்னும் பழைய பூந்தோட்டத்திற்கு வசந்தசேனையைக் கொண்டுசேர்த்தேன். பின்னர் என் தலைவன் சகாரன் வசந்தசேனையை நோக்கி "என்னை விரும்புகின்றாயல்லை" என்று சொல்லி அவளைத் தன் கையால் நெரித்துக் கொன்றுவிட்டான். இப்பெருமான் சாருதத்தர் கொல்லவில்லை.' என் சொற்களை மிகுதூரமாக இருத்தலால் ஒருவரும் கேட்கின்றார்களில்லையே!

---

றினும், காதலியாகிய வசந்தசேனையை யானே கொன்றதாகச் சாற்றப்படும் பறையொலி என்னுள்ளத்தை மிகவும் துன்புறுத்துகின்றது என்பதாம்.

[1] சிறைப்படுத்தியதால் உண்மையை வெளிப்படுத்திச் சாருதத்தரைக் காத்தற்கு இயலாதவனான் ஆகின்றேன் என்பது கருத்து.

ஆதலால் என்ன செய்வேன்! என் உடம்பைக் கீழே வீழ்த்துகின்றேன். [நினைவுற்று] இப்படிச் செய்வேன் ஆயின் பெருமான் சாருதத்தர் கொல்லப்படமாட்டார். நிற்க. இம்மேனிலத்து வழியிடத்தினின்றும் இப் பழமையான சாளரத்தின் வழியாக என் உடம்பைக் கீழே வீழ்த்துகின்றேன். யான் இறப்பது நல்லதே. நற் குலத்துத் தோன்றிய நல்லோராகிய பறவைகள் வாழ் தற்குரிய நன்மரமாகிய இப்பெருமான் சாருதத்தர் இறப்பது நல்லதன்று. யான் இங்ஙனம் இறப்பேனு யின் மறுமையின்பத்தை யடைவேன். [என்று தன் உடலைக் கீழே வீழ்த்துகின்றான்.] ஆ! ஆ! நான் இறக்க வில்லையே! எனக்குத்[1] தண்டத்தோடு இயைத்துப் பிணைக் கப்பட்ட விலங்கும் முறிந்துபோயிற்று. ஆதலின் சண் டாளன் பறைசாற்றிக் கூறும் இடத்தைத் தேடிச் செல் கின்றேன். [அவ்விடத்தைக் கண்டு அருகிற்சென்று] ஆ! ஆ! சண்டாளர்களே! வழி வேண்டும். வழி வேண்டும்.

சண்டாளர்கள்—அடே! யார் வழி வேண்டுகின் றவன்?

[சேடன் "கேளுங்கள் ஐயன்மீர்! கேளுங்கள்." (பக்கம்-442) என்று தொடங்கி முன்சொல்லியவற்றைக் கூறுகின்றான்.]

சாருதத்தன்—ஆ! யான்,

---

[1] தண்டமாவது கால்களை விரும்பியவாறு மடக்குதற் கும் நீட்டுதற்கும் இயலாத வண்ணம் குறுக்காக அமைக்கப் படுவது.

338. காலன்கைப் பாசத்தாற் கட்டுண்டு துன்புறூஉம்
வேலைதனின் நீரறவின் மெய்வாடிச்—[1]சால்புதவிர்
பைங்கூழ் செழிக்கப் பயன்செய் கருமுகில்போல்
இங்குற்ருன் யாவன் இவன்?

ஓ! ஓ! நீங்கள் கேட்டீர்களா!

339. [2]இறப்பதற் கஞ்சுவே னல்லன் இன்புகழ்
மறப்பழி யாற்கெடல் வாதை செய்யுமால்;
திறப்படுந் தூய்மையில் திறம்ப லின்றியான்
இறப்பது மகப்பெறும் இன்ப மாகுமால்.

340. [3]முற்பகைமை யில்லான் மொழியுஞ் சிறுமதியான்
அற்பன் மரபொழுக்கமற்றுநின்ருன்-இப்பொழுது
மாசு படுத்தியெனை வாட்டினுன் வன்னஞ்சு
பூசுநுதி யம்பிற் புகுந்து.

சண்டாளர்கள்—தாவரக! உண்மையாகச் சொல்லுகின்ருயா?

சேடன்—உண்மையே. யார்க்கும் இச் செய்தியைச் சொல்லக்கூடாதென்றுகூறித் தன் இல்லத்தின் மேனிலத்து வழியில் என்னையும் தண்டத்தோடியைந்த விலங்கினுற் பிணித்துவைத்தான்.

---

[1] சால்பு-குணம்.

[2] யான் தூய்மையினின்றும் திறம்பவில்லை என்னும் உண்மையை உலகம் அறியுமாயின், பொய்யாக ஏறிடப்பட்ட குற்றத்தோடு உயிர் வாழ்தலினும் இறத்தல் இன்பந் தருவதாகும் என்றவாறும்.

[3] அற்பன்-சகாரன். இல்லானும் மதியானும் அற்றுநின்ருனுமாகிய அற்பன் என்க. அன்பின்-இன் ஐந்தாவது உவமப்பொருளில் வந்தது.

